கழக வெளியீடு: சுடுஅ

# செங்கோல்

[ நாடகம் ]



பெருமழைப்புலவர்,
பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள்
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

நம் தமிழ்மொழி இயல் இசை நாடகம் என்னும் முத்திறத்தால் பண்டுதொட்டே வளர்ந்துவரும் செம்மொழி. அம்முறையில் 'செங்கோல்' என்னும் இந்நூல் முத்தமிழில் ஒன்றாம் நாடகமாகும்.

இந் நாடகம், 'அரைசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற்றாவதூஉம், உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்' என்னும் இளங்கோவடிகளின் உண்மை மொழிக்கு ஏற்றவாறு அமைந்துள்ளது. இதன்கண் வரும் அரசி மங்கம்மாளின் செங்கோன்மை மாறாத் திறப்பாடும், ஆதிரை நல்லாளின் அருங் கற்புமாண்பும் பெண்மணிகளின ஏற்றத்திற்கு மாற்றுரைகற்போல் விளங்குகின்றன. இத்தகைய நாடகங்களை நடித்து நாட்டிற்பரப்பினால் ஆடவரும், பெண்டிரும் அறமுறை கற்புப் பொற்பு வீரம் முதலிய தமிழர்பண்பைத் தளிர்ப்பித்துத் தழைத்தோங்கச் செய்ததாகும்.

இவ் அரிய நாடகநூலினை செப்பமான நன்முறையில் பெருமழைப்புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனார் அவர்கள் ஆக்கி உதவியுள்ளார்கள். இதனைப் பள்ளி மாணவர்க்குப் பாடமாகவைத்து நடத்துவதற்கேற்ப நன்முறையில் செப்பஞ்செய்து வெளியிட்டுள்ளோம். தமிழுலகம் வாங்கிக்கற்று நாட்டில் வளர்த்து நற்பயனெய்துமென விழைகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

யான் தொடக்கப்பள்ளியில் மாணவனாக இருந்தகாலத்தே, அப் பள்ளியிற் பாடமாக வைக்கப்பட்டிருந்த ஒரு சிறு வரலாற்று நூலின்கண், இராணி மங்கம்மாளைப் பற்றிப் படிக்க நேர்ந்தபொழுது, “**இராணி மங்கம்மாள், தன் அரசியலில் உயரிய பதவி ஏற்றிருந்த தன் அருமைத் தம்பியை, அவன், ஒரு போர் மறவனின் அழகிய மனைவியைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டு அம்மறவன் பாற் பொய்க்குற்றம் ஒன்றனை ஏற்றி அவனைக் கொலைத்தண்டனை விதிக்க முயன்றான்; என்பதனை, அம்மறவன் மனைவியால் அறிந்து மலையுச்சியினின்றும் கீழே உருட்டிக் கொன்று முறை செய்தாள்**” என்று படித்தேன். அந்நிகழ்ச்சியை ஓதியபொழுது அவ்வரசியாரின் செங்கோன்மை “ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன், அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்து”க் கறவை முறை செய்த காவலனின் செங்கோன்மையோடு ஒத்தசிறப்பிற்றாய் எனக்குத் தோன்றியது. ஆதலால், இவ்விராணியாரின் இவ்வருஞ் செயலை விதந்தெடுத்து ஒரு நூலாக யாத்தல் வேண்டும் என்று என் இளமனத்தே அப்பொழுதே ஓர் எண்ணம் தோன்றிற்று.

பல ஆண்டுகள் சென்றன. அவ்வரலாற்றை நூலாக எழுதி வெளியிடற்குரிய செவ்வி நேர்ந்திலது. ஏறக்குறைய இரண்டாண்டுகட்கு முன்னர், கீழைப் பெருமழை என்னும் ஊரின்கண் ஆசிரியத் தொழில் நடத்துவோரும், என் அருமை நண்பர்களுமாகிய உயர்திரு. நா. இராமச்சந்திரன் அவர்களும், சா. பெரியசாமி அவர்களும் என்பால்வந்து, தம் மாணவர் நடித்தற் கேற்றதாக ஒரு புதிய கதை வரைந்து தருதல்வேண்டும் என்றும், அது தானும், முழுதும் புனைந்துரையாகாமல் வரலாற்றுத் தொடர்புடையதாதல் வேண்டும் என்றும் வேண்டினர். அப்பொழுது, பழைய இராணி மங்கம்மாளின் செங்கோன்மைச் சிறப்பு என் நினைவில் எழுந்தமையால், அவர்கட்கு இந் நாடகத்தைச் சின்னாளில் வரைந்து கொடுத்தேன்.

பின்னர் இந்நாடகத்தைக் கண்ணுற்ற நண்பர் பலர், இதனைப் பாராட்டிக் கூறி, இதனை நூல்வடிவிற் கொணாதல் நன்றென்று எனக்குப் பன்முறையும் அறிவுறுத்தலாயினர். இந்நூலைப் பின்

ஒருநாள், என் நண்பர், கருப்பக்கிளர், திரு. சு. அ. இராமசாமிப் புலவர்க்குக் காட்டினேன். அவரும் இதனைப் பாராட்டி, இதனை மீண்டும் இதன்கண்ணுள்ள கிராமியச சொற்களை அகற்றி செந் தமிழ்ச சொல்லாலேயே எழுதின், இஃது உயர்தர வகுப்பு மாண வர்கள் பயிலற்கும் ஏற்றதாம் என்றும், அவ்வாறு எழுதி இதனைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் பார்வைக்கு அனுப்புவீர்களாயின் அவர்கள் இதனைத் தம் கழக வெளியீடாக நூல் வடிவிற் கொண்டுவரக்கூடும் என்றும், எனக்கு அறிவுறுத்தினர். அவ்வாறே யான் மீண்டும் இதனை இலக்கிய நடையிலே வரைந்து, பிள்ளை அவர்கள் மேலான பார்வைக்கு அனுப்பினேன்.

சின்னாட் சென்று, யான் கழக ஆட்சியாளர் அவர்களை நேரிற் கண்டபொழுது, அவர் அன்புடனும் ஆர்வத்துடனும் இந் நூலை ஏற்றுக்கொண்டு, இதனை அச்சிட்டு நூலாக்குவதாக வாக்களித் தார்கள். அவர்கள் வாக்களித்தபடியே இன்று இந்நாடகம் நூல் வடிவில் வெளிவருமாறு செய்தார்கள்.

எனவே, இது நூலாதற்குக் காரணமாயிருந்த என் நண்பர் கட்கும், இதனை நூலாக்கி வெளியிட்ட திரு. வ. சு. பிள்ளையவர் கட்கும் எனது தாழ்ந்த நன்றி என்றென்றும் உரியதாகும்.

இனி, இந்நாடக நூல்பற்றி யான் ஏதும் கூறுதற்கில்லை. இதனை, "இனிய தமிழ் நடையுடையதென்றும், இதன்கண் நகை முதலிய எண்வகைச் சுவையும் உள்ளன என்றும், தமிழ் பயிலும் உயர்வகுப்பு மாணவர் பயிறற்கு ஏற்றதென்றும், பலர் இந்நூல் பற்றி என்னிடம் புகழ்ந்ததுண்டு. அங்ஙனம் புகழ்ந்தோரெல்லாம் என்னை நன்கறிந்த என் நண்பர்களே ஆதலின், அவர் என்பால் உள்ள அன்பு மிகுதியால், இதன்பால் உள்ள குற்றங் காணமாட்டா ராய் அங்ஙனம் புகழ்ந்தனர் ஆதலும் கூடும். உண்மையில், இந்நூல் மதித்தற்குரிய நூல் என்பதனை, இனி அறிவுசான்ற தமிழுலகம் இதனை மதித்தலறிந்தே யான் தெளிதல் வேண்டும். என்னை இத் தொண்டில் ஊக்கி, இதனை நூல்வடிவிற்றாகவும் ஆக்கி, அளித்த இறைவன் திருவடிகளை யான் எப்பொழுதும் இறைஞ்சுவல்.

மேலைப்பெருமழை
1—9—1953.

ஆசிரியன்
பொ. வே. சோமசுந்தரன்.

# செங்கோல்—கதைச்சுருக்கம்

திருச்சிராப்பள்ளியைத் தலைநகராகக் கொண்டு செங்கோ லோச்சிய இராணி மங்கம்மாள் என்னும் பேரரசியார் தன் தம்பி யாகிய நரேந்திரன் என்பவனைத் தன்னாட்டின் ஒரு பகுதிக்குச் சிற்றரசனாக்கி வைத்தனர். நரேந்திரன் கழிபெருங் காமுகனாவான். அவன் தன்னிளம்பருவத்து நண்பனான முசலன் என்பவனைத் தனக்கு அமைச்சனாக்கிக் கொண்டான்.

தான் சிற்றரசனும் சிறந்த பதவி ஏற்றுக்கொண்ட நாள் தொடங்கி, தன்னாட்சிக் கீழமைந்த அரசியற் கருவூலத்துப் பொருள் முழுவதும் காமக் களியாட்டத்தே செலவிட்டான். இந் நரேந்திர மன்னனின் காமவிளையாட்டிற்குச் சித்திராபதி என்னும், கிழக் கணிகை பெரிதும் உதவி செய்து வந்தாள்.

நரேந்திரன், திண்டுக்கல் நகரத்தைத் தலைநகராகக் கொண்ட பகுதியை ஆட்சிசெய்து வந்தான். அவன் பதவி ஏற்ற முதல் ஆண்டில் நிகழ்ந்த விசயதசமி விழாவில், ஊர்வலம் நிகழ்ந்த பொழுது, அந்நகரத்தே தண்டத்தலைவனாகப் பணியாற்றிவந்த வீரசிம்மன் என்பான் மனைவியும், பேரழகுபடைத்தவளுமாகிய, ஆதிரை என்னும் நங்கையைக் கண்ணுற்றான். அவளது ஒப்பற்ற பேரழகு அக் காமுகன் உளம் முழுதும் கொள்ளைகொண்டது.

ஆதிரையைப் பெறவேண்டிக் கிழக்கணிகை சித்திராபதியைத் துணைபுரியும்படி வேண்டினன். அத் தொழிலிற் கைதேர்ந்தவளா கிய அக்கணிகையும, குலப்பிறப்பாட்டியும் திண்ணிய கற்புடைய வளுமாகிய ஆதிரையை நரேந்திரமன்னன்பாற் கொணர்தற் பொருட்டு, ஒரு தவமுதுமகள்போல் வேடம் புனைந்துகொண்டு சென்று அவள் இல்லத்தே கண்டாள்.

" அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும் துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் " பிறவுமாகிய மனையறம் ஓம்பும மாணபுமிக்க ஆதிரை தம்மில்லத் திற்கு வந்த தவமுதாட்டியைப் பெரிதும் அன்புடன் வரவேற்று உண்டி முதலியன வழங்கிப் போற்றினள். ஆதிரையின் நற்குண நற்செயலைக்கண்டு திகைப்புற்ற சித்திராபதி, அவளைத் தன் வயப் படுத்தவேண்டுமெனிற் சில நாட்களேனும் அவளோடளவளா

யிருந்து அவள் மனத்தை பேதுறச் செயல்வேண்டும் என்று கருதினள். அவ்வாறு, அவளுடன் அளவளாவுதற்கு வீரசிம்மன் அடிக்கடி வீட்டிற்கு வருதல் பெருந்தடையாயிருந்தது; ஒருகால் வீரசிம்மன் தன்னையும், தன் வஞ்சகததையும் அறிந்துவிடுவானோ என்று அஞ்சினள்.

ஆதலின், சித்திராபதி மன்னன் நரேந்திரனிடம் சென்று, இவ்விடையூற்றை எடுத்துக்கூறிச சில நாட்களேனும் வீரசிம்மனே அயலிடம் போக்கும்படி வேண்டினள். மன்னனும் அதற்கிணங்கினன். அமைச்சனகிய முசலன் தம் நாட்டின் வடதிசை எல்லேக் கண், பகைவர் வழக்கமுளதாகத் தான் ஒற்றரால் அறிந்ததாகவும், அவர் வருகையைக் கணகாணித்தற் பொருட்டு வீரசிம்மன் சில வீரருடன் தனது மறுகட்டளை பெறுந்துணேயும் அவ்வெல்லேப் புறத்துள்ள காட்டிலே தங்கிக் காவல் செய்தல்வேணடும் என்றும் வீரசிம்மனுக்கு ஒரு பொய்க் காரணங்காட்டிக் கட்டளேயிட்டான். அக் கட்டளேக்கிணங்கி வீரசிம்மன் ஒரு சிறு படையுடன் அவ் வெல்லேப்புறக் காட்டிற்கு ஏகினன்.

இவ்வாற்ருல், இலலதழ்த தனித்துறைந்த ஆதிரையுடன் அளவளாவ இடம் பெற்ற சிததிராபதி, அவளில்லத்திற் சென்று ஆதிரையின் அறிவையும் அழகையும் புகழ்ந்து பேசித் தான் நரேந்திரமன்னன் உதவி பெற்று நடத்த முயல்கின்ற "**தமிழ்நாட்டு மகளிர் முன்னேற்றக் கழகத்திற்கு,**" ஆதிரையைத் தலைமைப்பதவி ஏற்கும்படியும், அந்நாட்டின் மகளிர்பகுதிக்கு அமைச்சர் பதவி ஏற்கும்படியும், அப்பதவிகளானே அவள் எயதும் சிறப்புக்களே எடுத்துக்காட்டி வேண்டுவாளாயினள்.

குலப்பிறப்பாட்டியாகிய ஆதிரைக்குச சித்திராபதி கூறியவை பொருளற்றனவாகத் தோன்றின. ஆதலால் சிததிராபதியின் பேசசுக்கள் ஒருசிறிதும் பயன் அளிப்பனவாகவில்லே. ஆதிரை, "அடிகாள் அச செயல்கள் எம்மனோர்க்கு ஏற்றதன்று" எனக் கூறிவிட்டாள்.

கழகத்தலேமை, அமைச்சர்பதவி, பொருட்பேறு, புகழுடைமை முதலியவற்ருல், ஆதிரையின் திண்ணிய உள்ளம் பேதுருமை கண்ட சித்திராபதி, இனி இவட்கு மாபெருந் துயரத்தை விளேத்து, அத்துயரத் தீயில் வேகும்படிசெய்து அதன்பின்னர்த் தன் சொல்

வழி நடந்தாலன்றி இத்துயரத்திற்கு முடிவில்லை என்பதை ஆதிரை அறியும்படி செய்து, அவளைத் தன்வழிப்படுத்தக் கருதினுள்.

சித்திராபதியின் தூண்டுதலாலே, நரேந்திரனும் முசலனும் தம்முள் ஆராய்ந்து, வடவெல்லைக்கண் காவல்புரியச்சென்ற வீரசிம்மன் தம் பகைமன்னனுடன் உறவுபூண்டு நாட்டை அவ்வரசனுக்கு அடிப்படுத்த முயன்ருன் என்னுமொரு பழியை வீரசிம்மன் மேலிட்டு, அவனைச் சிறையிடும்படி அழும்பில்வேள் என்னும் படைத்தலைவனுக்குக் கட்டளையிட்டனர். அழும்பில்வேளும் இது பொய் என நன்கறிந்தும், தன் பதவியைப் பேணும்பொருட்டும், இவ்வழி அரசன் அருளைப் பெறும்பொருட்டும், ஒத்துழைப்பானுய் ஒருபடையுடன் சென்று வடதிசைக்கண் காட்டகத்திருந்த வீரசிம்மனை விலங்கிடத் தொடங்குமளவில், ஆங்குப் போர்மறவர்கள் ஒத்துழையாமையால் ஒரு குழப்பம் உண்டாயிற்று. பின்னர், வீரசிம்மன் கட்டளைக்கிணங்குதலே தம் கடமை என்று அம்மறவர்க்கறிவுறுத்தி, அவரை அமைதியுடன் இருக்கும்படி செய்து, சிறையிடைப்புகுந்தான். அவன் ஆருயிர் நண்பனுன போரப்புலி என்பவனும் வீரசிம்மனேடு சிறைக்கோட்டம் புகுந்தான்.

திண்டுக்கல் நகரத்தை ஆட்சிசெய்த பழைய மன்னர்களாலும், அந்நகரத்து மக்களாலும் நன்கு மதிக்கப்பட்ட பழங்குடித் தோன்றலாவான் வீரசிம்மன். அவனைக் காரணமின்றிச் சிறையிட்ட செயல் அந்நகரத்துக் குடிகளின் சினத்தைப் பெரிதும தூண்டிவிட்டது. நகரமுழுதும் கடல்போலச் சினத்தாற் பொங்கி எழுந்தது. நரேந்திரன், அரண்மனையிற் புகுந்து அவனை எதிர்க்கவும் குடிமக்கள் துணிந்து குழாங்கொண்டு அரண்மனைவாயிலை எய்தினர். அப்போது, நரேந்திரன் சினந்து அக்குடிமக்களை ஒறுத்தடக்கும்படி அழும்பில்வேளுக்குக் கட்டளையிட்டான். அஙஙனம் செயதல் தமக்கே கேடுதரும் என்று கண்ட அமைச்சன், படைததலைவனுடன் தானே அக் கூட்டத்திற்கு எதிர்சென்று, தந்திரமாகப் பேசி வீரசிம்மனைச் சிறையிட்டமை நீதியே என்று குடிமக்கள் நம்பும்படி செய்து, அவர்கள் அமைதியுடன் மீளும்படி செய்துவிட்டனன்.

ஆதிரை தன்னில்லத்தை விட்டு வெளியேருதபடியும், அவள் இல்லத்தே உறவினா வந்து நிறைந்துவிடாதபடியும், காவல் செய்யப் பரிமேலழகன் என்னும் ஒரு படைமறவனைச் சில வீரருடன்

ஏவினர். பரிமேலழகன் சிறந்த குணம் படைத்தவன். ஆதிரையின் உசாத்துணைத் தோழியாகிய ஐயை என்பாளின் தந்தையுமாவான். ஆதிரைக்குற்ற துயரத்திற்குப் பெரிதும் இரங்கிப் பரிமேலழகனும், ஐயையும் அவ்வப்போது ஆறுதல் கூறித் தேற்றிவந்தனர். ஆதிரையின் துன்ப நெருப்பை மிகுக்கும் பொருட்டு வீரசிம்மனைக் குற்றவாளியாக்கிக் கொலைத்தண்டனை விதிக்க நரேந்திரன் முசலன் முதலியோர் முயன்றனர்.

திண்டுக்கல் நகரத்தே அறமன்றத்தலைவராய்ப் பணியாற்றி வந்த அம்பலவாணர் என்பவர், நேர்மைதவறாத சான்றோர். அவர் வீரசிம்மன் வழக்கை ஆராய்ந்து, இது பொய்வழக்கெனக் கண்டு வீரசிம்மனை விடுதலைசெய்ய முன்வந்தார். இதனை அறிந்த முசலன், இரவில் அம்பலவாணர் இல்லத்தை அடைந்து வீரசிம்மனுக்குக் கொலைத்தண்டனை விதிக்குமாறு கூறினான். அவர் அத் தீச் செயலுக்கிணங்காமையால் பதவியில் நின்று விலக்கப்பட்டார். பின்னர் முசலன் தன்னோடொத்த கயவன் சாத்தன் என்பவனை அறமன்றத் தலைவனாக்கி, அவனைக்கொண்டு வழக்கேடுகளைப் பொய்யாக நன்கு புனைந்து, வீரசிம்மனைக் கொலைத்தண்டனைக்குள்ளாக்கி முடிவு வரைந்து, அவ்வேடுகளை இராணி மங்கமமாளின் கையொப்பம் பெறும்பொருட்டுத் திருச்சிராப்பள்ளிக்குயத்து, இந் நிகழ்ச்சியைப் பிறர் அறியாதபடி மறைத்துப் போற்றிவந்தான்.

இதற்கிடையில், சித்திராபதி துயரக்கடலில் வீழ்ந்துகிடக்கும் ஆதிரையைச சென்று கண்டு, அவள் துயரந் தீரும்பொருட்டும், அவள் கணவன் கொலைப்படாமைப் பொருட்டும், தன்னைப் பின் பற்றிவந்து அரசனைக்கண்டு இரக்குமபடி வேண்டினாள். ஆதிரை "அது தனக்குத் தகவன்றெ"ன அரசனைக்காண மறுததுவிட்டாள்.

சித்திராபதியால், வீரசிம்மன் கொலைத்தண்டனை விதிக்கப்பட்ட செய்தியை அறிந்த பரிமேலழகன், அன்றிரவே தன் மகள் ஐயையுடன் ஆதிரையைத் திருச்சிராப்பள்ளிக்குப் போக்கிப் பேரரசியாரிடம் முறையிடச் செய்தான். ஆரிருளில வழிநடந்த அம்மகளிர்கள் வழியில் வீரசிம்மன் கொலைத தண்டனைத் தீர்ப்புமுறியை இராணி மஙகம்மாளின் கையொப்பம்பெற்று நரேந்திரன் பாற்கொண்டு செல்லும் அஞ்சற்காரனைக் கண்டு, அவ்வஞ்சலை

ஒருநாள் இடையே தாழ்த்துக்கொண்டு போகும்படி வேண்டினர். அவனும் அவர்கள் வேண்டுகோட்கிணங்கினன்.

எவ்வாற்றானும் ஆதிரையை அரசன்பாற் கொண்டு செல்ல வியலாமை கண்ட சித்திராபதி, இறுதியில் அரசனை ஆதிரை இல்லத்திற் கழைத்துச்சென்று, அவள் கற்பை வலிந்தழித்தேனும் தன் வழிப்படுத்தத் துணிந்தாள். நள்ளிரவில், அரசனோடு ஆதிரை இல்லத்தை அடைந்தாள். ஆண்டு, ஆதிரையில்லாமையை அவள் அறியாள். மேலும், அறிவுசான்ற பரிமேலழகன் அரசனையும், அக்கணிகையையும் ஆதிரையில்லத்துள் வரவேற்று, ஆங்கோர் அறையுள்விட்டுப் பூட்டி வைத்தான்.

பரிமேலழகன் அறிவுறுத்தவாறே, ஐயையும், ஆதிரையும் திருச்சிராப்பள்ளிக்குச் சென்று, மறுநாள் அரண்மனை ஆராய்ச்சி மணியை அடித்தனர். அவ்வழி, இராணி மங்கம்மாளின் அற மன்றத்திற்கு வரவேற்கப்பட்டனர் ஆங்கே, இராணியார் ஆதிரை நிலைக்குப் பெரிதும் பரிந்து பல்லாற்றானும் ஆராய்ந்து, திண்டுக்கல் நகர அஞ்சல் செலுத்தப்பட்டமையால் வீரசிம்மன் இனிக் காப் பாற்ற வியலாதவனாய் விட்டமைக்கு வருந்தினாள் பின்னர், ஆதிரை அஞ்சற்காரன் ஒருநாள் இடையே தாழ்த்திருக்கும் செய்தி யைக் கூறப் பெரிதும் மகிழ்ந்து, உடனே இவ்வழக்கிற்குரிய அனைவரையும் தனபாற் கொண்டுவரும்படி தன் படைத்தலைவ னுக்குக் கட்டளையிட்டாள்.

அவ்வாறே படைத்தலைவனால் நரேந்திரன் முதலியோர் அரசி யார்முன் கொண்டுவரப்பட்டனர். வழக்கை ஆராய்ந்து பொய் வழக்கென நன்கு கண்டபின்னர், தன் தம்பியாகிய நரேந்திரனை மலையுச்சியினின்றும் உருட்டித் தள்ளிக் கொல்லும்படி கட்டளை யிட்டாள். இவ்வழக்கிற் குற்றஞ்செய்த ஏனையோர்க்கும் தக்க தண்டனை விதிக்கப்பட்டது.

கற்புடைத் தெய்வமாகிய ஆதிரை மலர்க்கையில் இராணியார் ஓர் அழகிய பொன் செங்கோலை அளித்து வீரசிம்மன்பாற் கொடுத்து அவனை அந்நகரத்து அரசனாக்கும்படி செய்தனர். அம்பலவாணர், முதலமைச்சராக அமைக்கப்பட்டார். பரிமேலழகர் முதலியோர்க்கு இராணியாரால் பரிசில்கள் வழங்கப்பட்டன,

# நாடக உறுப்பினர்

ஆடவர்:

**நரேந்திரன்:** திண்டுக்கல் மன்னன், அரசி மங்கம்மாளின் தம்பி.

**முசலன்:** நரேந்திரனின் அமைச்சன்.

**வீரசிம்மன்:** திண்டுக்கல் தண்டத் தலைவன்.

**போர்ப்புலி:** வீரசிம்மனின் நண்பன்.

**அழும்பில்வேள்:** திண்டுக்கல் படைத்தலைவன்.

**சேனாவரையன்:** பாண்டிநாட்டுப் படைத்தலைவன்.

**அம்பலவாணர்:** திண்டுக்கல் அறமன்றத் தலைவர்.

**சாத்தன்:** திண்டுக்கல் புதிய அறமன்றத் தலைவர்.

**முருகன்:** அம்பலவாணரின் பணியாள்.

**பரிமேலழகர்:** சிறைக்காவல் தலைவர்.

**சடையன்:** சிறைக்காவலன்.

**கண்ணன்:** அரசி மங்கம்மாளின் ஒற்றன்.

**தூறுவளி**
**நுண்புகையார்** } போர்மறவர்கள்.
**தெய்வச்சிலை**

**மருதன்:** பொய்ச்சான்று கூறியவர்களின் தலைவன், வணிகன்.

பெண்டிர்:

**மங்கம்மாள்:** பாண்டியநாட்டின் பேரரசியார்.

**ஆதிரை:** வீரசிம்மன் மனைவி.

**ஐயை:** பரிமேலழகர் மகள்; ஆதிரையின் அன்புத்தோழி.

**சித்திராபதி:** திண்டுக்கல் கணிகை.

**திலகவதி:** மங்கம்மாள் அமைச்சர்.

**கமலை**
**அங்கயற்கண்ணி** } திருச்சி அறமன்றப் பணிமகளிர்.

பிற உறுப்பினர்:

சான்றுகூறுவோர், காவலாளர், மக்கள், மக்கள்தலைவன், அஞ்சலாள், மறவர், உழைக்கல மகளிர், நகரப் பெருங்குழுவினர்.

# நிகழ்ந்த இடம்

திண்டுக்கல், திருச்சிராப்பள்ளி, பாண்டிநாட்டின் வடவெல்லை முதலிய இடங்கள்.

# செங்கோல்



## காட்சி க

இடம்: திண்டுக்கல் நகரத்துள்ள அரண்மனை.

உறுப்பினர்: தவமுதுமகள்.
வாயில் காவலன்.
அரசன்.

தவமுதுமகள்: (தனக்குள்) கலைமகள்விழா வந்ததும் வந்தது, நரேந்திரனுடைய பிறந்தநாட் குறிப்பில் எட்டாம் இடத்தில் சனிக்கோளும் வந்துற்றதுபோலும்! எந்தப் பொல்லாத வேளையிலே அவன் அவளைப் பார்த்தானோ? அந்தோ! அந்த வேளையிலிருந்து அரசன் நரேந்திரன் ஆடல் பாடல் ஊண் உறக்கம் அனைத்தையும் துறந்தான். இரவும் பகலும் நிலைகொள்ளாமல் புரண்டுகொண்டும், பிதற்றிக்கொண்டுமே கிடக்கிறான் அவன் அழகிய உடலோ தேய்பருவத்துத் திங்களேபோல் நாளதோறும் தேய்ந்து ஒளிகுன்றி வருகிறது இந்நிலைமை இன்னும் சிலநாள் நீடிப்பதாயின் நரேந்திரன் உடல் முற்றும் தேய்ந்து மாள்தலும் திண்ணமே என்செய்வது? அவன் கொண்டுள்ள நோய்க்கு இப்பேருலகத்தே பிறிதோர் மருந்தும் இல்லையே! எந்தப்பொருள் இந்நோய்க்குக் காரணம் ஆயிற்றோ, அதுவே இதனைத் தீர்ப்பதற்குரிய ஒரே மருந்தாகவும் உளது. அந்த மருந்து கண்டுபிடிக்கப்பட்டிருந்தும், அதைப்பெறுவதுதான் ஒரு சிறிதும் இயலாததாக இருக்கிறது. இருந்தால் இருந்திடுக! "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" அன்றோ! இயலுந்துணையும் முயன்று பார்ப்பேன்;

இக்காரியம் முடிவுறின் மிக நன்றே இல்லையெனி னும், என் பணப்பேழையை நிறைத்துக்கொள்ள இதில் வழியுளதென்பது திண்ணமே!

[வாயில் காவலன் ஒரு மேடையில் அமர்ந்தபடி உறங்கி விழுந்துகொண்டிருக்கிறான்.]

**தவமுதுமகன் :** (வாயில்காவலனை நோக்கி) அடே அடே! அடே! (வாயில்காவலன திடுக்கிட்டு எழ) நன்று நன்று! காவலனே! நீ உன்னுடைய கடமையில் எத் துணை விழிப்புடன இருக்கிறாய்! அடே தூங்குமூஞ்சி! நம் அரசர்பெருமான இப்பொழுது எங்கே இருக் கின்றார்?

**வாயில் காவலன் :** வணக்கம்! வணக்கம! பெரியீர்! நீவிர் யார்?

**தவமுதுமகன் :** காவலனே! யான் யார் என்பதை நீயே மிக எளிதில் அறிநதுகொளவாய். நீ இபபோது அரச ரிடம் சென்று ஒரு சிறநத மருததுவர் வநதுளார் என்று அறிவித்தல்வேண்டும. காலம் தாழ்க்காதே; ஊம்! ஊம! விரைநதுசெல!

**வாயில் காவலன் :** ஓ ஓ! அப்படியா! கட்டளைப்படியே செல்வேன். (நகைக்கிறான்) ஆயினும் மருத்துவப் பெரியீரே! நீவிர் மருத்துவராக இருமின், அன்றி வேறு யாராக இருநதாலும இருமின்! இப்போது அரசர் யாருடைய காட்சிக்கும் எளியர் அல்லர்; ஆத லால் அரசர்பெருமானைக் காணும் நும் பேராசையை அடக்கிக்கொண்டு, நும்முடைய மருத்துவ விடுதிக்கே மீண்டு போதல் நன்றென்று நினைக்கின்றேன்.

**தவமுதுமகன் :** (சினந்து) காவலனே! நீ என்னை இன்னும் நன்கு தெரிந்துகொள்ளவில்லைபோலும். தெரிந் திருப்பாயாயின் இங்ஙனம் பேசத்துணியாய்! நன்று! நன்று! காவலனே அரசர்பால் விரைந்துசென்று நீ என் வருகையை அறிவி!

**வாயில் காவலன் :** அம்மையே! நீயிர் ஒரு மருத்துவர் என்றும், அரசர் உடல்நலமின்றி வருந்துவதைக் கேள்வியுற்று, இதுவாயிலாய் நிறையப் பொருள் ஈட்ட எண்ணி இங்கு வந்திருக்கின்றீர் என்றும் கருதுகிறேன். நீயிர் அரசர் பெருமானிடம் பொருள் பறிப்பதனால் எனக்கு ஏற்படும் இழவு யாதொன்றும் இல்லை! எனினும், அரசர்பெருமானே என்பால் நேரிற் கட்டளையிட்டுள்ளார்; அஃதாவது தம்மாற் குறிப்பிடப்பட்ட இரண்டு மனிதர்களைத்தவிர பிறர் யாராயினும் அரண்மனைக்குள் செல்லவிடக்கூடா தென்பதே அக்கட்டளையாகும்.

**தவமுதுமகள் :** அங்ஙனமாயின், காவலனே! அரசரால் குறிப்பிடப்பட்ட அவ்விருவருள் யான் ஒருத்தியாதல் கூடும் என்று எண்ணுகிறேன்; ஆதலால் அவவிருவர் பெயரையும் நீ எனக்குத் தயைசெய்து கூறவேண்டும்!

**வாயில் காவலன் :** அம்மையே! உம்முடைய அவா மிகமிக நீண்டதாகத் தோன்றுகின்றது அரசாபெருமானாற் குறிப்பிடபபட்ட பெயர்கள் உம்பால் கூறற்பாலன அல்ல. அரசர்பெருமானுடைய உயிர் நண்பர்கள் பெயர்களே அவைகள்; நீயிா அவருடைய சிறந்த நண்பாகளுள் ஒருவராக இருப்பீராயின்...........

**தவமுதுமகள் :** இருத்தலுங்கூடும்; குறும்புடைய காவலனே! கணிகை சித்திராபதியை நீ அறியமாட்டாயா?

**வாயில் காவலன் :** அம்மையே! அறிவேன்! நன்றாக அறிவேன்! இம்மாபெரும் நகரத்தே அவரை அறியாதார் யாரும் இரார்! அரசர்பெருமானுடைய உயிர்த்தோழர்களுள் தலைசிறந்தவர் அச் சித்திராபதியே ஆவர். ஆ! ஆ! அவர்க்கு இன்று இந்நகரத்தே உள்ள நன்மதிப்பு வேறு யாருக்கு உளது! நன்று பெரியீர்! அரசராற் குறிப்பிடப்பட்ட இருவருள் சித்திராபதியும் ஒருவர்; உமக்கும் அச்சித்திராபதிக்கும் தொடர்பு ஏதேனும் உளதோ?

## காட்சி ௨

**இடம்:** அரண்மனையுள் இளவேனில் மன்றம்.

**உறுப்பினர்:** சித்திராபதி, அரசன், கண்ணன், ஏவல்மகளிர்.

[அரசன் மலரணையில் கிடந்து புரள்கிறான்.]

**சித்திராபதி:** மன்னர்பெருமான் வாழ்க! அடிச்சி சித்திராபதி வணக்கம்!

[அணையினின்றும் தலையைச் சிறிது உயர்த்தி நோக்கி]

**அரசன்:** யார்? ஓ நீயா? சித்திராபதி! ஈதென்னை கோலம்? நான் உன் குரலாலன்றே உன்னைச் சித்திராபதி என்று அறிந்துகொண்டேன். ஏன் இத் தவக் கோலம்; இவ்வுலக வாழ்க்கையில் உனக்கு எபபோது உவர்ப்புத்தோன்றியது; உண்மையிலேயே இக்கோலம் உனக்கு எத்துணைப் பொருத்தமாகவுளது. இக் கோலத்தில் உன்னைக்கண்ட மன்னரும், உன்னை வணங்கவே எண்ணுவர். நன்று! நீ ஏன் இக்கோலம் கொண்டனை?

**சித்திராபதி:** வாழ்க பெருமான்! பெருமானின் குறிக் கோள் நிறைவேறுந்துணையும் இக்கோலம் எளியே னுக்கு இன்றியமையாதது!

**அரசன்:** ஏடி சித்திராபதி! இப்பொழுது "உன்னுடைய வாயுடையது என்னுடைய வாழ்க்கை" ஆதலின், நீ இதுபோழ்து என்னை "வாழ்க" என்று வாழ்த்துவது முகமன் அன்றி உண்மையான பொருள் பொதிந்த சொல்லாகவே உளது! நன்று நீ மேற்கொண்டு சென்ற வினைத்திறன் எவ்வாறு உளது? அது பழமோ! காயோ!

[சித்திராபதி சிந்தனைசெய்ய]

**அரசன்:** ஏடி கிழவி! இதற்கு விடைசொல்ல நீ ஏன் தயங்கவேண்டும்? ஒன்று, காய்; இன்றேல் பழம்; இத்துணையே. இதிற் சிந்தனைசெய்ய யாதுளது?

சித்திராபதி: அரசே! பொறுத்தருள்க. அது காயும் அன்று; பழமும் அன்று.

அரசன்: என்னை? இரண்டும் அல்லவாயின் பின்னர் என்னையோ?

சித்திராபதி: அரசே! அஃதிரண்டுமல்லாத செங்காய் ஆகும்.

அரசன்: அங்ஙனமாயின், 'கைகூடுங்கொல்? கூடாது கொல்?' என்று நீ ஐயுறும் நிலையில் அஃதுளது என்று கூறுகிறாய்போலும்!

சித்திராபதி: பெருமானே! அதன்கண் ஐயம் யாதுளது! காய், செங்காய் ஆயபின் கனியாதலும் உறுதிதானே. செங்காய் கனியாதற்கு இடையே வேண்டும் அளவு காலம் இன்றியமையாது வேண்டப்படுமே அன்றோ? அத்துணையே. இச் சித்திராபதி முயற்சியும் இது காறும் முற்றாது இடையில் முறிந்ததும் உண்டுகொல்!

அரசன்: ஆம்! மெய்யே; நீ வினைத்திறனில் கைதேர்ந்தவள்; உன் முயற்சி முற்றிப் பயன்தரும் என்பதும் யான் நன்கறிந்த வுண்மையே! அங்ஙனம் அறிந்தமையாலன்றோ, யான் ஓராற்றால் தேறியும் இருக்கின்றேன். நன்று சித்திராபதி! நீ வினையாற்றிய வழியையும், அதன் நிலையையும் எனக்கு விளக்கமாகக் கூறுவாய்.

சித்திராபதி. ஐயனே! அச்செய்திகள், நன்கு மறைவாகப் பேசப்படுதல் நன்றென்றே அடிச்சி எண்ணுகின்றேன்.

அரசன்: அங்ஙனம் பேசுதல் இன்றியமையாதாயின் அங்ஙனமே பேசுவாம்.

[அரசன் ஏவல்மகளிரை அப்பாற்போகக் கட்டளையிட, அம் மகளிர்கள் அவ்வாறே போகின்றனர்]

**அரசன் :** ஏடி சித்திராபதி! (கண்ணனைச் சுட்டிக்காட்டி) இதோ இக கண்ணன்மட்டும் நமது சொல்லாட்டத்தின்போது இங்கிருத்தலால் ஏதம இல்லை என்று எண்ணுகின்றேன்.

**சித்திராபதி :** பெருமானே! அக கண்ணனுடைய செவிட்டுச் செவியில் இடியோசைகூடப் புகுதமாட்டாதே பெருமான் திருமேனியும் வியர்த்துளது; ஆதலால் அக் கண்ணனைவன், திருமேனிக்குச் சாமரையிரட்டி இங்கிருக்கக்கடவன், இத்தகைய பெருஞ் செவிடனால் நமக்கு ஏதம் ஒன்றும் நிகழமாட்டாது!

[கண்ணன் சாமரை இரட்டும்படி சித்திராபதி கைக்குறிப்பால் உணர்த்த அவனும அவ்வாறே அரசனுக்குச சாமரை இரட்டுகின்றான்.]

**அரசன் :** நன்று சித்திராபதி! இனி நீ உன் செய்தியைச் **சொல்லுக.**

**சித்திராபதி :** பெருமான் கட்டளைப்படியே கூறுவேன், கேட்டருள்க பெருமான் உரைத்தருளிய குறிப்பின் படியே சென்று அவ்வில்லத்தை அடைநதேன். அடைந்து, அவ்வில்லின் கதவைப் புடைத்து, 'இல்லினுள் இருந்திர் யார்? திறமின்' என்று உரததுக் கூவினேன். உடனே அவ்வுருவம! ஆ! எவ்வளவு அழகிய உருவம்! "கயல எழுதி வில்லெழுதிக் கார் எழுதிக் காமன், செயல் எழுதித் தீர்ந்த" அத்திஙகள் முகச் செல்வ உருவமே விரைந்துவந்து தன் மெல்லிதழ் விரல்களாற் றாள் திறந்து, அடிச்சிக்குக் காட்சி நல்கிற்று. பெண்ணாய்ப்பிறந்த என் விழிகட்கும அவ் வழகியின் திருவுருவம் தெவிட்டாப் பெருவிருந்தாகவே திகழ்ந்தது, எனிற் பின் பேசுவானேன். அவ்வுருவமே தங்கள் மனஙகவர்ந்த திருவுருவம் என்பதை, யான் பிறர் ஒருவரை வினவாமலே ஐயமறத் தெளிந்துகொண்டேன்.

அரசன்: அஃதெவ்வாறு இயலும்? அவ்இல்லத்தில் அழகான் உயர்ந்த வேறு மகளிர்கள் இருத்தல கூடாதோ?

சித்திராபதி. அழகுடைய அரிவையர் வேறுசிலர் இருத்தல் கூடும் அரசே! ஒளிதிகழ் உடுககள் விரிவிசும்பில் எண்ணில இருப்பினும, அவ்விசும்பிற்றிகழும் வெண்டிங்களை வினவியோ தெரிதல்வேண்டும்? விரிந்த அவ்விசுமபில் மிளிரவன உடுக்கள் பலவாகத் திஙகள் இரண்டில்லை: ஒன்றேயன்றோ உளது. அங்ஙனமே அவ்விலலத்தில் மட்டும் அன்று, இம் மாநகரத்தினும் அன்று, இபபேருலகத்திலேயே அத்துணைப் பேரெழில்படைத்த நங்கை, அவளையல்லால் வேறு ஒருத்தி உளள் ஆதல்கூடும் என்று என்னால் எண்ண முடியவில்லையே பெருமானே இத்துணைக் கலக்கங் கண்ட உருவம் இவ்வுருவமே என யான் வினவித் தெரிந்துகொள்ளவோ வேண்டும்? அத்தகைய அழகியர் பலர் இருத்தல் இயல்பன்று.

அரசன்: நன்று சொன்னாய். ஏடி சித்திராபதி! அங்ஙனம் இருத்தலால் அன்றோ, யான் இத்துணை இன்னலுக்கு ஆளாகிக்கிடககின்றேன். உன்னுடைய இத் தவக் கோலம் பொய்யே ஆயினும், உன் கண்கள் மட்டும் மெய்த்தவம நோற்றனவே ஆதல்வேணடும். ஆகலினன்றே, அவ்வழகியை அவைகள் நன்கு கண்டு மகிழும்பேற்றை எய்தின. நன்று! நன்று! மேலே சொல, வநதாள; மெல்லிதழ் விரல்களால் கதவின் றாள் திறந்தாள்; அதன்பின்?............

சித்திராபதி: அடிச்சியால் அடிகளில் பன்முறை வீழ்ந்து வணங்குதற்குரிய பேற்றைப் பெறபபோகும் அவள், அஃதறியாது, என்னை மலர்க்கரங்குவித்து முகம் புன்முறுவலால் மிளிர, தன் யாழுடை இன்சொலால் முகமன்பல மொழிநது, என்னை "இல்லினுள் வருக! இல்லினுள் வருக!" என்று பன்முறையும் நவின்று, உள்ளே வரவேற்றாள். அவ்வழகிய இல்லினுள், அன்

புடன் அழைத்துச்சென்று உயரிய பொற்றவிசு ஒன்று காட்டி, "அடிகள் இதன்மிசை அமர்க," என்று இயம்பினாள்; யானும் அவ்வாறே அதன்மிசை அமர்ந்தேன். பின்னர், பருகற்கினிய பால் தந்தாள்;........

அரசன்: என்னிது! ஏடி கிழவி! பின் பழந்தந்தாள்; நின்றாள்; இருந்தாள்; சென்றாள்; வீண்சொற்கள்! இவற்றைவிடுக. சுருக்கமாகக் காரிய நிகழ்ச்சியை மட்டும் சொல்.

சித்திராபதி: ஆம், அங்ஙனமே சொல்வேன்! பெருமான் கட்டளைப்படியே, அடிச்சி சித்திராபதி சென்ற முதன் முயற்சியில், தன்னுடைய கூரிய அறிவின் ஆற்றலால், நன்கு நடித்து, பெருமான் மனங்கவர்ந்த பேதை ஆதிரையின மனத்தை முற்றும் கவர்ந்து, அவள் அன்பிற்குரிய விருந்தாகியதோடன்றி, மேலும் அவளால் பன்முறையும் தன் இல்லிற்கு விருந்தாய் எய்தித் தன்னுடன் அளவளாவி இருத்தல்வேண்டும் எனப் பெரிதும விரும்புதலையும் பெற்றாள். இந்நிகழ்ச்சி, சித்திராபதியின் முயற்சி முற்றிப் பயன்றருதல் திண்ணமே என்னும் ஓர் நம்பிக்கையையும், அச் சித்திராபதி கொள்ளுதற்குச் சிறந்த காரணமாக அமைந்துளது. அரசே! இத்துணையே என் காரிய நிகழ்ச்சியின் சுருக்கம்.

அரசன்: ஆதிரை! ஆஅ அதிரை! ஆதிரை! ஆ! எத்துணை அழகிய பெயர்? சித்திராபதி! ஆதிரை என்பதுதான் அந்நங்கையின் பெயரோ?

சித்திராபதி: ஆம் அரசே! ஆதிரை என்பதே அப்பொற்றொடியின் பெயர்.

அரசன்: இம்முதல் முயற்சியும் வீண்போகவில்லை அவளுடைய (நாமரூபம்) பெயர் வடிவம் இரண்டனுள் முதல்நிற்கும் முறைமைத்தாய, பெயரை நீ எனக்களித்துள்ளாய். அவள் பெயர் தானும், அறியாது அவலமுற்றுக்கிடந்த யான், அவள் உருவத்தை நீ

முயன்று என்பாற் சேர்க்குந் துணையும், இப் பெயரைப் பற்றியே யான் ஊழி ஒன்றைக் கழிக்க முயல்வேன். இனி இதுகிடக்க. அன்பார்ந்த சித்திராபதியே! இம் முதல் முயற்சியில், பயன் முற்றும் என்னும் நம்பிக்கையேனும், நீ உறுதியாகக் கொண்டுள்ளாய் எனின், யானும் உய்ந்து பிழைத்தல்கூடும் என்னும், ஓர் நம்பிக்கையை என்னுளத்தே வளர்த்துக்கொள்வேன்! ஆகலின், அங்ஙனமோர் நம்பிக்கை உனக்கு ஏற்பட்டுளதோ? அதையேனும் எனக்குத் திண்ணமாய் விளம்பு.

சித்திராபதி : சித்திராபதி தன் ஆயுள்நாளில் தன் முயற்சி ஒன்றிலேனும் தோல்வியைக் கண்டவள் அல்லள். ஆகலின், அவள் தன் முயற்சி முற்றிப் பயன் றருமோ! தராதோ! என்று ஐயமே கொள்ளமாட்டாள். பயன் மரங்கள் தாமும் பருவம் வநதெய்திணலன்றிப் பழுக்கமாட்டா. காலம் இன்றியமையாததன்றோ, மண்ணும் கற்களும் எளிதிற் கிடைப்பது போன்று, மணியும பொன்னும் கிடைப்பதில்லை. கிடைத்தற்கருமையாக இருப்பதனாலன்றோ, அவைகள் அரும்பொருளகள என்று கூறபபடுகின்றன. அருமபொருளகளைப் பெறவேண்டுமானல் தளராத பொறுமையும், அசையாத முயற்சியும் வேண்டும். நினைத்தவுடனே கிடைததற்குரிய எப்பொருளும் எளியதாகவே இருக்கும. நம் ஆதிரை நல்லாளோ இவவுலகில் கிடைததற்கரிய அருமபொருள்களினும் அருமபொருளகளாகவே திகழ்கின்றாள். ஆதலால் அரசே! அவளைபபெறுதற்குப பொறுமையும் முயற்சியும் பெரிதும் வேண்டப்படுகின்றன. பொறுமையுடன் தளராமல் மேலும் மேலும் முயலவேண்டுவதே நம் கடமை; அன்றியும, இசசெயலைச் செய்துமுடித்தற்கு இடையூறு விளைப்பனவாகச் சில புறததடைகள் உள்ளன. அத்தடைகளை அகற்றித்தருதல் எம்பிரானுடைய கடமையே ஆகும். "பொருள் கருவி காலம்

வினை இடம்" என்னும் இவ்வைந்தினுடன், முடிவும் இடையூறும், ஆகியவற்றைச் சீர்தூக்கி ஒரு செயலைச் செய்தலவேண்டும் அத்தடைகளை அகற்றுதல் பெருமானுக்கு மிகமிக எளிய செயலும் ஆகும் (சுற்றிப் பார்த்து) கண்ணனையன்றி இவ்விடத்து வேறு யாரும் இலரன்றே?

அரசன்: ஏடி சித்திராபதி! என் ஆணைகடந்து இவ்விடத்தே வேறுயாரே இருத்தலகூடும், அஞ்சாதே சொல.

கண்ணன்: (தனக்குள்) எங்கும் நிறைகின்ற இயல்புடைய இறைவனும், செங்கோன்மைதவறாத இராணி மங்கமானுடைய கண்ணும் அல்லால், ஈண்டுப் பிறர் வேறு யாரும் இலர்.

சித்திராபதி: அரசே! நுங்கள் உளப்பூங்கோயிலில் எழுந்தருளி உறைகின்ற, அக்காதற்றெய்வம ஆகிய ஆதிரை நல்லாள், ஒப்பற்ற தன் புறஅழகினும், அகத்தே பன்மடங்கு அழகுமிக்காள்; திண்ணிய கற்புடையவள்; அவாவற்ற தூய உள்ளம் உடையவள்; கணவன்பால் பெயர்க்கவியலாத பேரன்பு உடையவள்; குலமகளிர்க்கு இருக்கவேண்டிய எல்லாப் பண்புகளும எட்டுணையும் குறைவின்றி அவள்பால் நிறைந்துள்ளன. அத்தகைய திண்ணிய கற்புடைய குலப்பிறப்பாட்டியை, என்வழிக்குக் கொண்டுவருதல் வேண்டும் எனின், பெரியதொரு சூழ்ச்சியை யான் துணிந்து செய்தலவேண்டும் அன்றோ? மானைக்காட்டியே மானைப்பிடிப்பது போன்று, நன்மையையே பெரிதும் விரும்பும் அப்பேதையை, நன்மை போதிப்பார் போன்று நடித்தே நாளடைவில் நம் வழிக்குக் கொண்டுவருதல் இயலும். ஆதிரையும, கூர்த்த அறிவுடையாள். ஆதலின், என் உள்ளத்தே கரந்துறையும் வஞ்சத்தை அவள் எட்டுணையும காணாதபடி, மேலும் கரந்துவைத்துக்கொண்டு, செவ்வியறிந்து அவள் உறுதிகுலைய ஆவன செய்தல்வேண்டும் கல்லையும்

கரைக்கும் ஆற்றலுடைய எனது சொற்றிறத்தால், எப்படியும் அப்பேதையுளம் பேதிக்கச்செய்தல் என்னால் இயலும்; ஆகலின் அதுகிடக்க, யான் அஞ்சுவதெல்லாம் அவள் கணவனும் அம் முரட்டு மறவனுக்கே!

அரசன்: ஆதிரையின் கணவனு? அவன் தொழில் என்ன? நீ அஞ்சும்படி அவன்பால் உள்ள சிறப்பு யாது?

சித்திராபதி: அரசே! ஆதிரையின் கணவன் ஒரு போர் மறவன்; வீரசிம்மன் என்பது அவன் பெயர். அவன், தங்கள் படையில் ஒரு தண்டத்தலைவனாக அலுவல் பார்த்துவருகின்றான். அவன் பெயருக்கும், தொழிலுக்கும் ஏற்றபடியே, ஓர் அஞ்சுதருமுருவம் படைத்தவன். அவன் இந்நகரத்திலேயே பணிபுரிந்து வருகிறபடியால், ஒருநாளில் பன்முறை இல்லத்திற்கு வருகிறான். அம்மம்ம! அவனுடைய அத்தறுகண்மையுடைய அகன்ற விழிகள் என் உள்ளத்தை நடுநடுங்கச் செய்துவிடுகின்றன. அவனைக் கண்டவுடனே யான் புலியைக்கண்ட மான்போல் அஞ்சுகின்றேன். என் உள்ளத்தே கரந்துள்ள வஞ்சகம் பொங்கி என் முகத்தே தேங்கிவிடுகின்றது! அதனை மறைக்க யான் எத்துணை முயன்றாலும், அம் முயற்சியே மேலும் என் உள்ளத்தை நன்கு கலக்கிவிடுகின்றது நல்லகாலமாக, அவன் என்னை ஓர் பொருளாக மதித்து இன்னும் என்னிடம் உரையாடத் தொடங்கவில்லை. ஒரோவழி அவன் எப்போதாவது என்னிடம் அளவளாவ எண்ணி, என் முகத்தை நேரில் நோக்குவான் ஆயின், அப்பொழுது அவன் என் முகத்திற் றேங்கிநிற்கும் வஞ்சகத்தை நன்கு தெரிந்துகொள்வான் என்பது திண்ணமேயாம். அங்ஙனம் அவன் கண்டுவிடுவான் ஆயின், அவனுடைய திரண்டுருண்டு நீண்ட அவ்வலிய கைகளுக்கு யான் இரையாகிவிடுதல் உறுதி! ஆதலின், அவனைக்கண்டே யான் பெரிதும் அஞ்சுகின்றேன்.

அரசன் : ஏடி கிழவி ! உன்னுடைய உரைகள் அம்மற வனைப்பற்றி எனக்கு அறிவித்ததைவிட, அவன்பால் நீ எத்துணை அச்சங்கொண்டுள்ளாய் என்பதையே நன்கு உணர்த்துகின்றன. நன்று; அவன் உன்னால் பெரிதும் அஞ்சப்படும் ஓர் போர் மறவன். அதற்கு மேல்,...........

சித்திராபதி : அவன் பன்முறை இல்லத்திற்கு வருதலால் யான் ஆதிரை நல்லாளுடன் நன்கு அளவளாவிப் பேசுதற்குரிய செவ்வி பெறுகின்றேனில்லை

அரசன் : அங்ஙனமாயின் அதற்கு யான் செய்யவேண்டியது யாதுளது ?

சித்திராபதி : பெருமான் இந்நாட்டினை அடக்கி ஆளும் அரசர் !

அரசன் : ஆம் ஐயமில்லை ! யான் அரசனாயிருப்பதனால் ?....

சித்திராபதி : 'ஆணையடியுள் அடங்கா அடியிலலை.' தங்கள ஆணையின் அடங்காதார் இநநாட்டில வேறு யாருளர்? அரசே ! ஆதலால் தஙகள படையில பணியாற்றும அவ் வீரசிமமனை யாதேனும ஒரு தநதிரததால் ஒரு சில நாட்களேனும், இந்நகரத்தினின்றும் அயலூர்க் குப் போக்குதல் வாயிலாய், பெருமான் என் முயற் சிக்குப் பேருதவி செய்தல்கூடும், எனறு அடிச்சி தாழ்மையுடன் விண்ணபபம் செய்கிறேன்.

அரசன் : ஆம்; ஆம் ! அறிவுசான்ற சித்திராபதியே ! இவ் வாற்றால் யான் உனக்கு உதவுதல் எளிதான காரி யமே. இதனை நீ சொல்லுமுன் யானே ஊகித்து அறிந்துகொண்டிருத்தல்வேண்டும். என்செய்வேன் ! எனக்குள்ளது ஒரே ஒருமனம். அதையும் முழுதும் ஆதிரை கவர்ந்துகொண்டாள் அன்றோ ? நன்று; நாளையே அவ்வச்சுறுத்தும் வீரசிம்மன் இந்நகரின் நீங்கித் தொலைவிலுள்ள வேறிடம் செல்கிறான் பார் ! நீ உன் முயற்சியில் விழிப்புடன் இரு.

சித்திராபதி : பெருமான் கட்டளை. இதுதான் என்குறை; அக்குறையும் தீர்ந்தது. இனி யான் விடைபெற்றுக் கொள்கிறேன்.

அரசன் : நன்று; நீ இனிச்செல்லக்கடவாய்.

சித்திராபதி . அரசர்பெருமான் நீடூழி வாழ்க!

[வணங்கிச்செல்கிருள். அரசன் பின்னிருந்து அவளைக் கூப்பிடுகிருன்.]

அரசன் : சிததிராபதி! சித்திராபதி!

சித்திராபதி . (தனக்குள்) ஊம், ஊம், காரியம் உருப் படாது! (வருகிருள்) அரசே வாழ்க!

அரசன் : ஆமாம், நீ இப்பொழுது ஆதிரையைக்கண்டு பேசபபோகின்ருய் அன்ருே?

சித்திராபதி : ஆம் அரசே! அவளுடன் பேசத்தான் போகி றேன்.

அரசன் : அவளை நம்வழிப்படுத்தப் பொருள் முதலியவற்று லாய பரிசில்கள் இன்றியமையாதனவாக உனக்குத் தோன்றவில்லையா ?

சித்திராபதி : (சிறிது சிந்தனை செய்பவள்போல் தனக்குள்) ஆதிரைக்குப் பொருள் ஏதும் வேண்டுவதின்று எனி னும், என் குறிக்கோள் நிறைவேறுதற்குரிய செவ்வி இதுதான். வாழைப்பழம் வேண்டாத குரங்கும் உண்டா? இம் மூடனிடம் பொருள்பறித்தற்கு இது போற் சிறந்த செவ்வி கிடைத்தல் அரிது. நன்று; யான் இங்ஙனம் நடந்துகொள்வேன்.

அரசன் : ஏடி சித்திராபதி! ஏன் சிந்தனைசெய்கிருய்? 'எல் லாம் பொருளிற் பிறந்துவிடும' என்பர். பொருளின் றேல் இவ்வுலகில் யாதும நடவாது............

சித்திராபதி : உண்மை! கடவுள்கூடப் பொருள் முதலிய வற்ருல் அடியார்கள் செய்யும் விழாவில் களித்தவ ராய் அவர் வழிப்படுகிருர்; மேலும் பெண்ணுள்ளம்

பொன் முதலிய பொருள்களைப் பெரிதும் விரும்பும் இயல்புடையது. அந்த முருட்டு வீரசிம்மனைப்பற்றி எழுந்த கலக்கததால் இன்றியமையாத பொருளை யான் முற்றும் மறந்தொழிந்தேன். பொருள் இச் செயற்கு பெரிதும் வேண்டப்படுகின்றது.

அரசன்: சித்திராபதி! அதனாற்றான் உன்னை யான் வலிய அழைத்தேன். இதோ இந்தக்கிழியில் உள்ள பொருள் இதுபோழ்து உனக்குப் போதியதாகும் என்று எண்ணுகின்றேன். இதனுள் ஐயாயிரம் பொன் மதிப் புள்ள அழகிய அணிகலன்களும், பொற்காசுகளும், வெண்பொற்காசுகளும் உள்ளன. மேலும் ஆதிரை யைப்பற்றிய முயற்சியில், எந்த அமயத்தில் எத் துணைப்பொருள் வேண்டப்படினும், நாணவேண்டா. என்னிடம் கேட்டு நீ பெற்றுக்கொள்ளத் தடை யில்லை!

[அக்கிழியை அவள்பால் கொடுக்கிறான் அவள் அதனைப பெற்றுக்கொண்டு தனக்கு ஏற்பட் டுள்ள புதிய மகிழ்ச்சியை அரசன் காணு வகை மறைக்க விரைந்து விடைபெற்றுப் போகின்றாள்.]

சித்திராபதி: (தனக்குள்) உலகில் ஒவ்வொருவருக்கும் திருமகளின் கடைக்கண் நோக்கம் இப்படியே ஏற்படு கிறது எதிர்பாராதவகையில் ஆ! எத்துணைப் பெரும் பொருள் தன்னாலே வந்து குவிகின்றது

அரசன்: (தனக்குள) இச் சித்திராபதிதான் என்னை! என் பொருட்டே விழிபபுடன் முயல்வாள் என்று நினைத் தலும் தவறு; ஆதலாற்றான், அவளைப் பொருளால் பெரிதும் மகிழுமபடி செய்துவிட்டேன் அவள் இனி நன்கு விழிப்புடன் முயல்வாள் என்று நம்புகின்றேன். என்னுடைய அதிகாரத்தைவிடப் பொருளே பெரி தும் ஆற்றலுடையதாகத் தோன்றுகிறது. எத்துணைப் பொருள்தான் ஒழியினும் ஒழிக! ஆ! அவ்வாதிரை மட்டும் எனக்குக் கிடைப்பாளாயின்............

[மலரணையிற் புரள்கிறான்.]

## காட்சி ௫

**இடம்:** இளவேனில் மன்றம்.

**உறுப்பினர்:** அரசன் நரேந்திரன்; அமைச்சன் முசலன்.

**காலம்:** மாலை.

[அரசன் மலரணையில் உருள்கிறான்; அமைச்சன் முசலன் வருகிறான்.]

**முசலன்:** மன்னர்பெருமான் நீடூழி வாழ்க!

**அரசன்:** (மலரணையிலேயே எழுந்து அமர்கிறான்) வருக! வருக! முசலரே! வருக! (ஓர் இருக்கையைக் காட்டி) அமருக!

**முசலன்:** அரசே! புதுவதாக அரசியற்பொறுப்பை ஏற்றுக்கொண்ட தாங்கள், அரசற்குரிய கடமைகளிற் சிறிதும் கருத்தின்றி இவ்வாறு தாழ்த்திருத்தல் நன்மையாகாது என்று எண்ணுகின்றேன். தங்கள் தமக்கையாராகிய இராணி மங்கம்மாள், முன்னரே பொறுப்புவாய்ந்த இவ் வரசியற்சுமையைத் தங்கள் பால் வைத்தற்குப் பெரிதும் ஐயுற்றார்கள்! உடன் பிறப்பினர் என்னுமொரு பற்றுண்மையின், பின்னர் ஒருவாறு துணிந்து உம்பால் இப்பொறுப்பை விட்டனர். நீவிரும், அவர் ஐயுற்றதற்கிணங்க, இவ்வாறு காமமயக்கத்தே காலம் போக்கிக் கடமைகளை ஒருசிறிதும் கண்காணித்தலின்றிக் கிடத்தல் நேரிதன்று. பெருமான் உடனே ஆற்றுதற்குரிய அரசியல் அலுவல்கள் பலவுள்ளன. இதோ இந்த முடங்கலில் எல்லாம் பெருமான் இப்பொழுது கைபெழுத்திட்டாக வேண்டும்.

**அரசன்:** சீசீ! முசலா! நீ இப்போது என்னை ஏதும் இடுக்கண் செய்யாதே. உன் கண்முன் உன் அரசன் நரேந்திரனையோ நீ காண்கின்றாய்? உண்மையில் நரேந்திரனாகிய உன் அரசன் இப்போது இங்கில்லை.

ஆனால், அவன் மனம் முதலிய உட்கருவிகள் பறி போன வெற்றுடலே ஈண்டுக் கிடக்கின்றது. அரசன் ஆயினதால் யாது பயன்? ஆண்டியாயினாற்றான் யாதிழவு? எங்ஙனமாயினும் ஆகுக; அன்புகூர்ந்து இப்பொழுது என்னை இன்னல் செய்யாதொழி. உன் கடமையை நீ நன்கு செய்ய இயலுமேல் செய். இன்றேல் நீயும் விட்டொழி.

முசலன்: அரசே! அரசற்குரிய முடி உங்கள் தலையில் அணியப்பட்டும், அரசற்குரிய செங்கோல் தங்கள் மலர்க்கையை வந்தடைந்தும், தாங்களோ இன்னும் அரசத்தன்மையை அடைந்திரில்லை. தங்கள் அதிகாரத்தின் பெருமையையும், தங்கள் வாக்கின் வன்மையையும் நீங்களே இன்னும் அறிந்துகொள்ளமாட்டாமையாலன்றே, ஓர் அடிமையின் மனைவியாகிய ஒரு பேதையைத் தாங்கள் பெற்றடைதற்கு இயலாதவர்போன்று இத்துணை இன்னலும் எய்துகிறீர்கள். அரசே! விழித்துக்கொள்ளுங்கள்; ஆற்றலுடைய அரசர் தாங்கள் என்பதை நன்கு நினைவுகூர்ந்துகொள்ளுங்கள். அரசர்பெருமானுடைய ஆணையின் எல்லையுட்பட்ட இந்த நாட்டில், அரசருடைய விருப்பத்தைக் கவர்ந்த பொருள் எதுவாகவிருப்பினும், யாருடையதாக இருப்பினும், விரும்பியபொழுதே அரசருடைய திருவடிகளை வந்தடையாதோ? இதற்கோ இத்துணை இன்னல்? அரசே! அவலம் விடுக; ஓர் அடிமையின் மனைவியாகிய அவளைப் பெறுதல் எளிதில் இயல்வதொன்றாம்; இம் முடங்கல்களிற் கையெழுத்திடுக.

அரசன்: அன்பனே! நீ வாழ்க! என்னுடைய நிலையை நீ உணர்ந்துகொள்ளாமல் பேசுகின்றாய் என்று எண்ணினேன். எண்ணியது தவறென்று இப்போது யான் உணருகின்றேன். இதுபற்றி உன்னிடம் கூறுதற்கு நாணியே இதுகாறும் கூறாதொழிந்தேன். இதைப்பற்றி இத்துணையும் நீ எவ்வாறு தெரிந்து

கொண்டாய்! நண்பனே! அவ் வழகியை யான் கைவரப்பெற்றாலன்றி, இவ்வுலகில் ஏதும் இயற்ற ஆற்றலற்றுக்கிடக்கின்றேன். பெறற்கரியளாக யான் எண்ணும் அப் பேரழகியைப் பெறுதல் மிக எளி தென்று நீ கூறிய வாசகங்கள் எனக்குப் புத்துயிர் அளித்தன. நீ வாழ்க! முன்னர் அப் பொற் றொடியைப் பெறற்குரிய வழியை நீ எனக்குக் கூறுக. அதன்பின்னர் யான் ஆற்றவேண்டிய கடமையிற் றவறாது ஆற்றவல்லேனாதல் திண்ணம்.

முசலன்: அரசே! தாங்கள் மன்னராக இன்றி, வெறும் நரேந்திரனாகவும், யான் அமைச்சனாக இன்றி வெறும் முசலனாகவும இருந்தகாலத்தே, இத்தகைய நிகழ்ச்சி களில், எத்துணை அரிய செயல்களைச் செய்து தங்க ளுக்கு உதவிபுரிந்துள்ளேன். அவற்றையெல்லாம் பெருமான் மறந்திருக்கமாட்டீர்கள் அன்றோ? இச் செயல்களில் கணிகை சித்திராபதியும் மிகமிகச் சது ரப்பாடுடையவள் என்பது யாம் நன்கறிநத உண் மையே அன்றோ? அவள் இந்நிகழ்ச்சியில் முழுப் பொறுப்போடு முயன்றுவருகின்றாள். அவளை யானும் அடிக்கடி கண்டு ஊக்கிவருகின்றேன் இந்நிகழ்ச்சி இயல்பாகவே நற்குணம் வாய்ந்த ஆதிரையின் பொருட் டுச் சிறிதுகாலம் வேண்டுகின்றது. "'பத்துப்போன்னை விஞ்சிய பதிவிரதை யில்லை" என்பது முதுமொழி.

"பெண்ணெனப் படுவ கேண்மோ
பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடைய வல்ல
வொராயிர மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டால்
இந்திரன் மகளு மாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன்
மெலிந்துபின் னிற்கு மன்றே."

ஆதலால், மன்னர் அருளசெய்து ஆதிரையைப்பற்றிய நிகழ்சசியை ஓர் பொருளாக எண்ணி இன்னலுறாமல்,

இப்போது இன்றியமையாது கண்காணிக்கவேண்டிய இம் முடங்கல்களை ஆராய்ந்து, இவற்றில் கையெழுத்திடுதல்வேண்டும்.

அரசன்: அறிவுடைய அமைச்சரே! உம் மொழிகள் இப்போது எனக்கு ஆறுதல் அளித்துள்ளன. அறிவாற்றல் மிக்க உம்மை அமைச்சராய்ப் பெற்றுள்ள எனக்கு எதுதான் அரும்பொருள் ஆகும். நன்று; நும்முடைய அறிவுரைப்படியே யான் என் கடமையைச் செய்வேன். இம் முடங்கல்கள் எதுபற்றி வரையப்பட்டுள்ளன?

முசலன்: அரசே! நம் அரசர்பெருமாட்டியாகிய இராணி மங்கம்மாள் தேவியார் நம்முடைய கருவூலத்துள்ள இருப்புப் பொருள்கள் எவ்வளவு என்றும், திங்கள் தோறும் நம் ஆட்சிக்கண் அமைந்த நாட்டின் பகுதியில் வரும் வருவாய் எவ்வளவு என்றும், திங்கள் தோறும் நம் அரசியற்செலவு எவ்வளவு என்றும், நாம் அரசியற்பொறுப்பு ஏற்றுக்கொண்ட அந்நாள் தொடங்கி இதுகாறும் உள்ள அக்கணக்குகளைச் செவ்வனே குறித்துத் தம் மேலான கண்காணிப்பிற்கு உய்த்துவிடுமாறு தங்களுக்குக் கட்டளை பிறப்பித்துள்ளார். ஈதோ உளது மகாராணியார் கட்டளை முறி. ஆதலால், அரசர் இந்நிகழ்ச்சியில் விழிப்புடன் இருத்தல்வேண்டும். இன்றேல், நமது அரசியலே நம்மைவிட்டு நழுவுதலும் கூடும். சுவரை வைத்துக் கொண்டன்றோ ஓவியம் தீட்டல்வேண்டும்?

அரசன்: ஈதென்ன பேரிழவு! மகாராணியார் சிவபூசையின் இடையே கரடியை விடுகிறார். யான் அரசியற் பொறுப்பேற்றுக்கொண்ட நாள்தொடங்கி, இப் பொருள்பற்றி அரசியார்க்கு யாம் கணக்குக் காட்டும் கடமையுடையோம் என்று சிந்தனை செய்ததுகூட இல்லையே! இவ்வாறு ஒரு தொல்லையும் உளதோ? எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

முசலன்: பெருமான் இதுபற்றி ஏதும் எண்ணியதில்லை எனினும், அமைச்சனாகிய முசலனும் வாளா இருந்து விடமாட்டான்; அரசியார்க்குக் காட்டவேண்டிய கணக்குகளைபபற்றி அரசர் எட்டுணையும் கவல வேண்டா. ஏனெனில், அதற்குச் செய்யக்கடவன வெல்லாம நன்கு ஆராய்ந்து முசலன் செய்துள்ளான். அதுபற்றி அரசர்பெருமான் ஆற்றவேண்டிய பணி இம் முடங்கல்களில் கையெழுத்திடவேண்டிய தொன்றேயாம்.

அரசன்: ஓ அப்படியா! முசலரே! நன்று! நன்று! அம் முடங்கல்கள் எதுபற்றி எழுதப்பட்டுள்ளன?

முசலன்: பெருமானே! இவைகள் நம் ஆட்சி எல்லைக் குள் அமைந்த பத்து மாவட்டத் தலைவர்களுக்கும் வரைந்துள்ள நம் அரசியற் கட்டளைகள். நாம் அரசி யலை மேற்கொண்டு ஆண்டொன்று முழுவதாக இன் னும் கழிந்திலதேனும், இச் சிறிய காலத்திற்குள் நமது களியாட்டங்களுக்கும், இவ் விளவேனில் மன் றம் கட்டி முடித்தற்கும், இன்னோரன்ன பிறவற்றிற் கும், பத்து நூறாயிரம் வெண்பொற் காசுகள் செல வழிக்கப்பட்டன. வருவாய் ஒரு சிறிதும் இல்லை என்றே சொல்லவேண்டும்; நமது அரண்மனைக் கருவூலம முற்றும் வறண்டு கிடக்கின்றது. இந் நிலையை நம் அரசியார் ஒரு சிறிது அறியினும் நமது நிலை தலைகீழாய் மாறிவிடுதல் திண்ணம். தாங்கள் அரசியலை வகிக்கும் ஆற்றலுடையீரல்லீர் என்று அரசியார் பண்டே ஐயங்கொண்டுள்ளார் அன்றே! நிகழ்ச்சியும், அவர் ஐயுற்றதற்கேற்பவே அமைந் துளது! மேலும், அரசியார்க்காகவாதல் பிறருக் காதல் நாம் பொருளீட்ட வேண்டியதில்லை. நமது இன்ப வாழ்க்கையை நீள நிறுத்திக்கொள்ளும் பொருட்டே நாம் பொருளீட்டும் முயற்சியை மேற் கொள்ளல்வேண்டும். 'பொருளிலார்க் கிவ்வுலக மில்லை' யன்றோ?

அரசன்: முசலரே! என்னிது! என்னிது! உம் மொழிகள் என்னை நடுங்கச்செய்கின்றனவே அங்ஙனமாயின், இந் நிலையினின்றும் யாம எவ்வாறு அரசியார் சினத்திற்கு ஆளாகாமே உய்வது?

முசலன்: அரசே! அஞ்சவேண்டா உய்ய வழிகண்டு பிடிக்கப்பட்டது; நிலைமை இங்ஙனம இருத்தலால் நமது கருவூலத்தை முதலில் நிரப்பிவிடல்வேண்டும். பத்துநாட்களிலே நமது கருவூலம் நிறைதற்கு வேண்டிய சூழ்ச்சியையே இம் முடங்கல்கள் தம்பாற் கொண்டுள்ளன.

அரசன்: வியப்பு; வியப்பு! அச் சூழ்ச்சிகள் யாவை?

முசலன்: கூறுகின்றேன் அரசே! நமது பத்து மாவட்டத் தலைவர்கட்கும் இடப்பட்டுள்ள இக் கட்டளைகள், அவர்கள் ஒவ்வொருவரும இககட்டளை கிடைத்த பத்து நாட்களுக்குள, தலைக்கு ஒருபத்து நூறாயிரம் வெண்பொற்காசுகள அரண்மனைக் கருவூலததிற்குத் தாமே நேரிற் கொணர்நது இறுத்தல்வேண்டும என்றும், அங்ஙனம் செய்யத் தவறினால், அவர்தம் அதிகாரததை இழந்துவிடுதல திண்ணம் என்றும், புதுவதாக நாட்டின் சீர்திருத்தம செய்தல் இன்றியமையாததாக இருத்தலாலும், இதுகாறும் மாவட்டத் தலைவர்கள் தம கடமையிற் றவறியதாகத் தோன்றுகின்றபடியால், இக் கட்டளைப்படி நடத்தல்வேண்டும் என்றும் ஒவ்வொரு மாவட்டத்தலைவரும் இப் பெருந் தொகையைத தத்தம் குடிமக்களிடமிருந்து எவ்வாற்றானும் பெற்று ஈடுசெய்து கொள்ளலாம் என்றும் கூறுகின்றன.

அரசன்: இவ்வளவு பெருந்தொகையைப் பத்து நாட்களில் அவர்கள் எவ்வணம திரட்டிவிடுவார்கள்?

முசலன்: அரசர் பெருமான் பார்த்திருந்தாற் போதும்; பத்து நாட்களுள் பத்து நூறாயிரமும் தம் குடிகளைப்

பிழிந்தேனும் திரட்டிவிடுவார்கள். மேலும், இது தலைக்கீடாகக்கொண்டு அத் தலைவர்கள் தங்கட்கும் வேண்டுமளவு பொருளீட்டவும் தவறமாட்டார்கள். பதநாட்கள் வேண்டும்; நம் கருவூலம் நிறைந்து விடுவது திண்ணம்!

**அரசன்:** அமைச்சரே! நீர் அமைச்சர் சிங்கம் ஆய்விட்டீர்; நம் விருப்பப்படியே இதோ இக்கட்டளை முறிகளில் கையெழுத்திடுகிறேன். (அவற்றில் கையெழுத்திட்டுக்கொண்டே) முசலரே! நீயிர் சித்திராபதியைக் கண்டு பேசியபொழுது ஆதிரையைப்பற்றி அவள் நம்பால் என்ன கூறினாள்? ஆதிரையை எங்ஙனமாவது சித்திராபதி நம்பால் கொணர்ந்து விடுவாள் என்று நீயிர் நம்புகின்றீரா?

**முசலன்:** அரசே! யான் அவளைக் கண்டு உசாவினேன். ஆதிரையைக்கொண்டுவருதற்குத் தடையாக உள்ளது அவள் கணவன் ஊரில் இருப்பதேதான். ஆதிரையின் கணவனாகிய வீரசிம்மன் பலநாடுகளுக்கு நம் நகரத்தினின்றும் மிக்கதொலைவிற் சென்று தங்கி விடுதற்கு வேண்டிய சூழ்ச்சிகளையும் நான் செய்து முடித்துள்ளேன்.

**அரசன்:** அமைச்சரே! நீயிர் இப்போது எனக்கோர் தெய்வமே ஆகக் காணப்படுகின்றீர். இச் செயல் வியத்தகு செயல். ஏவாமலே குறிப்பறிந்து செயல்களைச் செய்கின்ற நும் அறிவாற்றல் ஈடற்றது! நன்று! வீரசிம்மனை எவ்வாற்றான் அயலூர்க்குச் செல்லுமாறு சூழ்ச்சி செய்துள்ளீர்?

**முசலன்:** அரசே! அஃதொரு வியத்தகு சூழ்ச்சியேயாகும்.

"தண்டத்தலைவர் வீரசிம்மனுக்குச் சேனாபதி வாயிலாய் முதல் அமைச்சர் முசலர் இடும் கட்டளையாவது. நமது நாட்டின் வடவெல்லைக்கண் உள்ள

காட்டில் நம் பகைவர் வந்து வழங்குவதாகத் திற முடைய ஒற்றர்களால் நம் அரசியல அதிகாரிகள் நன்கு அறிந்துள்ளார்கள். ஆதலின் நீயிர் நூறு காலாட்படை மறவருடன் அக் காட்டெல்லையிற் சென்று, விழிப்புடன் எமது மறுகட்டளை பெறுந் துணையும் வதிதல்வேண்டும் பகைவர்களைக் காண நேரின் உம்முடைய தூதர் வாயிலாய் எமக்குச் செய்தி அறிவிக்கக்கடவீர்.

இங்ஙனம்,
முதலமைச்சர்
முசலன்."

இவ்வாறு ஒரு கட்டளை எழுதிப் படைத்தலைவனிடம் கொடுத்து வீரசிம்மனிடம் சோப்பிக்கச் சொல்லியுள்ளேன். இன்றே இக் கட்டளையை அவன் பெறுவான் நாளைவிடியலில் அவன் வடவெல்லை நோக்கிச் சென்றுவிடுதல் உறுதி. பின்னர் இரண்டொரு நாட்களில் ஆதிரை எம்மனோர்க்கு அரசியாகும் பாக்கியத்தை அடைதலும் திண்ணம். யாரேதான் இத்தகைய பெருஞ்சிறப்பை ஏற்காமல் மறுக்கத் துணிவார் !

அரசன் : முசலரே ! பெரும்பாலும் நமது கருவூலம் பொருளாற் குவிந்துவிட்டதையும், என் பக்கத்தே அவ் வரும்பெறல் அழகி அமர்ந்திருத்தலையும், யான் இப்போதே என் மனக்கண்ணாலே காண்கின்றேன்.

முசலன் : அரசர் பெருமான் வாழ்க ! (அம் முடங்கல்களைக் கையில் எடுத்துக்கொள்கின்றான்.) அரசே ! அடியேன் என் கடமைகளை ஆற்றும்பொருட்டு இப்பொழுது விடைபெற்றுக் கொள்கின்றேன்.

அரசன் : நன்று ; நன்று ! முசலரே சென்று வருக.

---

## காட்சி ச

இடம் : வீரசிம்மன் இல்லம்.

உறுப்பினர் : ஆதிரை, ஐயை, தவமுதுமகள்.

காலம் : காலை.

[ஆதிரை பிரிவாற்றாமையால் வருந்தியிருப்ப, அவள் தோழி ஐயை ஆங்கு வருகிறாள்.]

ஐயை : அன்னாய்! என்னிது! திடீரென இத்துணைத் துன்பத்தோடு காணப்படுகின்றாய்? இதற்குக் காரணம் என்னை? இதற்குமுன்னர் நீ ஒரு கணந்தானும் துன்பத்தோடிருக்க யான் கண்டதில்லையே!

ஆதிரை : என் அன்பே! என் ஆருயிர்க்காதலர் இன்று வைகறையாமத்திலேயே எளியேனைப் பிரிந்து அயலிடம் சென்றுவிட்டனர். அவர் இல்லத்தை விட்டுச் சென்ற கணந்தொடங்கி என் நெஞ்சம் அமைதி கொள்ளவில்லை. அமைதி காண யான் எத்துணை முயன்றும் இயலவில்லை. அமைதிகாண முயலும் அம் முயற்சியே அவரைப்பற்றிய சிந்தனையை மேலும் மேலும் கிளர்ச்சிசெய்து பெருங்குழப்பத்தை உண்டாக்கிவிடுகின்றது. அவரைப்பற்றி எண்ணி எண்ணி என் உள்ளம் நெருப்புற்ற வெண்ணெய்போன்று உருகி ஒழுகாநின்றது. இங்ஙனமாதலில் தோழி! நான் என்செய்வேன்?

ஐயை : ஆதிரை! உன்னை இவ்வாறு இன்னலில் அழுந்தவிட்டு அவர் எங்குச் சென்றுள்ளார்? எப்பொழுது மீண்டு வருவதாகச் சொன்னார்?

ஆதிரை : அன்புமிக்க தோழீ! நேற்றிரவு அவர் என்னை அன்புடன் விளித்துத் தம் மலர்க்கைகளால் எனது நெற்றியைத் தடவியவண்ணம் புன்முறுவலுடன் என் முகத்தைக் கூர்ந்து நோக்கி, ஏதோ எனக்குச் சொல்லவிரும்பியவராய், ஆனால் அதனைச் சொல்லத்

தயங்கிநின்றார். யான் அப்பொழுது, "ஐய! தாங்கள் ஏதோ எனக்குக் கட்டளையிட எண்ணுகின்றீர்கள் போலும்; அதனை ஏன் மறைத்தல்வேண்டும்? தங்களுடைய கட்டளை எதுவாயினும், அதனை என் தலைமேற்கொண்டொழுகுதலன்றோ எனது தலையாய கடமையாகும். ஆதலால், தாங்கள் சொல்ல நினைந்ததைச் சொல்க," என்றேன். அதற்கு விடையாக அவர், "ஆதிரை நல்லாய்! நம் அரசியலில நாடு காவற்பொருட்டு, அரசியலார்தம் கட்டளையை மேற்கொண்டு நாளை வைகறைப்போதில் யான் அயலிடம் சென்று மீளவேண்டியவனாக இருக்கிறேன். நம் திருமணநாள் தொடங்கி, யாம் இதுகாறும் ஒருவரை ஒருவர் பிரிந்தறியோம் அல்லமோ! புதிய நிகழ்ச்சியாகிய இப் பிரிவுகருதி நீ வருந்துதல் இயல்பென்று யான் எண்ணும்போதே அதனை உனக் கறிவுறுத்தத் துணிவின்றியே தயங்குகின்றேன் பாவாய்! அரசியற் கடமையை மேற்கொண்டுள்ள எனக்கு இத்தகைய நிகழ்ச்சிகள், இடையிடையே ஏற்படுதலும் இயல்பே ஆதலால், உன்னை யான் வேண்டுகின்றேன் நீ ஒரு மறவன் மனைவியாகவே இரு. மறவனுடைய தொழிலுக்குப் பொருந்திய தறுகண்மையும் உனக்குவேண்டும் இவ்விரவு பிறபொழுதிலேயே என் நண்பர்களுடன் யான் சென்று மீள்வேன்; யான் மீண்டு வருந்துணையும் நீ உன் தோழி ஐயையோடும, உன்னாற் பெரிதும் விரும்பப்பட்ட சிலப்பதிகாரம் என்னும் தீந்தமிழ்க் காவியத்தோடும் பயின்று பொழுதை இனிதே கழிக்கக்கடவை," என்றார். தோழி! அவர்தம் பிரிவென்னும் பெருந்தீ அவருடைய வாசகங்களின் உள்ளிருந்து என் செவியகம் சுட்டதெனினும், அவர்தம் அன்பளாவிய வாசகங்களைச் செவியுற்றபொழுது அச் சொல்லினிமையில் மயங்கினேன். என் கடமை அதனை ஏற்றுக் கொள்ளுதலே ஆதலால், அவர் மொழிக்கு மறுமாற்றம் ஒன்றேனும் கூறத் தோன்றாமல் உடன்

பட்டேன். இத்துணை எளிதின் என் உடன்பாடு பெற்றமையாற்போலும் அவர் என் முதுகில் மெல்லத் தன் கையாற்றட்டி, "ஆதிரை! நீயே பெரிதும் முதுக் குறைவுடையாள்!" என்று கூறி, அவ் வைகறைப் பொழுது வந்ததும், அந்தோ! என்னைத் தனியே விட்டு யாண்டோ சென்றனர்.

ஐயை: பேதையே! இதற்கு நீ இத்துணை வருந்துதல் எங்ஙனம் தகுதியாகும்? வீரவாழ்க்கையுடைய உன் தலைவர் அவர் தலைமைத்தன்மைக்கேற்ப ஒழுகும் கடப்பாடுடையர் அவர்தம் கடமைக்குத் தடையேது மின்றி உதவியாய் நிற்றலே உன் கடமையாம். அவலம் விடு வினைமேற்சென்றார் அது நிறைவேறிய வுடன் மீள்வர் திண்ணம் நன்று; அவர் எப்போது மீண்டு வருவதாக உன்னிடம் கூறிச் சென்றார்?

ஆதிரை: தோழி! அப்பொழுது நிகழ்ந்த மனக்குழப் பத்தில், அதைத்தான் நான் கேட்க மறந்துபோனேன். மேலும், அவர் போர்க்களம் புகுதற்குச் செல்கின்ற னரே என்று எண்ணும்போது என் நெஞ்சம் பகீர் என்கின்றது. [அழுகிறாள்.]

ஐயை: என் அன்பே! விடு; விடு! நீ பெரிதும் கோழை. உன் கணவர் கூறியபடியே ஒரு மறவன் மனைவியாக இரு இச் சிறுசிறு பிரிவுகள் உலகவாழ்க்கையில் நிகழ்தல் யாருக்கும் இயல்பேதான் நம் செந்தமிழ் நாட்டின் மறமகளிரின் உள்ள உறுதியை நீயேதான் ஒருநாள் எனக்கு உரைத்தனை "முதல்நாள் போரில் தன் தந்தை போர்க்களத்தே களிற்றால் கொல்லப் பட்டான்; மறுநாள் தன் கணவன் போர்க்களம் புக்குப் பல்லாயிரம் பகைவரைக் கொன்று குவித்து நூழிலாட்டி இறுதியில் பகைவன் ஒருவன் விசைத் தெறிந்த வேலினை நெஞ்சத்து ஏற்று அக் களத் தேயே மாண்டான்; மூன்றாநாளும் போர் முரசம் முழங்குதல் கேட்டு அம்மறவன் மனைவி, பால் மணம்

மாறாத தன் ஒரே மகனாகிய இளஞ்சிறுவனை வெள்ளாடை விரித்துடீஇ, வேல் ஒன்று கைக்கொடுத்து, 'மைந்த! நீ இன்று இப்போர் மறவரொடு போகக் கடவாய்,' என்று போக்கினாள்" என்னும் மறகுடிப் பிறந்த மகளிர் மாண்பை விளக்கும் வரலாற்றை நீயன்றோ எனக்குச் சொல்லினை! ஆதலால், நெஞ்சத்தைத் தேற்றிக்கொண்டு அன்னையே ஆற்றியிரு. (கதவைப் புடைக்கும் ஒலி கேட்டு). அன்னாய்! யாரோ கதவைத் தட்டுகிறார்; பொறு; பொறு

[எழுந்துபோய்க் கதவைத் திறக்கத் தவமுதுமகள் உள்ளே நுழைகிறாள்.]

**இருவரும் :** வருக; வருக! தவப்பெரியீர்! நுங்கள் வரவு நல்வரவாகுக!

**தவமுதுமகள் :** ஆதிரை! ஏன் பெரிதும் துன்பமுடையவளாய்த் தோன்றுகின்றாய்? அறிவுசான்ற உன்னையும் துன்பம் அணுகுமோ? அன்னே! இத்துயர் உனக்கு எற்றால் வந்தது?

**ஐயை :** அடிகேள்! இன்பமும் துன்பமும் மாறிமாறி வருதல் இவ்வுலகின் இயற்கையன்றோ? ஆதிரையும் இவ்வுலகத்துள் வாழும் இயல்புடைய ஒருத்திதானே!

**தவமுதுமகள் :** ஆம்; ஐயை! நீ உண்மையில் மெய்யறிவு தலைப்பட்ட பெண்மையள். இன்பதுன்பங்கள் கடற்றிரைபோன்று இடையிடையே மாறி வந்து மோதுதல் இவ்வுலகியற்கையாதல் சாலப் பெரிய உண்மையே எனினும், அவ்வின்ப துன்பங்களிற் பட்டு ஊசலாடாது தாம் வேறாத் தனித்து மகிழ்தலே சான்றோர் இயல்பு.

"இடுக்கண்வந் துற்ற காலை
எரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி
நகுகதா நக்க போழ்தவ்

விடுக்கணை யரியு மெல்கா
மிருந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாணமை
வருபவந் துறங்க என்றே."

இன்பத்திற் களித்தலும், துன்பத்திற் றுயர்தலும் கல்லாதார இயல்பு. கற்றுயர்ந்த ஆதிரைக்கு இது தகவாகாது. ஆதிரையின் உளத்தைத் துயர்ப்படுத்தியதெனில், அதற்குரிய காரணமும் பொருள் பொதிந்ததாதல்வேண்டும். ஐயையே! இதற்குக் காரணம்தான் யாது?

ஐயை: அடிகள்போன்ற முழுதுணர் மெய்யறிவாளர் கட்கே அடிகள் உரைத்தமை பெரிதும் பொருந்துவதாம். அத்தகைய மெய்யறிவாளர் எங்கே! எளியேமாகிய யாம் எங்கே? பெரியீர்! இன்று ஆதிரையின் ஆருயிர் அவள் உடலகத்தைவிட்டு அயலிடம் சென்றுளது. அவள் வெற்றுடல்மட்டுமே இங்குளது!

[தவமுதுமகள் சிறிது சிந்தனை செய்பவள்போன்றிருந்து]

தவமுதுமகள்: ஓ! ஓ! அறிந்துகொண்டேன்; அப்படியா? "அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்" என்பது வள்ளுவர் வாக்கன்றோ! ஆதிரை நீ உன் கணவன் பிரிவாற்றாமையால் வருந்துகின்றாய்போலும். அவர் எங்குச் சென்றுள்ளனர்?

ஆதிரை: பெரியீர்! அரசியலார் கட்டளையை மேற்கொண்டு யாண்டோ அயலிடம் சென்றுள்ளார்.

தவமுதுமகள்: அறிவுடைய நங்கையே! இதற்கோ இத்துணை இன்னல்! அவர் கடமையை அவர் செய்ய நீயும் அதற்குப் பொருந்துமாறு இருத்தல் வேண்டாவோ! ஆற்றியிருப்பதுதான் அறிவுடைமைக்கு அழகாகும்; வருந்தற்க! சிறந்த ஆண்மக்கட்குரிய கடமையைச் செய்ய அவர் உன்னை நீத்துச்சென்றாற்

செல்லுக! அங்ஙனமே சிறந்த பெண்மக்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் சீர்குலைந்த இத் தமிழ்நாட்டில் எத்தனையோ ஆயிரம் உள்ளன அவற்றை நாம் செய்தமைதல் வேண்டும். "பெண் அறிவென்பது பெரும் பேதைமைத்தே," என்று ஒரு பழமொழி இத் தமிழ்நாட்டில் வழங்கிவருகின்றது அப் பழமொழி தமிழ்நாட்டு மகளிர்களின் பழிமொழியே ஆகும். அவ் வசைமொழி உன்போன்ற கோழையுள்ளம் படைத்த மகளிர்களாலேயே தோன்றியதாதல் வேண்டும். நன்று நீயிர் இருவரும் அமர்மின்!

ஐயை :

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று."

நல்லதோர் அமயத்தே பெரியீர் இங்கு எளிவந்தீர்! இப்பேதை ஆதிரைக்கு என் தேற்ற உரைகளைக் காட்டினும் தங்கள் உரைகளே பெரிதும் பயன் தந்துள்ளன. தங்கள் வாசகங்களைக் கேட்டபின்னர் அன்றோ, அவள்முகம் சிறிது ஒளிவீசத் தொடங்கியுளது..........

தவமுதுமகள் : அன்புடையீர்! "ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே," என்னும் மெய்ம்மொழியை நீயிரும் அறிவீர். முன்னர் யான் நுங்களைக்கண்டு அளவளாவியது ஒருபொழுதே ஆயினும், நுங்கள்பால் அசைக்கவியலாததொரு நட்புரிமை என் உளத்தில் வேரூன்றிவிட்டது. யான அழகுக்கே அடிமை செய்பவள். அழகே என் கண்கண்ட தெய்வம்! அழகை எவ்விடத்தே, யாரிடத்தே யான் கண்டாலும் அங்கெல்லாம் என் ஆண்டவனையே யான் கண்கூடாக் காண்கின்றேன்! மலரிடத்தே அழகு வதிகின்றது நீல

வான் அழகிது! மலை அழகிது! கடல் அழகிது! காடு அழகிது! அன்பார்ந்த ஐயையே நீ அழகி! ஆதிரை நல்லாளோ அழகின் அழகு! இங்கெல்லாம் என் ஆண்டவனே உறைகின்றான். அன்புடையீர்! இவ்வுலகில் அழகைப் பலபொருள்களிடத்தும் காண்கின்றோமாயினும் முழுமையாக அதனை மக்களிடத்தே தான் யான் காண்கின்றேன். மக்களுள்ளும் ஆடவரிடத்தினும் பார்க்க மகளிரிடத்தேதான் அழகுத் தெய்வம் பெரிதும் அருள் புரிந்து வதிகின்றது. அவருள்ளும் ஐயையே! இவ் வாதிரையை ஒப்ப அழகுடையாரை யான் என் ஆயுள் அகவையில யாண்டும் கண்டதில்லை!

ஆதிரை: அடிகாள்! என்பாற் கொண்டுள்ள பேரன்பால் எளியேனை மிகைபடப் புகழ்கின்றீர்கள்.

தவமுதுமகள்: மிகையாவது! என் நா, ஒருநாளும் மிகைபடப் பேசிப் பயின்றதில்லை. உன் பேரழகைப் பேசுந்திறம் இன்மையால் குன்றப்பேசி இருப்பினும் இருப்பேன்; அத்துணையே அழகின கருவூலமே! இங்கு என் அருகில் வா. இவ் விருக்கையில் அமர்க! அறிவுடனும், அதனினும சால அழகுடனும் மகளாய்ப் பிறந்த உனக்கும் உன்னினததவராகிய எம் மனோர்க்கும் இன்று இத்தமிழகத்தே ஆற்றவேண்டிய கடமைகள் பற்பல நம் கண்முன்னே குவிந்து கிடக்கின்றன. அவற்றை யாம் செய்தே தீர்தல் வேண்டும். அக் கடமைகளைச் செய்யத் துணைநாடியே நும்பால் யான் வந்துள்ளேன். (இருவருமொன்றும் தோன்றாமல் திகைத்து நிற்க) ஏன்? நான் சொல்வது உங்களுக்கு விளங்கவில்லையா?

ஆதிரை: ஆம்; ஆம்! அடிகளே! உண்மையாகவே தாங்கள் பேசுவதன் பொருள் எனக்குச் சிறிதும் தோன்றவில்லை! அடிகளுடைய வாசகங்களைத் தெரிந்து கொள்ளும் அளவு எளியேங்கட்கு அறிவு இருத்தல் இயல்பன்று.

தவமுதுமகள் : ஆம் நான் கூறுவது இந் நாட்டிற்கே ஒரு புதிய கொள்கை ஆகும். அதனாற்றான் நுமக்கு அது நன்கு விளங்கவில்லைபோலும்! அதனை விளங்கும்படி கூறுகிறேன் கேளுங்கள்.

ஐயை : நன்று ; நன்று! பெரியீர் என் விண்ணப்பமும் அதுதான். எளிய எம் அறிவுக்குப் புலப்படுமாறு அடிகள் பேசுதல்வேண்டும்.

தவமுதுமகள் : அன்புடையீர்! நம் செந்தமிழ் நாட்டில் பண்டைக் காலத்தே நம் மினத்தவராகிய மகளிர்கள் அறிவாற்றலால் சிறந்து விளங்கினர் என்னும் வரலாற்றை நீயிர் நன்கு அறிவீர் அன்றோ?

ஆதிரை : அறிவோம்; ஔவை முதலிய புலமை மிக்க பெண்டிர் பலர் நம் தமிழகத்தே பண்டிருந்தனர்.

தவமுதுமகள் : அத்தகைய இந்நாட்டில், நம் இனத்தவராகிய மகளிர் எழுத்தறிவற்ற எளியவராய்க் கிடந்துழல்கின்றனர். ஔவை முதலிய புலமையாட்டியர் தோன்றிய நம் தமிழகத்தே, நம் மகளிரின் முன்னேற்றம் கருதி யான் ஒரு தொண்டுசெய்ய நீண்ட நாள் ஆராய்ந்து, அத்தொண்டினைச் செய்வதொரு நெறியையும் நன்கு ஆராய்ந்து தெளிந்துகொண்டேன். மேலும் அத்தொண்டு நன்கு நிகழுமாறு ஒப்பற்றதொரு துணைவலியும் இப்போது வாய்த்துளது. ஆதலால்! அத் திருத்தொண்டினை ஆற்றுதற்கு ஏற்ற இப்போது ஆவன செய்தற்கு அறிவுடைய பெண்ணினத் தொண்டர்கள் பலர் என்னுடன் ஒத்துழைக்க இன்றியமையாது வேண்டப்படுகின்றனர். ஆதிரை நல்லாய்! வீடென்னும் இச் சிறைக்குள்ளேயே பதுங்கிக் கிடந்து, நும்போன்ற அறிவுடைய மகளிர்மணிகள் வாணாளை வீண்போக்குதல் அழகன்று. இந்த நற்செயலில் என்னோடு நீயிரும் பங்கு கொள்ளுமாறு வேண்டுகின்றேன்.

ஐயை. பெரியீர்! நம் தமிழ்ப் பெண்மணிகள் முன்னேற் றங் கருதித் தாங்கள் எவ்வாற்றால் தொண்டுசெய்ய எண்ணியுள்ளீர்? அத் தொண்டில் எம்மனோர் செய் யும் பணிகள் எத்தகையன?

தவமுதுமகள்: ஐயை! நீ மிக்க அறிவுடையை; அப்படிக் கேள். நம் நாட்டில் இப்பொழுது புதுவதாக முடி புனைந்து கோலோச்சும் அரசர் பெருமான் நரேந் திரனை நீயிர் இருவீரும் நன்கு அறிவீர்கள் அல்லிரோ?

ஐயை: விசயதசமி விழாவில் புதியமன்னர் ஊர்வலக் காட்சியைக் காண, யானும் ஆதிரையும் வேறு சில ரும் சென்றிருந்தோம்; அன்று அரசியல் அதிகாரிகள் அனைவருமே உயரிய உடைகளுடன் திகழ்ந்தனர். யாங்கள் புதிய மன்னரைப் பார்க்க முயன்றும் அப் பெருங்குழுவில் அரசர் யாரென அறிந்துகொள்ள இயலவில்லை; புதிய அரசரைப்பற்றி வேறெதுவும் யான் அறிந்ததில்லை!

தவமுதுமகள்: ஊம்; இத்துணையோ நீ அரசரைப்பற்றி அறிந்துளது? நம் நாட்டின் மகளிரின் அறிவையே ஆண் மக்கள் இங்ஙனம் பாழ்படுத்திவிட்டனர். அன்பே! ஆதிரை! நீ ஓர் அரசியல் அதிகாரியின் மனைவியாகலின், நம் அரசர்பெருமானைப்பற்றி நன்கு தெரிந்திருப்பாய் என்று எண்ணுகிறேன்.

ஆதிரை: அடிகளே! நம் அரசரைப்பற்றித் தோழி ஐயை அறிந்துளள அத்துணையே யானும் அறிந்துள்ளேன். அதுகிடக்க, நுங்கள் தொண்டுக்கும் அரசருக்கும் தொடர்பு யாதுளது?

தவமுதுமகள்: சிறந்த செயல்களைச் செய்து நிறைவேற்ற வும், அவற்றால் உறுபயனை எய்துதற்கும், அரசியலார் தம் ஒத்துழைப்பு மிகமிக இன்றியமையாததாகும்.

"ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு"

என்ற மெய்ம்மொழி நாட்டின் நலன் கருதுவோர்க்கு அரசியலாருடன் தொடர்பும், அவர்தம் துணையுடைமையும் வேண்டும் என்பதையும் கூறுகின்றது. 'அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்' என்பதும் முதுமொழியன்றோ? இந்நகரத்திலுள்ள அரண்மனையில் இதற்கு முன்னர் எத்துணையோ சிறந்த அரசர்கள் வீற்றிருந்து செங்கோலோச்சினர் எனினும், இன்று அவ்வரியணையில் ஏறி அரசு செலுத்தும் நரேந்திரர்போன்ற சிறப்புடைய மன்னர் முன்னர் ஒருவரேனும் இருந்திலர். ஆதிரை! உற்றுக்கேள். மகளிர்களில் உன்னைப் போன்ற அழகுடைய மகள் ஒருத்தியை யான் யாண்டும் கண்டதே இல்லை என்று முன்னர் கூறினேன். அவவண்ணமே ஆடவர்களுள் நரேந்திரர் அளவு உயரிய அழகு படைத்தவர் ஒருவரையேனும இவ் விரிந்த உலகத்தே யான் கண்டதில்லை மகளிரின் அழகென்னும் மலைக்கு நீ சிகரமாகத திகழ்தல் போன்றே, நரேந்திரா ஆடவர்தம் அழகு மலையின் சிகரமாகத் திகழ்கின்றார். இளமை மிக்க நரேந்திர மன்னர் இன்னும் திருமணம் நிகழப்பெறாதவர். முதல் முதல் அப்பெருமகனின் அழகால் என் உளம் கவர்ச்சியை யடைந்ததனால் யான் அவரிடம் அணுகினேன். ஒரே நாளில் அவருடைய அகத்தழகு என்னை முற்றிலும தன்வயப்படுத்திவிட்டது. குணநிறை பெருங் கடலே அன்றோ அவா!

**ஐயை:** அடிகள் பேசத்தொடங்கிய பொருள் இடையே விடப்பட்டது; இப்போது வேறு பொருளை மேற்கொண்டுவிட்டீர்கள். மீண்டும் மகளிர்க்குச் செய்ய எண்ணிய தொண்டுபற்றியே பேசும்படி வேண்டுகின்றேன்.

**ஆதிரை:** 'அரசியலார் உதவிவேண்டும்' அதன் பின்னர்!

**தவமுதுமகள்:** ஐயை! நான் பேசியது அயலானதொரு பொருள்பற்றியன்று. அரசர்பெருமானுடைய முழு மனத்தோடு கூடிய உதவியையும் இத் தொண்டிற்கு

உறுதுணையாக யான் பெற்றுள்ளேன். இத் தொண்டிற்குவேண்டிய பொருள் எவ்வளவு பெருந்தொகையாகவிருப்பினும் தாமே அச்செலவு முழுதும் ஏற்றுக்கொள்வதாக உடன்பட்டுள்ளார். மேலும், இத் தொண்டில் தாமே தலைமை வகிப்பதாகவும் இசைந்துள்ளார். ஆதலாற்றான், இத்தொண்டினை இனிதே ஆற்றத்தகும் காலம் இதுவே என நம்புகின்றேன்.

ஆதிரை : நன்று! அரசர் உதவிபெற்று அதனை எங்ஙனம் நடத்தத் துணிந்துள்ளீர்கள்?

தவமுதுமகள் : நம் அரசர் தலைமையின்கீழ் மகளிர் நலம் கருதி, "தமிழ்நாட்டு மகளிர் முன்னேற்றக் கழகம்" என்றொரு புதிய கழகம் அமைத்துளளேன். அக் கழகத்திற்கென அரசர்பெருமான் ஒரு சிறந்த மாளிகையை நன்கொடையாக அளித்துள்ளார். அக்கழகத் தொண்டர்களாகத் தொண்டாற்ற, ஆதிரை! உன்னைப்போன்ற அறிவும் அழகும் உடைய மகளிர்கள் இப்போது வேண்டும்.

ஆதிரை : அம்மகளிர்கள் அக்கழகத்தில் என்னசெய்தல் வேண்டும்?

தவமுதுமகள் : திங்கள்தொறும் அங்கு மகளிர் கூட்டம் நிகழும். அக்கூட்டத்தே நம் போன்றோர் சிறப்பாக நந் தமிழ்நாட்டின் மகளிர்க்கு, எவ்வாறு ஊர்கள் தோறும் மகளிர் பள்ளிகள் நிறுவி, அவற்றில் எவ்வாறு அவர்கட்குக் கல்வியறிவைப் புகுத்தல்வேண்டும் என்பதுபற்றி ஆராய்ந்து முடிவுசெய்தல்வேண்டும். அக் கூட்டத்தே மகளிர்கள் கூடி முடிவுசெய்தவைகளை அரசியலார் ஏற்று அவ்வாறே பள்ளிகள் அமைப்பர். மேலும், மகளிர் நலத்தைமட்டுமே ஆராய்தற்கு நம் அமைச்சர் குழுவில் ஓர் பெண்பால் அமைச்சரை அமைத்தல்வேண்டும் என்றும், அப்பெண் அமைச்சர்க்குத் திங்கள்தோறும் ஓர் ஆயிரம் வெண்பொற்காசுகள் ஊதியமாக அளிப்பதாகவும் நம்

அருள்மிக்க அரசர்பெருமான் உடன்பட்டுள்ளனர். இவ்வாற்றால் செய்யவிருக்கும் நன்மைகள் இன்னும் பற்பலவுள்ளன. ஆதிரை நல்லாய்! இத்தகைய திருத் தொண்டில் நீ ஒரு சிறந்த இடத்தை அடைவாய் என்றும் யான் நம்புகின்றேன்.

ஆதிரை: பெரியீர்! தங்களை ஒத்த துறவியர்கட்கே இந் நெறி பொருந்தும் என்று நினைக்கிறேன். என்னைப் போன்ற இல்லறத்துள்ள மகளிர்க்கு இதற்கெல்லாம் காலம் பெறுதலே அரிதாம்.

தவமுதுமகள்: அறியாமை! ஏன் காலம் பெறுதல் இய லாது? இக்கழகத்தே ஈடுபட்டுழைக்கும் மகளிர்க்கு வேண்டிய அளவு ஊதியம் அளிப்பதற்கு, நம் அரசர் பெருமான் மகிழ்ச்சியோடு உடன்பட்டுள்ளார். மேலும், நம் அரசியல் அவையில் பெண் அமைச்ச ராக உன்னையே அமைக்கும்படி உன் அறிவுத்திறனை யெல்லாம் அரசர்பெருமானுக்கு நன்கு எடுத்துக் கூறியுள்ளேன். அவர்தாமும் நம் தமிழ் மகளிர்களில் அத்துணை அறிவுடையோரும் உளரோ என்று பெரி தும் வியப்புற்றனர். அவ்வதிகாரம் உனக்குக் கிடைக் கும் என்பதில் எட்டுணையும் எனக்கு ஐயமின்று. உன் தோழி ஐயையைக்கூட உனக்குக் கீழே ஓர் அதிகாரியாக அமைத்துக்கொள்வாய். திங்கள் ஒன் றிற்கு ஆயிரம் வெண்பொற்காசுகள் ஊதியம் கிடைக் கும். நன்கு ஆராய்ந்துபார்! உன் வீட்டு வேலை களைச் செய்தற்குவேண்டிய பணிப்பெண்களை அமைத்துவிட்டால் அவர்கள் நீ செய்யும் அட்டில் வேலை முற்றும் நன்கு செய்துவிடுவர். பின்னர் உனக்கு இதில் தொண்டாற்றத் தடை யாதுளது?

ஆதிரை: பெரியீர்! இவ்வழி முயன்று நம் தமிழ்நாட்டின் மகளிர்களைக் கல்வியறிவுடையவராக ஆக்கிவிடுதல் இயலுமோ; இயலாதோ? அதுபற்றி யான் சிந்திப்ப தற்கு முன்னர்த் தாங்கள் கூறும் நெறி சிறந்த

தாகவே இருப்பினும், என்போன்றார்க்கு ஒவ்வாதென்றே என் நெஞ்சம் நன்கு கூறுகின்றது. தாங்கள் காட்டும் நெறியில் செல்வதானால் முதலில் யான் எனக்குரிய தலையாய கடமைகளை விட்டுவிடல் இன்றியமையாததாகின்றது.

தவமுதுமகள்: ஆதிரை! ஏன் அப்படி எண்ணுகின்றாய்? நீ எந்தக் கடமைகளையும் ஏன் விடவேண்டும்?

ஆதிரை: பெரியீர்! ஒரு குலமகட்குரிய கடமை அமைச்சராதலும், கழகங் கூடுதலும் ஆகுமோ? அவள் தன் இல்லத்தே இனிதிருந்து வினைமேற்சென்று மீளும் தன் காதலனுக் கியற்றவேண்டிய பணிகளை நன்கு இயற்றலும், அவளுடைய இல்லத்திற்கு வந்துற்ற அறவோர் அந்தணர் துறவோர் விருந்து என்னும் இவரை நன்கு பேணலும் ஆகும். இக் கடமைகளையே நந் தமிழ்நாட்டு மகளிர் விளக்காகிய கண்ணகியாரும் ஓரிடத்தே தம் பொருண்மொழியாலே,

"அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந் தெதிர் கோடலும்"

என அழகாக விளக்கிப் போந்தார். இன்னோரன்ன கடமைகளைக் காற்றிலே பறக்கவிட்டு, அவள் வேறு யாருக்கு எந் நன்மையைச் செய்துவிடுதல் கூடும். என் இல்லத்திருந்து என் கணவற்கு நன்கு அடிசில் செய்தூட்ட அவர் இனிதென உண்ணுதலைக் கண்டு யான் மகிழும் மகிழ்ச்சி, ஆயிரம் வெண்பொற்காசுகள் எனக்கு அளிக்கவல்லன அல்ல. மேலும் வெளியிற்சென்று ஈட்டுதல் ஆடவர்க்குரிய கடமை; மகளிர்க்குத் தம் கணவன் வளத்தக்காளாய் இல்லிருந்து அறம் ஓம்பலே கடமை என்று எனக்குத் தோன்றுகின்றபடியால், பெரியீரின் அறிவுரைகள் எனக்கு விளங்கவில்லை. எனவே, இப்பேச்சை விடுத்து வேறு ஏதேனும் நன்மொழிகள் உளவேல் உரைத்தருள்க.

**ஐயை :** பெரியீர்! இம் மொழிகள் எனக்கும் பிடிக்க வில்லை. தாங்கள் திருவாசகம், தேவாரம முதலிய இசைப் பாக்களில் ஏதாயினும் ஓதி அவற்றின் பொருள்களை விளக்குவீராயின் நன்றென்று நினைக் கிறேன்.

**தவமுதுமகள் :** ஆதிரை! இது நம மகளிர்பால் நிறைந் துள்ள அறியாமையே யாகும ஆடவர்கள் பெரும் பாலும் நம் மகளிர் இனத்திற்கு இவ்வாறே அறி வுறுத்தி, அவர்தம் நல்லறிவைக் கெடுத்துவிட்டனர். பெண்டிர்கள் இல்லினுள்ளேயே கிடந்து அவர்களுக்கு வேண்டிய பணிகள்புரிவதே கடமை என்றும், அவர்கள் வெளியுலகததே வேறு கடமைகளை ஆற்ற உரியவர் அல்லர் என்றும அறிவுறுத்தி அறிவுறுத்தி அவர்களைத் தம் அடிமைகளே ஆக்கிவிட்டனர். ஆட வர்மட்டும் தம் விருப்பம்போல் எல்லாவற்றையும் செய்தல்கூடும். மகளிர்கள் இல்லில் அவர்க்கு அடிமை செய்தலைவிட வேறுயாதும் செய்தல் கூடாதாம். நன்று! நன்று! ஒரு குலத்துக்கு ஒரு நீதி!

**ஆதிரை :** அடிகாள்! பெண்டிர்கள் இல்லததிருந்து கண வன் முதலியோரைப் போற்றுதலே நன்றென்று கூறிய நஞ்சான்றோர், அப் பெண்டிர்பால் வைத்த அருளுடைமையாலேதான் அவ்வாறு கூறினர் ஆதல் வேண்டும்! பொறுமைமிக்க மெல்லியலுள்ளம் படைத்தவரும் மெல்லியலுடல் வாய்ந்தவருமாகிய மகளிர்கள் இல்லத்திருந்து தம் கடமையை ஆற்றத் தகுதியுடையார் ஆவதன்றி வெளியுலகிலே சென்று வெயில் மழை பனிக் காலங்களில் வருந்தும் தன் மைக்குப் பொருந்தியவரல்லர் வல்லியல் ஆட வர்க்கு அவை பொருந்துவனவே ஆகும். மேலும், ஆண்மக்கள் தம் மனம்போனவாறு வரையறையின்றி ஒழுகலாம் என்று சான்றோர் யாரும் கூறியதில்லையே;

**தவமுதுமகள் :** நன்று! ஆதிரை நம் குருதியிலேயே ஊறிக் கிடக்கும் இவ் வடிமைக்குணத்தை என்னுடைய

ஒரு பொழுதை அறிவுரைகள் திருத்தி விடுதலும் இயல்பன்று நல்லதொரு செவ்வி! நல்லதொரு வாய்ப்பு! என் வேண்டுகோட்படி நீ நடப்பாய் ஆயின், இத் தமிழகம் முழுதுமே நின்னைப் போற்றும! இத் தமிழ்நாட்டின் மடந்தையர்க்குத் திலகமாய் நீ விளங்குவாய்! நம் மகளிரின் மூடவழக்கங்களை உதறித் தள்ளிவிட்டு, நம் மாபெருந் தொண்டினை எதிர்பார்த்துக் கிடக்கும் நம் இனத்தாராகிய மகளிரது தாழ்ந்தநிலையை மனதின்கண் வைத்து, அவரை முன்னேற்ற முயல்வது எத்துணைச் சிறப்பென்பதை நீ உன் தோழி ஐயையுடன் ஆராய்ந்து, பின்னர் உன் மறுமொழியை எனக்குக கூறுக. எனக்கும் நமது கழகத் தொடர்புடைய வேலையின் பொருட்டு வேறோர் இடம் செலலவேண்டிய கடமை ஒன்றுளது ; நான் சென்றுவருவேன்.

**ஆதிரை :** அங்ஙனமே சென்று வருக!

## காட்சி ௫

**இடம்:** அரண்மனை.

**உறுப்பினர்:** அரசன், அமைச்சன், சித்திராபதி.

**காலம்:** பிற்பகல்.

[சித்திராபதி அரண்மனையை நோக்கி வந்துகொண்டிருக்கிறாள்.]

**சித்திராபதி:** (தனக்குள்) சீ சீ! எத்துணை ஏமாற்றம்! என்னுடைய நீண்ட சொற்பொழிவுகள் அனைத்தும் செவிடன் காதில் ஊதிய சங்கொலியாய் ஒழிந்தன! மூலையிற் கிடக்கும் ஆதிரையை முற்றத்தே இழுத்து அரசன்பால் மெல்ல மெல்ல அழைத்துச்சென்று அவளை அறிமுகப்படுத்தி, உலக ஆரவாரங்களிலே அவள்தன் ஆசையை விரியச்செய்து நம் வழிக்குக் கொண்டுவர யான் எத்துணை முயன்றும் பயன்படாதொழிந்தது. ஆதிரையோ குலப்பிறப்பினளாகிய தன் இயல்பில் கலங்காத திண்மையுடையவளாய்க் காணப்படுகின்றாள். நான் அவட்குக் காட்டிய ஆரவாரநெறிகளில் ஒன்றிலேனும் அவள் உள்ளம் நெகிழ்ந்து சென்றிலது. உலகப் புகழ்! உலகத் தலைமை! அரசன் இணக்கம! அமைச்சர் பேறு! பொருட் பேறு! ஆ எத்துணை மாண்புடைய நலன்கள்! இவையிற்றில் ஒன்றிலேனும் அவள் அவா இவர்ந்திலது. இம்மட்டோ! யாரிடத்தும தோலாத என்னை என் நெஞ்சகம் அறியச் சொல்லாட்டத்தில் தோல்வியே கண்டாள். அவள்பால் யான் தோற்றமை நினைந்து என்னுள்ளம் மிக மிக நாணுகின்றது. பேதையே இரு! இரு! உன்னுடைய அமைதிக்குக் காரணமான உன் கணவன் வீரசிம்மன் ஆருயிர்க்கும், உன் வாழ்விற்கும், உன் செருக்கிற்கும ஒருங்கே இதோ உலைவைக்கிறேன்! இச் சித்திராபதியின் சூழ்ச்சிவன்மையால் நீ உன் கணவனை இழந்து,

உனது வாழ்வின் அமைதி குலைந்து துயரநெருப்பில் எடுப்பாரின்றி வேகும்பொழுது, இச் சித்திராபதி தன் வலியகையை நீட்டுவாள்! நீ அப்பொழுது அக் கைகளை ஆவலுடன் பற்றிப், "பெரியீர்! இனி எனக்கு உய்யும் வழிகாட்டி யருள்க," என்று அவள் அடிகளிலே தஞ்சம புகுவாய். அப்பொழுது இச் சித்திராபதி தன் செயலுக்கு வெற்றிகண்டு இறுமாப் புடையவள ஆதலும் திணணம். அடி பேதையே! பார்! சித்திராபதியின் திறத்தை!

[அரண்மனையுட் புகுந்து அரசனை வணஙகுகின்றாள். ஆங்கு அரசனுடன் அமைசசனும் இருப்பதைக் காணகிறாள்.]

**சித்திராபதி :** பெருமான் வாழ்க! அடிச்சி சித்திராபதி வணக்கம்.

**அரசன் :** வருக! சித்திராபதி! வருக வருக! உன் வரவு எனக்கு ஆக்கம் அளிப்பதாக! நன்று; நீ சென்ற செயல் முற்றுப்பெற்றதன்றோ?

**முசலன் :** அரசே! அஃதின்னும் முற்றுப்பெறவில்லை என் பதை அவள் உரைக்குமுன்னரே அவள் முகம் நமக்கு நன்கு விளக்கிவிட்டதே!

**சித்திராபதி :** அமைச்சர் கூறியது உண்மையே எனினும், இனி அச் செயல் முற்றிப் பயன்றரும் என்னும் நம் பிக்கை எனக்குத் திண்ணமாக ஏற்பட்டுளது. அதற்கு மேலும பெருமானுடைய உதவி வேண்டப்படுகின் கின்றது. அவ்வுதவியை நாடியே இப்போது யான் இங்கு வந்துள்ளேன்.

**அரசன் :** சித்திராபதி! ஏன் இன்னும் அவ் வீரசிம்மன் அயலூர்க்குப் போகவில்லையோ?

**முசலன் :** அரசே! இப்பொழுது அந்தப் புலி நம் நாட்டின் வடதிசை எல்லைப்புறத்துள்ள மக்கள் வழங்குத லில்லாத பெருங்காட்டில் அலைந்துகொண்டிருக்கும் என்று எண்ணுகின்றேன்!

அரசன்: பின்னர் என்னை கேடு! பொருள் ஏதேனும்........

சித்திராபதி: அரசே! யான் இப்பொழுது, எண்ணியது எண்ணியாங்கு அளிக்கும் கற்பகமரத்தின் நிழலில் அன்றே வதிகின்றேனா! பொருள் முட்டுப்பாடு ஒரு சிறிதும இல்லை! நம்மால் குறிக்கொள்ளப்படுகின்ற ஆதிரை அழகில்மட்டும் ஈடற்றவள் அல்லள்; குணத்தாலும் ஒப்புயர்வற்றே திகழ்கின்றாள். எதனாலே தான் அவள் திண்ணிய கற்புடையாளாயினும இச் சித்திராபதியால்...........

அரசன்: ஏடி சித்திராபதி! நீ ஏன் மிகையாகப் பேச்சை வளர்க்கிறாய்? அவள் அவ்வாறிருத்தலால் அவளை நம்பாற் கொணர்தல் உன்னால் இயலாததொன்று என்றுதானே சொல்லப்போகின்றாய்.

முசலன்: அரசே! சித்திராபதி தன் இயலாமையை இப்பொழுதே கூறிவிடுவாள் ஆயின் மிகநன்று. பின்னர் இம் முசலன் இச் செயலில் ஈடுபட்டு முயலப் பின்னில்லான். இச்சிறு செயலை ஆற்றி வெற்றிபெற இயலாதேல், பின்னர் யாம் எப்படி ஒரு அரசியலை நடத்த வல்லுநர் ஆவோம்?

சித்திராபதி: அமைச்சர் பெருமான், அடிச்சிபால் தயை கூர்ந்து யான் கூறுவதைச் சிறிது பொறுமையுடன் கேட்டருளவேண்டும்

அரசன்: நல்லது சித்திராபதி! நீ இப்போது என்ன முடிவு கூறப்போகிறாய்? அதனை விரைந்து கூறிவிடு!

சித்திராபதி: ஆதிரையைப் பெருமான் அடியிணைக்கீழ் கொணர்ந்துவைத்துப் பெருமான் அடிகளில் வீழ்ந்து வணங்காவிடின் இவ்வுலகில் உயிர் வாழ்வதில்லையென்று அடிச்சி முன்னரே சூள்மொழிந்துள்ளேன். இப்பொழுது பெருமான்முன்னும் அங்ஙனமே சூள் மொழிகின்றேன் எனினும் அச்செயலை முற்றுவிப்பதில் அரசருடைய ஒத்துழைப்புமட்டும் மிக இன்றி

யமையாததாகும் இவ்விண்ணப்பத்தை இப்பொழுது பெருமானுக்குமுன்பு வைக்கின்றேன். இச் செயலாற்றுதற்கு இன்றியமையாத உதவியைப் பெருமான் அவ்வப்போது செய்தருள்வதாக உடன்பாடு அளித்தலவேண்டும்.

அரசன்: சித்திராபதி! நீ அவளை என் முன்னர்க் கொணராவிடில் உயிர் வாழேன் என்று சூள் மொழிந்துள்ளாய்! சூள்மொழி யின்றியே அவளை யான் பெறு தொழியின் என் ஆவியார் என் உடலைநீத்துத் தானே புறம் போய்விடுவார் என்பது நீ இன்னும் அறிந்திலையோ? ஆதிரையின் பொருட்டு உனக்கு யான் யாது செய்தலவேண்டும்? அதனை இப்பொழுதே சொல்; அங்ஙனமே யான் செய்வேன்! சொல்.

சித்திராபதி: அரசே! முரடன் ஆகிய அவ் வீரசிம்மனைக் கணவனாக எய்தியிருப்பதில் மிக மிக அவ் வாதிரை செருக்குடையள் ஆக இருக்கின்றாள். அரசே! அவ் வீரசிம்மனைவிடத் தாங்கள் சிறப்புடையர் அல்லர் என்று அப் பேதை மொழிந்தபோது, என் செவியகம் தீய்ந்துபோயிற்று. ஆதலால் அவளை இன் சொற்களால் அறிவுறத் தெருட்டி நம் வழிக்குக் கொண்டுவருதல் இயலாதென்று தோன்றிவிட்டது. இனி அதன்மேல் அவளை உய்ந்து கரையேறவொண்ணாத துயரப் பெருந்தீயில் தள்ளி, அப்புறம் நம் வழி வந்தாலன்றி உய்தி பிறிதில்லை என்று நன்கறியக் காட்டினாலன்றி இச் செயல் நன்கு வெற்றியுறுதல் இயலாது. ஆதலால், இத்துணைக்கும் பெருமான் உடன்பாடு வேண்டும்.

முரலன்: சித்திராபதி! நம் அரசர்பெருமான் முடியேற்ற பின்னர், ஒன்றை அவாவி அதனைப் பெறவேண்டும் என்று முயல்கின்ற முதல் முயற்சியாகும் இது. ஆதலின், இதன்கண் தோல்வியுற்றால் பின்னர் நம் பெருமைதான் என்னாம்? ஏடி சித்திராபதி! ஆதிரையைப் பெறும்பொருட்டு நம் அரசியலுறுப்புக்கள்

அனைத்தும் பயன்படுத்தவேண்டுமா ? ஆயிற் கூறு! இப்பொழுதே பயன்படுத்துவோம். அன்றி, அவ்வீர சிம்மனைச் சிறைப்படுத்தவேண்டுமா ? சொல் ! இன்றே அவன் சிறையகத்தே கிடந்து தவிப்பதைக் காண் ! ஏன் ! அம்மறவனைச் செருக்குடைய அவ் வாதிரையின் கண் முன்னரே ஊன் சிதைய வாளான் அரிந்து கொல்லுதல்வேண்டுமா ? கூறு ! இன்றே அங்ஙனம் ஆதலைப் பார் !

அரசன் : சித்திராபதி ! ஆம் ; ஆம்! உண்மையே நம் அமைச்சர், யான் உனக்குக் கூறவேண்டிய எல்லாம் தம கூர்த்தமதியால் நன்கு கூறிவிட்டார். ஆதிரை யின்பொருட்டு எதுசெய்யவேண்டும் எனினும் யாம் அமைந்துளேம். இப்பொழுது செய்யவேண்டுவ தென்னை ? அதனைச் சொல். அப் பேதை ஆதிரை என்னைவிட என் அடிமைக்கும் அடிமையாகிய எளிய அவ்வீரசிம்மனை உயர்வாக மதிக்கின்றாளா ? நன்று ; நன்று ! நம் முன்னர் அவ்வீரசிம்மன் எத்துணை எளியன் என்பதை அவளறியச்செய்தல் இன்றியமை யாததாகும். நன்று! இப்பொழுது என்செய்தல் வேண்டும் ? அதனை இயம்பு !

சித்திராபதி : அரசர்பெருமானும், அமைச்சரும் இவ்வண்ணம் ஆயின், இனி யான் என் சூளுரையை முடிப்பது முக்காலும் திண்ணமே ! அரசே ! ஆதிரை மெல்லி யல் உள்ளம் படைத்தவளாதலின் பேரிடி இடிததாற் போன்று துன்பம் அவளைத் தாக்கும்படி செய்து விடுதலும் தகவன்று. பெருந்துயர் தாங்காதே ஒரு கால் அவள் உயிர்நீப்பவும் கூடும் அன்றே ! அங்ங னம் ஆயின், வெண்ணெய் திரண்டுவரும்பொழுது தாழியுடைந்த தன்மையாய் முடியும். ஆதலின், அவளைப் படிப்படியாய்த் துன்பக்கேணியுள் இறக்கு தல்வேண்டும்.

அரசன் : ஆம் ; ஆத்திரம் உண்மையால் ஆராயாது யாம் கூறிவிட்டோம். சித்திராபதி ! நீ ஓர் சிறந்த அமைச்

சர் அளவு மதிநுட்பம் உடையவளாக இருக்கிறாய். நீ எவ்வண்ணம் செய்யச் சொல்கின்றாயோ, அவ்வண்ணமே அமைதியுடன் செய்ய உடன்படுகின்றேன்.

முசலன் : ஆம் ; அரசர்பெருமானே ! சித்திராபதி சிறந்த அறிவுததிறன் உடையவள் என்பதில் ஐயமில்லை. பாம்பின் கால் பாம்பறியும் ; பெண்ணின் தன்மையைப் பெண்ணே நன்கு அறியவல்லள். ஆதலின், ஆதிரையின்பொருட்டுச் சித்திராபதியின் சொற்படியே யாம் நடந்துகொள்ளலே நன்று சித்திராபதி! நல்லது. இப்பொழுது யாங்கள் எவ்வாற்றான் உதவி செய்தல்வேண்டும் சொல்? அங்ஙனமே செய்கின்றோம்

சித்திராபதி : பெருமானே ! அவ்வாறாயின், இனி யான் சொல்வேன். முதலில் வீரசிம்மனைத் தலைபூட்டி யாதானுமோர் பெருங்குற்றத்தை அவன் செய்தானாக, அவன் தலைமேலேற்றிச் சிறையிடைத் தள்ளுதல் வேண்டும். அங்ஙனம் அவன்பால் ஏற்றும் குற்றம் கொலைத்தண்டனைக்கு உரியதாகவும இருத்தல் வேண்டும். பின்னர், யாம் செய்யும சூழ்ச்சி நம் குடிமக்கட்குப் புலனாகாவாறு, வீரசிமமன் இக்குற்றததை இவ்வாற்றால் செய்தான் என நகரில் உள்ளாரும், பிறரும் அறியுமாறு முரசறைந்து தெரிவித்தல்வேண்டும். அதன்பின்னர், ஆதிரை இல்லத்தை விட்டு எங்கேனும் அயலிடங்களில் உள்ள உறவினர் இல்லங்கட்கு ஓடிவிடாமலும், அவள் இல்லத்தே உறவினர்கள் வந்து நிறைந்துவிடாமலும், அவளை அவள் இல்லததேயே வைத்து நம் காவற்படை மறவரைக் கொண்டு முற்றுகையிட்டுக் காத்தல்வேண்டும் அங்ஙனம் ஆதிரை வீட்டை அரசியலார் முற்றுகையிட்டிருப்பதற்குக் காரணம், வீரசிம்மன் வழக்கில் வென்று வெளியேறுந்துணையும் வீரசிம்மன் மனைவி, இல்லம் முதலியவற்றைத் தம் கண்காணிப்பிலேயே வைத்துப் போற்றுவதே என்று நம் குடிகள் நினைக்

கும்படி இச்செய்தியையும் குடிமக்கட்கு ஓர் தந்திரத்தால் அறிவித்தல்வேண்டும். இவைகளே தாங்கள் இப்பொழுது செய்யற்பாலனவாம்.

**மூசலன் :** சித்திராபதி ! நல்லதொரு சூழ்ச்சியே சொன்னாய் ! யானும், இவ்வாறு செய்வதென்றே சிறிது முன்னர்ச் சிந்தித்திருந்தேன். இப்பொழுது நம் நாட்டின் வடதிசை எல்லைப்புறத்தில் நம் பகைவர் வருவதாகவும், அவர் வருகையைக் கண்காணிக்கும் பொருட்டு வடக்கே வீரசிம்மன் செலுத்தப்பட்டதாகவும், நம் நகரமக்கட்கு அறிவிக்கப்பட்டுள்ளது. இப்பொழுதோ, எல்லை காவற்பொருட்டு வடதிசைச் சென்ற வீரசிம்மன் நம பகைமன்னருடன் மறைவாக உறவாடி நம் நாட்டைப் பகைவர்க்குப் பிடித்துக் கொடுக்கத் துணிந்து சூழ்ச்சி செய்தான் என்னும் ஒரு மாபெருங்குற்றத்தைத அவன் றலையில் ஏற்றி, அவ்வழி நாளையே அவனைச் சிறையிடைத் தள்ளுவேன் சித்திராபதி ! இனி நீ உன் செயலை எவ்வாறு ஆற்ற வேண்டும் என்பதை நன்கு விழிப்புடன் ஆராய்ந்து செய்யக்கடவாய்.

**அரசன் :** அறிவுசான்ற சித்திராபதி ! இத்தகைய அமைச்சரையும், உன்னையும் அன்பர்களாகப் பெற்ற எனக்கினி யாது குறை ?

**சித்திராபதி :** பெருமான் வாழ்க ! ஆதிரையை அடைந்தே விட்டோம் என்று திண்ணமாக எண்ணுக. அடிச்சிக்கு விடைதந்தருள்க ! வாழ்க மன்னர்பெருமான் !

**அரசன் :** அங்ஙனமே செல்க !

**சித்திராபதி :** அமைச்சர்பெருமான் வாழ்க !

**மூசலன் :** நன்று சித்திராபதி ! நீ செல்வாய். உன் செயலில் விழிப்புடன் இரு.

[சித்திராபதி வணங்கிப் போகிறாள்.]

## காட்சி ௬

**இடம்:** பாண்டிநாட்டின் வடக்கில் காட்டில் உள்ள பாசறை.

**உறுப்பினர்:** வீரசிம்மன், போர்ப்புலி, ஒற்றர்கள், படைத் தலைவன், போர மறவர்கள்.

**வீரசிம்மன்:** ஏடா! போர்ப்புலி! நீ சென்ற பகுதியில் ஏதேனும் அறிகுறிகள் புலப்பட்டனவா?

**போர்ப்புலி:** தலைவரே! வணக்கம். என்னைத் தொடர்ந்து வந்த இருபது மறவர்களுடனே நமது எல்லைப்புறம் பத்துக் காவதத் தொலைவும், நான்கு நாள்கள் இடையறாது ஆராய்ந்து பார்த்துவிட்டேன். யாண்டும் ஒரே அமைதி! அமைதி! அமைதி! எங்குச் சென்றாலும் அமைதியைக் காண்டலின்றி பகைவரைப் பற்றி ஓர் எட்டுணைச்செய்தியேனும் எங்கட்குக் கிடைத்திலது.

**வீரசிம்மன்:** அன்பனே! யானும், நம் ஐபங்கு ஒற்றர்களை நம் நாட்டின் வடாது திசைக்கண் உள்ள வேற்றரசர் நாடுகளின் ஊடே சென்று, கலாம் விளைதற்குரிய அறிகுறிகள் யாதேனும் காணப்படுகின்றனவா என்று ஆராய்ந்து ஒற்றிவருமாறு ஏவினேன். அவர்கள் அங்ஙனமே சென்று ஆராய்ந்து பார்த்ததில், நம் நாட்டின்மேற் சேறற்குரிய ஒரு சிறு அறிகுறியேனும் ஆண்டுக் காணப்படவில்லை என்று இன்று காலையில் மீண்டும் வந்து எனக்குக் கூறினர். (ஒருவர் வருகிறார்) ஓ! இதோ நம் நண்புகையாரும வந்துவிட்டார். (வந்த துறவி வீரசிம்மனை வணங்குகின்றார்) வருக; வருக! முனிவர்பெருமானே! வருக! நும் தவநிலை எவ்வாறுளது?

**துறவி:** தலைவரே! வணக்கம். யான் சென்று நமது மாணாக்கர்களை நன்கு ஆராய்ந்து பார்த்தேன். அவர்கள் அனைவரும் காம வெகுளி மயக்கங்கள் ஒருசிறி

தும் இல்லாதவராய், அமைதியுடையராகவே காணப் படுகின்றனர். மேலும், அரசர் முதலிய அனைவரும் நம்பால் நன்கு மதிப்புடையராய் நன்கு வழிபாடியற்ற வும் இயற்றினர் ஆதலின், அவர்களை ஒருசிறிதும் ஐயுறற்கு இடமின்று.

**வீரசிம்மன் :** நுண்புகையாரே! உம்முடைய துறவிக் கோலம் எம்மைக்கூட நமக்கு வணக்கம் செலுத்தத் தூண்டுகின்றது ஆதலின், நும்மை யார்தாம் ஒற்றன் என்று ஐயுறுவார்கள். நீயிர் சென்ற இடங்களிலே ஏதும் நம் பகைவர்கள் நம்பாற் போர் செய்தற்குரிய நிலையில் இல்லை என்பது திண்ணமாக நும்மாற் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது அன்றோ?

**நுண்புகையார் :** ஆம் ஐய! நம் பகைமன்னர்கள் அரண் மனைக்குள்ளும் அவர்தம் அமைச்சர்தம் இல்லங்களி லும் யான் இக்கோலத்தோடு தடையேதுமின்றிப் புகுந்து அவரால் நன்கு பூசிக்கப்பட்டதோடுமன்றி, செவ்வியறிந்து அவர்களுடன் பேசி, அவர்கள் நம் நாட்டிற் படையெடுக்கும் கருத்துடையரல்லர் என் பதை அவரறியாவண்ணம் நன்கு தெரிந்துகொண் டேன். மேலும், நம் கோப்பெருந்தேவி இராணி மங்கம்மாளிடத்தும் அவர் அனைவரும் நன்மதிப் புடையராயும், அச்சம் உடையராயும் காணப்படு கின்றனர் படையெடுப்பிற்குரிய அறிகுறிகள் சிறி தேனும் யான் யாண்டும் கண்டதில்லை

**போர்ப்புலி :** புகையும் புகற்கரிய நூழையும் புகுந்து ஒற்ற வல்லீர் என்றன்றோ நும்மை நுண்புகையார் என்ற சிறப்புப்பெயரால் எல்லாரும் அழைக்கின்றோம்!

"துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்
தென்செயினும் சோர்விலது ஒற்று"

என்னும் திருக்குறட்கு நீவிர் இலக்காகத் திகழ்கின்றீர்!

நுண்புகையார் : கூற்றமே எதிர்வரினும் அஞ்சாது பாய்ந்து தாக்கும் போர்ப்புலியார் எம்மைப் புகழ்தலை யாம் பெருமையுடன் ஏற்றுக்கொள்கிறோம்!

"அவமதிப்பும் ஆன்ற மதிப்பும் இரண்டும்
மிகைமக்களால் மதிக்கற் பால"

அன்றோ ?

வீரசிம்மன் : அன்பர்களே! நீர வறண்டுபோன இக் கடுங் கோடைக்காலத்தே, மக்கள் வழக்கற்ற செறிந்த காட்டினூடே, தகுந்த காரணம் ஒருசிறிதேனும் காணப்படாமல் நம் போர்மறவரைக் கிடந்துழலச் செய்வது நம் அரசியலார்க்குச் சிறப்பு நல்கும் செயலாக எனக்குத் தோன்றவில்லை மேலும், இக்காட்டினூடே வதிவதற்கு ஓர் காலவரையறைதானும் இல்லை. போர்ப்புலி! நீ நன்கு ஆராய்ந்து சொல்! யாம் இனி யாது செய்தல்வேண்டும் ?

போர்ப்புலி: நமது கண்ணியமிக்க படைப்பெருந்தலைவர் அவர்கட்கு, 'இங்குப் பகைவர் வழக்கமாதல், கலாமாதல் சிறிதும் காணப்படவில்லை. ஆதலால், நம் மறவரை மீளவும் ஊர்க்கு அழைத்துக்கொள்ளக் கட்டளை உய்த்தல்வேண்டும,' என்று ஒரு முடங்கல் வரைந்து இன்றே உய்த்துவிடுதல் நன்றென்று யான் எண்ணுகின்றேன்.

நுண்புகையார்: நம் புதிய மன்னர் இவற்றையெல்லாம் விழிப்புடன் கண்காணிப்பவரல்லர். போர்மறவர்களைவிட அவரால் காமக்கிழத்தியரே நன்குமதித்துப் போற்றப்படுகின்றனர்.

வீரசிம்மன் : அன்பனே! உன்னுடைய மொழிப்படியே யான் நம் பெருந்தலைவர்க்கு ஒரு முடங்கல் வரைந்து உய்க்கின்றேன். (ஒரு முடங்கல் வரைந்து) ஏடா! சூறாவளி! நீ விரைந்துசென்று இம்முடங்கலை நம் நகரிலுள்ள நம் பெருந்தலைவர் அழும்பில்வேளிடம்

கொடுத்து, அவர் மறுமொழியைப் பெற்றுக்கொண்டு விரைந்து வா!

[வீரசிம்மன் கொடுக்க, சூறாவளி வணங்கிக் கைக் கொள்ளுகிறான். பின்னர் சூறாவளி என்னும் தூதன் விரைந்து புறப்பட, ஏனையோர தத்தம் பாடி வீடுகட்குச் செல்கின்றனர். வீரசிம்மன் மட்டும் தனித்துத் தன் பாடியில் இருக்கிறான்]

**வீரசிம்மன் :** சீசீ! ஒரு கணம் ஓர் ஊழியாகவே எனக்குத் தோன்றுகின்றது. இந்தப் பகுதியில் பகைவர்கள் வந்து வழங்குகிறார்கள் என்றும், போர் நிகழ்தற்குரிய அறிகுறிகள் காணப்படுகின்றன என்றும், ஒற்றர் வாயிலாய் அறிந்துளதாகத் தலைவர் கூறியுள்ளார். அவர் கூறியவண்ணம் ஏதேனும் பகைவர்கள் வருகையை யாம் அறிய நேரினும், அச்செயலிலே யாதல் உள்ளத்தைப் போக்கி, அதனைப் பற்றுக்கோடாகக்கொண்டேனும் காலங்கழிப்பது எளிதாக இருக்கக்கூடும். புலி, கரடி, அரிமா, யானை முதலிய காட்டு விலங்குகளின் முழக்கொலி மிக்க இக்காட்டில் இரவில் ஒரு கணந்தானும உறங்க இயலவில்லை. மேலும், ஆ! அப்பேதை ஆதிரை எப்படித்தான் இந்நாள் களைக் கழிக்கின்றனளோ அறியேன்! செவ்விபெற்று ஒரு கணம் கண்ணை மூடுவேன் ஆயின், அந்தக் கரிய சேல்விழிகள், முத்துக்கூர்த்தன்ன அவ்வெண் முறுவல், காதல் தேங்கிய திங்கள் முகம், இவற்றுடன் ஆதிரை வந்துவிடுகிறாள்! அம்மகிழ்ச்சியில் அவளைத் தழீஇக்கொள்ள முயலும் முன், இப்பாழும் விழிப்பு உடனே வந்துவிடுகின்றது! வெறுங் கை! ஆதிரையின் யாழ்மொழிக்கு மாறாக நெஞ்சு நடுக்குறும் களிறுகளின் பிளிற்றொலி! 'யான் வருந்துணையும் ஆற்றியிரு' என்று அவட்கு உரைத்துவந்தேன். யானே இப்போது ஒருசிறிதும் ஆற்றாதவனாகக் காணப்படுகின்றேன். இதோ மாலைக்காலம் வருகின்றது. அதன் பின்னர் அந்தப் படுபாவி இரவும் வர இருக்கின்றது! என் நிலை இதுவாயின், பேதையே!

உன்னிலே எப்படியோ அறிகிலேன்! மதக்களிப் புடைய களிற்றுயானைகளைச் செலுத்தும்போது அவைகள் தம் வெறுங்கையால் குறும்பு செய்யும் என்று கருதி அவற்றின் துதிக்கைகளிலே கட்டைகளை ஏந்திவரப் பணிபபார்கள் பாகர்கள். நெஞ்சே! நீ மேற்கொண்டுள்ள செயல் பாழ் ஆகி உனக்கு இப்போது இங்கு செய்தற்குரிய அலுவல் ஒன்றேனும் இல்லாமையால் அன்றோ நீ ஆதிரைபால் சென்ற வண்ணமாகவே இருக்கின்றாய்! இருந்தும் நீ பாக்கிய சாலியே! நெஞ்சே! தொலைக்கண் உள்ள இப் பாசறையிலேயே என்னை இன்னலுற விட்டுவிட்டு, நீ மட்டும் ஆதிரையை அடைந்து, அவள் பானலம் கண்களின் எழிலையும், அவள் புன்முறுவலாகிய அரும் பெறல் அமிழ்தத்தையும் அள்ளியள்ளிப் பருகுகின்றாய்! அவள் செந்தாமரை இதழ்போன்ற கதுப்பினை நீ தொடுவதை யான் கண்டு ஏமாற்றமுறுகின்றேனே! என்னே! என்னே!! ஆதிரையை மணந்து கொள்ளும் முன்பெல்லாம் இத்தகைய காட்டினூடே யான் வதிந்துள்ளேன்; அப்பொழுது ஊர்க்குப் போகவேண்டும் என்ற எண்ணமே எனக்குத் தோன்றியதில்லை. புதுவதாகவுள்ள இக்காட்டிற்றோன்றும் காட்சிகளிலே நன்கு பொருந்தி இன்புற்று ஊரை மறந்து திரியும் என்னெஞ்சமோ, அவ்வியத்தகு காட்சிகள் இப்பொழுதும் எண்ணிறந்தன உளவாயிருந்தும், அவையிற்றில் ஒரு கணமும் பொருந்த இசைந்திலது. பகற்பொழுதை ஒருவாறு இம் மறவருடன் அளவளாய்ப் போக்குவல் எனினும், ஆ! இதோ, அக்கொடிய இரவு வரப்போகின்றதே! என்னிலை என்னும்!

[சூறாவளி மீண்டும் விரைந்து ஓடிவருகின்றான். வீரசிம்மன் பாசறைமுன் நின்று]

சூறாவளி: தலைவரே! வணக்கம்; வணக்கம். இதோ; இதோ!

வீரசிம்மன் : யார் ? யாரடா ? சூறுவளியா ? என்னை ? என்னை ? பதறுதே ! அமைதியாகச் சொல்லடா !

சூறுவளி : (தென்றிசையைக் கையாற் சுட்டி) தலைவரே ! இதோ ! அண்மையில் ஒரு பெரும்படை ! ஒரு படை!

வீரசிம்மன் : படையா ! எங்கே ? எங்கே ? எந்தத் திசையிலிருந்து வருகிறது படை ?

சூறுவளி : தலைவரே ! யான் தாங்கள் கொடுத்த முடங் கலைக்கொண்டு விரைந்து நம் நகர் நோக்கி ஓடினேன். வழியில், தெற்குத்திசையில் இருந்து வடக்குநோக்கி அணிவகுத்து ஒரு பெரும்படை ஆரவாரமின்றி வரு வதைக்கண்டு ஓடி வருகின்றேன் !

வீரசிம்மன் : அப்படியா ! அப்படை ஒருவேளை நம் படை யாக இருக்கலாமோ ? இருக்கும் என்று நினைக்க வும் இடமில்லை. ஒருவேளை நம் பகைப்படை நம்மை ஓடிவிடாதபடி இக்காட்டிலேயே வளைத்துக்கொள்ள எண்ணி, நம் நாட்டினுட்புகுந்து அங்கிருந்து ஒலி யவித்து வருவதாகவும் நினைக்கலாம் ஆம்; ஆம் ! அங்ஙனம் இருத்தலும் கூடும் யார் அங்கே ? (இரண்டு மறவர்கள் வந்து வணங்குகின்றனர்) அடே ! நமது எக்காளத்தை விரைந்து முழக்குங்கள் !

[இருவரும் இரண்டு சின்னங்களை ஊதுகின்றார்கள். நான்கு திசைகளிலும் இருந்து நூறு மறவர்களும் ஓடிவந்து ஒன்றுபடுகின்றனர். வீரசிம்மன் ஏதோ கூறுகின்றான். அனைவரும் வாள் முதலிய படை களை ஏந்தித் தெற்குநோக்கியவண்ணம் அணி வகுத்து நிற்கின்றனர். சூறுவளியை நோக்கி]

வீரசிம்மன் : ஏடா சூறுவளி ! அவர்கள் எவ்வளவு தொலை வில் வருகிறார்கள் ?

சூறுவளி : தலைவரே ! இக்காடு முடிவுறும் இடத்திற்கு வந்திருக்கக்கூடும். அவர்கள் மெல்லவே வருகின் றனர்.

வீரசிம்மன் : நன்று ! போர்ப்புலி ! நீ நம் மறவரைச் சமைவுடன் நிற்கச்செய் (நுண்புகையாரை நோக்கி) நுண்புகையீர் ! நீயிர் விரைந்து சென்று அது நம் படையோ, பகைப்படையோ என்பதை இக்காட்டில் மறைந்துநின்றே அறிந்து விரைந்து வருக.

நுண்புகையார் : கட்டளைப்படியே ! (விரைகிறான். சிறிது நேரத்தில் மீண்டுவந்து) தலைவரே ! அஃது நம் படையே ! நமது படைப்பெருந் தலைவர் அழும்பில் வேளே அப்படையை முன்னின்று நடத்திவருகிறார். மறவர்கள் ஏறக்குறைய இருநூறுபேர் இருத்தல்கூடும் என்று எண்ணுகின்றேன். தலைவர் யானையின்மேல் ஊர்ந்து வருகின்றனர் அயலில் இரண்டு குதிரைகளே வருகின்றன. ஏனையோர் காலாட்படையினரே ஆவர்.

போர்ப்புலி : தலைவரே ! ஒருவேளை முன்னர் இங்குப் பகைவர் வந்து போகின்றனர் என்று கூறிய அவ்வொற்றனே, மீண்டும் யாம் இங்கிருப்பதைப் பார்த்துப் பகைப்படையே வந்துவிட்டது என்று கூறியிருப்பானோ ?

[அனைவரும் நகைக்கின்றனர்.]

வீரசிம்மன் : எவ்வாறாயினும் அவர்கள் வந்தபின்னர் முற்றும் அறிந்துகொள்ளுதல் கூடுமன்றோ ?

கூருவளி : தலைவரே ! இதோ, இவ்விடைவழியே நோக்குங்கள் அண்மையில் வந்துவிட்டனர்.

[வீரசிம்மன் உற்று நோக்குகின்றான். மறவர்கள் ஒருவர்பின் ஒருவராய் அமைதியாய் வருகின்றனா. படைப்பெருந்தலைவர் அழும்பில்வேள் யானையில் அமர்ந்து வீரசிம்மன் அண்மையில் வருகின்றான்.]

வீரசிம்மன் : வருக ! தலைவர் பெருமானே வருக! வணக்கம்.

அழும்பில்வேள் : (வீரசிம்மன்பால் முகங்கொடாது யானையினின்றும் கீழே இறங்கித் தன்னுடன் வந்த போர்

மறவனை நோக்கி) ஏடா தெய்வச்சிலை! நீ நம் மறவர்களை இங்கு அணிவகுத்து நிற்கச்செய்! (வீரசிம்மனைக் கடுகடுத்த நோக்குடன பார்த்து) தண்டத் தலைவரே! உம்முடைய அதிகாரத்திற்குரிய அரசிலச் சினைகளையும், போர் உடைகளையும் களைந்து எம்பால் கொடுக்கக்கடவீர்!

வீரசிம்மன்: தலைவரே! ஏன் அங்ஙனம் யான் செய்தல் வேண்டும்?

அரும்பில்வேள்: கட்டளை! கட்டளைப்படி நடப்பதே உம்முடைய கடமை. நீயிர் காரணம் வினவுதற்குரிய இடம் அறமன்றம்; இவ்விடமன்று.

வீரசிம்மன்: ஆயின், கட்டளைப்படியே செய்கின்றேன்!

[உடைகளையும் சின்னங்களையும் களைந்து அரும்பில் வேள் அடியில் வைக்கிறான். வேறு உடை தரித்துக்கொள்கிறான்.]

அரும்பில்வேள்: ஏடா தெய்வச்சிலை! வீரசிம்மன் கைகளிலே தளையிடு! (அவன் சிறிது திகைக்க) ஏன் அடா! ஏன் திகைக்கிறாய்? கட்டளைப்படி செய். இன்றேல்........

போர்ப்புலி: இன்றேல்; தாங்களே அக்கடமையைச் செய்து விடுவீர்களோ?

அரும்பில்வேள்: ஓகோ! நீவிர்தாம் வீரசிம்மனின் தோழன் என்று சொல்லப்படுகிறவரோ?

போர்ப்புலி: தோழன்மட்டும் அல்லன்; ஆருயிர்த் தோழன் என்று கூறப்படுகின்றவன் யான்தான்.

அரும்பில் வேள்: நீயிர் சிறிது மிகைபடப் பேசுகின்றீர் என்று நினைக்கிறேன்.

போர்ப்புலி: நீயிர் பெரிதும் மிகைபட நடத்தலைமட்டும் மறந்துவிட்டீர்.

அழும்பில் வேள் : ஏடா தெய்வச்சிலை! நீ உன் செயலைச் செய். நீ ஏன் திகைக்கவேண்டும்? வீரசிம்மன் கைகளில் விலங்கைப் பூட்டு.

போர்ப்புலி : போர்ப்புலி உயிரோடு நிற்கும்போது அச் செயல் நடைபெறாது.

தெய்வச்சிலை : ஆம் தலைவரே! காரணம் ஒன்றுமின்றி என்னை ஒத்த ஓர் அதிகாரியின் கையில் விலங்கிடுதல் என் மனதிற்கும் தக்கதெனத் தோன்றவில்லை.

அழும்பில் வேள் : இடும் கட்டளை ஒவ்வொன்றிற்கும் காரணமும் உடன் கூறவேண்டுமோ?

போர்ப்புலி : அறம் மறம் ஆராயாது கட்டளைக் கிணங்குவது மெய் மறவனுக்குத் தக்கதன்று.

வீரசிம்மன் : அன்புடையீர்! பொறுத்திடுமின்! ஐய! தலைவர் பெருமானே! இவர்கள் காரணம் கேட்க விரைகிறார்கள். காரணங் காணுமலே நீயிர் எம்மை விலங்கிட வந்துள்ளீர்கள் என்று என்னுல் நம்ப முடிய வில்லை; தயைசெய்து இவர்கள் பொருட்டேனும் காரணம் கூறுவதுதான் அறிவுடைமை என்று எனக்குத் தோன்றுகின்றது

அழும்பில் வேள் : நீங்கள் என்னைக் காரணம் கேட்கத்தக்க அதிகாரிகள் அல்லர். வீரசிம்மரே என் கட்டளைக்குக் கீழ்ப்படியாவிட்டால் உம்மை யாம் வலிந்து விலங்கிட நேரும.

போர்ப்புலி: ஓ! ஓ! ஓ! அங்ஙனம் வலிந்து நீயிர் வீரசிம்மனை விலங்குபூட்டி விடுவீராயின், அப்பொழுது நீயிர் ஓர் ஆண்சிங்கமே!

அழும்பில் வேள் : சீ! சீ! யாரது! நம் மறவர்கள் வருக! வீரசிம்மனை விலங்கிடுக!

**மறவர்கள் :** காரணம் இன்றி நம கட்டளைக்கு யாங்கள் கீழ்ப்படியோம வீரசிமமனை ஏன் விலங்கிட வேண்டும ?

**இருநிறத்து மறவரும் :** வீரசிம்மன் வாழ்க! வீரசிம்மன் வாழ்க! வீரசிம்மன் வாழ்க!

[அழும்பில்வேள் நடுங்குகின்றான்.]

**வீரசிம்மன் :** நண்பர்களே! நம் தலைவரும் நம்மைப்போன்ற ஓர் அதிகாரியே ஆவர்; அவர்க்கு அதிகாரியாயுள்ளவர் கட்டளையிட்டவாறே அவர் நடத்தற்குரியரே யன்றித் தம் விருப்பப்படியே நடக்கும் உரிமையுடையர் அல்லர். ஆயினும், அவர்க்கிட்டுள்ள கட்டளையில் என்னை விலங்கிடுதற்குரிய காரணம் கூறப்பட்டிருப்பதை அவர் நமக்கு நட்புரிமையோடு காட்டியிருத்தல்வேண்டும். அங்ஙனம் செய்யாமை அவர் அதிகாரச் செருக்கைக் காட்டுகின்றது. எனினும் இதன்வாயிலாய் நாம் ஒரு பெருங் குழப்பத்தை ஏற்படுத்தி விடுதலும் கூடாது. ஆதலால் அன்புகூர்ந்து நீங்கள் அனைவரும் அமைதிகொள்ளுங்கள். எப்பொழுதும் அறமே வெல்லும்; மறம் தோற்றழியும் என்பதை நம்புங்கள் நமமுடைய நகரத்திற்கு நம் தலைவராலேயே விலங்கிடப்பட்டு யாம் போவதனால் இழிவு ஒன்றும் இல்லை. அவர் கூறியது போன்றே அறமன்றத்தில் நமக்குரிய நீதி கிடைப்பதாக! அமைக! அமைக! அமைக!

**அழும்பில் வேள் :** வீரசிம்மரே காரணத்தைப் பலர்முன்னர்க் கூறுவது உம் மனதிற்கு ஒருகால் வருத்தம் விளைவிப்பதாக இருக்கும் என்று எண்ணியே யான் கூற மறுத்தேன். நீர் விரும்புவீராயின் இதோ எனக்கு முதல் மந்திரியார் உய்த்த கட்டளையிற் பொறிக்கப்பட்டுள்ள காரணத்தை நான் உங்கள் முன்னிலையில் வெளிப்படையாகக் கூறுகின்றேன். நீயிர் கட்டளைக்கிணங்க மறுத்தாலும் நான் வாளா மீளவும்

வருந்தேன். யானும் உங்களைப்போன்ற ஓர் அதி காரியே!

**போர்ப்புலி:** தலைவர் அவர்கட்குப் பின்புறத்திலேதான் மிக்க மூளை இருக்கின்றது.

[எல்லோரும் நகைக்கிறார்கள்.]

**வீரசிம்மன்:** நன்று! நன்று! அன்பர்களே! நம் தலைவர் உங்கட்குக் காரணம் கூறப்போகிறார்கள் அமைதி யுடன் கேளுங்கள்.

**அழும்பில் வேள்:** (கம்பிய குரலுடன் முதலமைச்சர் கட்டளையைப் படிக்கிறான்) படைப் பெருந்தலைவர் அழும்பில் வேளுக்கு முதலமைச்சரின் கட்டளை யாவது:—நம் நாட்டின் வடவெல்லைக்கண் நம்மால் காவலாக உய்க்கப்பட்ட நூறு மறவர்க்கும் தலைவ னாகிய வீரசிம்மன் என்பார நம் பகைமன்னருடன் உறவுபூண்டு மறைவாகப் பேசி நம்நாட்டை அவர்கள் பால் பிடித்துக் கொடுக்கச் சூழ்ச்சி செய்துளளார் என்னும் செய்தியை நம்பிக்கையுள்ள ஒற்றர்வாயிலாய் யாம் நன்கு அறிந்துள்ளோம். ஆகலின் அச்செய்தி மெய்யோ பொய்யோ என்று உசாவி அறமன்றம் முடிவுகூறுந் துணையும், குற்றம் செய்தார என்று கருதப்படுகின்ற வீரசிம்மனை நீவிர் நமது சிறைச்சாலை யில் வைத்துப் போற்றும்படி உமக்கு இதனால் அறிவிக்கின்றோம்.

இங்ஙனம்,
முதலமைச்சர்
முசலனார்.

**வீரசிம்மன்:** அன்பரீர்! எய்தார் இருக்க அம்பை நோத லாற் பயன் என்னும்! இக் கட்டளையிற் காட்டப் பட்டுள்ள குற்றத்தை யான் செய்திருப்பேனோ அல்லனோ என்பதை என்னுடன் பயிலுகின்ற நீங்கள் நன்கு அறிவீர்கள். என்பால் அழுக்காறுகொண்ட

யாரோ சிலர் இத்தகைய சூழ்ச்சியைச் செய்திருப்பார் எனினும், அத்தகையோர நாளை அறமன்றத்திற்கு நேரில் வருவர் அன்றோ! வந்து இத்தகைய குற்றத்தை யான் செய்ததற்குச் சான்றும் கூறி, அறமன்றத்தலைவரும் நம்மைக் குற்றவாளி என்று முடிவு கூறவேண்டும். அங்ஙனம் செய்யத் தவறினல் நமக்கு இன்னல்செய்ய எண்ணியவர் தாமே தமக்கு இன்னலைத் தேடிக்கொண்டவராவர். ஆதலின, நீங்கள் அமைதியோடு இருங்கள் ; யான் தலைவருடன் சென்று மீள்வேன் !

போர்ப்புலி : அங்ஙனமாயின் நண்பனே உன்னேடு யானும் உன் வழக்கு முடியும்துணையும் சிறையில் இருக்க எண்ணுகின்றேன்.

வீரசிம்மன் : அதற்கு நம் தலைவர் உடன்பாடு வேண்டுமே!

அரும்பில்வேள் : (தனக்குள) இந்தச் செருக்குமிக்க கழுதையையும், தூக்கிட்டுக் கொல்ல நான் முயல்வேன்.

போர்ப்புலி : ஐய! வீரசிம்மனுடன் என்னையும் சிறை செய்யுமாறு வேண்டுகின்றேன்.

அரும்பில் வேள் : (வெளிப்படையாக) ஏன் உம்மீது குற்றம் இல்லாதிருக்கும்போது நீயிர் ஏன் வலியச் சிறை செல்லவேண்டும் ?

போர்ப்புலி : சிறையில் இவருடன் இருக்க எனக்குக் கட்டளை தருதல்வேண்டும்.

அரும்பில் வேள் : நன்று நன்று வீரசிம்மருக்குத் துணையாகச் சிறையில் நீயிரும் இருக்க விரும்பினல், அவ்வாறிருத்தற்கு யான் தடையேதும் செய்யேன்.

**வீரசிம்மன் :** நன்று; புறப்படுவோம்!

**அழும்பில் வேள் :** தெய்வச்சிலையே! நீ நம் மறவருடன் நமது நகரத்திற்கு மெல்ல வரக்கடவாய். நானும் ஐம்பது மறவர்களும், வீரசிம்மனோடு வேறு வழியே செல்வோம்.

**தெய்வச்சிலை :** கட்டளைப்படியே! வணக்கம்.

[அழும்பில்வேளும், வீரசிம்மனும் யானையின்மீது புறப்படுகிறார்கள். தெய்வச்சிலை ஏறிவந்த குதிரையில் போரப்புலி ஏறிகொள்கிறான். எல்லோரும் போகிறார்கள்.]

## காட்சி எ

இடம்: அரண்மனையில்-மறைபேசு மன்றம்.

உறுப்பினர்: அரசன் நரேந்திரன், முசலன், சித்திராபதி, அரும்பில்வேள்.

காலம்: காலை.

அரும்பில்வேள்: மன்னர்பெருமான் வாழ்க! கட்டளைப் படியே வீரசிம்மனைச் சிறைப்படுத்தியுள்ளேன். அவனுடன் மற்றொரு குறும்பனையும் சிறையிற்றள்ளும் படி நேர்ந்துவிட்டது.

அரசன்: மற்றொருவன் யார்?

அரும்பி: வீரசிம்மனைத் தளையிடுங்கால் கட்டளையை மீறி அவ்விடத்தே ஒரு குழப்பத்தை உண்டாக்கிவிட்டான் ஒரு கயவன்.

அரசன்: அவன் பெயர்?

அரும்பி: போர்ப்புலி!

அரசன்: படைத்தலைவரே! அப்பெயர் அவனுக்குச் சிறப்புப்பெயரோ? வேடிக்கைப்பெயரோ?

அரும்பி: சிறப்புப்பெயரேதான். அரசே! சில ஆண்டு கட்கு முன்னர் நிகழ்ந்த போரில் அவன் காட்டிய மறத்தன்மைகுறித்து அவனுக்குப் பழைய மன்னர் அளித்த சிறப்புப்பெயரே அது. அச்செருக்குடைமை யாற்றான் அவன் என்னையே எதிர்த்துப் பெருங் கலாம் விளைக்கத் தொடங்கினான்.

அரசன்: பின்னர்?

அரும்பி: என்னிடமா அவன் காசு செல்லும்! மேலும், அவனை வெளியில் வைத்து வீரசிம்மனைமட்டும் சிறைப் படுத்தினால் அப்போர்ப்புலி நமக்குப் பெரிய இன்னல் தரத்தகுந்த செயல்களைச் செய்வான் என்று எனக்

குத் தோன்றியபடியால், அவனையும் சிறையிற் றள்ளு தல் இன்றியமையாததாயிற்று.

**முசலன் :** படைத்தலைவரே! உம்முடைய செயல் பெரி தும் பாராட்டற்குரிய செயலே ஆகும். அத்தகை யோர்களைத் தேடிப்பிடித்துச் சிறைப்படுத்திவிடுதலும் வேண்டும்.

**அரசன் :** நன்று! அவனைத் தகுந்தபடி ஒறுத்தல்வேண் டும். (சித்திராபதியை நோக்கி) ஏடீ கிழவி! இப் பொழுது உன் விருப்பப்படி எம்மால் செய்யற்பாலது பெருமபாலும் செய்யப்பட்டது என்று நினைக்கிறேன்.

**சித்திராபதி :** ஒருக்கால் இச்செய்தி பரவியவுடன், ஆதிரை தன் இல்லத்தை........

**முசலன் :** படைத்தலைவரே! நீர் ஆதிரையின் இல்லத்தை முற்றுகையிட்டுக் காவல் செய்யும்படி செய்யவில் லையோ?

**அழும்பி :** பெருமான்! ஆதிரை வீட்டை முற்றுகையிட் டுக் காவல் செய்யச்செய்த பின்னரே யான் இங்கு வந்தேன். அதை இங்கு அறிவிப்பதற்கு முன்னர் அந்தப் போர்ப்புலியைப்பற்றிய பேச்சுத தொடங்கிய படியால், அறிவிக்கப்படாதொழிந்தது. பொறுத் தருள்க!

**அரசன் .** படைத்தலைவரே! அதுபற்றிக் கவலவேண்டா.

[ஓர் ஒற்றன் விரைந்தோடி வருகிறான்.]

**ஒற்றன் :** அரசே! வாழ்க; வாழ்க!

**அரசன் :** ஏனடா! இப்படி விரைந்து ஓடிவருகிறாய்?

**ஒற்றன் :** பெருமானே! நேற்றுச் சிறையிடப்பட்ட வீர சிம்மனைப்பற்றி நம் நகரத்தில் பெரியதோர் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. இரவெல்லாம் நகரமக்கள் உறக்

கம்கூடக் கொள்ளாமல் ஆங்காங்கே கூடிக்கூடிச் சினத்துடன் பேசுகின்றனர். ஒரு பெருங்கூட்டம் சினத்தாற் பொங்கி எழுந்து நம அரண்மனையை நோக்கி வருகின்றது. அதை அறிவிக்கவே யான் விரைந்து ஓடிவருகிறேன்.

அரசன்: சீசீ! என்ன துணிவு இந்த நாய்களுக்கு! அரசியலார் செயலில் தலையிட இவர்கட்கு என்ன உரிமை உளது? படைத்தலைவரே! நீயிர் விரைந்துசென்று அக்கூட்டம் அரண்மனையை எய்துதற்கிடையில் நல்ல அடிகொடுத்து உதைத்து விரட்டக்கடவீர். நம்மை யாரேனும் மீறுவார் எனின் சிறிதும் இரக்கமின்றி அப்பொழுதே வெட்டி வீழ்த்துக!

முசலன்: அரசே! திடீர் என அவ்வாறு கட்டளையிடுதல் நன்றன்று. என்னுடைய பேச்சையும் சிறிது கேட்டருளல்வேண்டும்.

அரசன்: என்னை! என்னை! அமைச்சரே நும்முடைய அறிவுரையையா யான் புறக்கணிப்பேன்!

முசலன்: வீரசிம்மனைச் சிறைப்படுத்திய செய்தி நேற்று மாலையிலேயே இந்நகர் முழுதும் காட்டுத்தீப்போல் பரவிற்று. வீரசிம்மனை இப்பெரிய நகரம் இத்துணைச் சிறப்புடையவனாக வைத்துப் போற்றுகின்றது என்பதை யாம முன்னா நன்கு அறிந்துகொள்ளவில்லை. அவனை எளிய ஓர் அடிமையென்றன்றோ யாம் கருதினோம். அவனை யாம் சிறையிட்டபின்னர் இந்நகரம் முழுதுமே கொந்தளித்துக் குழம்புகின்றது இவன் பொருட்டு இத்துணைச் சினம இம்மக்கள் கொள்வானேன் என்று ஆராய்ந்துபார்த்தேன் பார்த்தபின்னரே அதன் காரணத்தை யான் கண்டேன்.

அரசன்: அமைச்சரே! அப்படி அவ்வீரசிம்மன்பால் இந்நகரம் பரிவுகாட்ட உற்ற காரணம் என்னை?

முசலன்: வேந்தே! புதியம் ஆகலின், அவனைப்பற்றி யாம் நன்கு அறிந்திலோம். அறிந்திருப்போமாயின் அவ்

வீரசிம்மனை யாரும் அறியாவண்ணமே அப்பெருங் காட்டிற் புதைத்திருக்கலாமே! அவன் சிறப்புடைய ஒரு பழங்குடியிற்றோன்றியவனும். அவன் முன்னோர்கள் தம் மறச்செயலால் பல்லாற்றானும் இந்நகரத்திற்குப் பேருதவி செய்தவர்களாம் இவ்வாற்றால் இந் நகரத்தார் அவர்கள் குடியில் ஒரு தனியான நன்மதிப்புடையவராம் ஆதலால், அத்தகைய வீரசிம்மனைக் காரணம் ஏதுமின்றிச் சிறையிற்றள்ளப்பட்டமை, அவர்களுக்குச் சினம் உண்டாக்கிவிட்டது.

அரசன்: அமைச்சரே! நம்மால் ஆளப்படும் எளிய குடிகட்கு யாமும அஞ்சவேண்டுமோ?

முசலன்: ஆம்; அஞ்சவேவேண்டும்.

"பீலிபெய் சாகாடும் அச்சிறும். அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்."

மயிற்பீலி மிக நொய்யதே ஆயினும், மிகுதியாய பொழுது சகடமும் அச்சு முறியும்படி செய்யும். மேலும், புதுவதாக அரசியலை ஏற்றுக்கொண்டுள்ள யாம் நம் குடிகளுடனே பகைத்து எதிர்ப்போமாயின், இச்செய்தி நம கோபபெருந்தேவியார்க்கு எட்டுதல் திண்ணம அவ்வாறாயின், நமது அரசியலையே நாம் இழக்க நேரினும் நேரும் ஆதலால், அரசே! நாம் அஞ்சியே தீர்தல்வேண்டும்

அரசன்: (நடுங்கி) ஆ! அப்படியா! அமைச்சரே! இப்பொழுது யாம் என்செய்தல்வேண்டும?

முசலன்: அரசே! அப்படிக் கேளுங்கள். நாம் எப்படி இச்செவ்வியில் நடந்துகொள்ளவேண்டும் என்றுதான் நான் ஆராய்ந்துகொண்டிருந்தேன். அதற்குள் தாங்கள் படைத்தலைவருக்குக் கட்டளையிட்டீர்கள்.

அரசன்: ஆம்; சினத்தால் அவ்வாறு சொல்லிவிட்டேன். இனி நீவிரே ஆராய்ந்து கூறுக.

முசலன் : அரசே! இப்பொழுது விரைந்து இக் குடிமக்களின் சினத்தை ஏதாவது ஒரு சூழ்ச்சியால் அவித்தல் வேண்டும்.

அரசன் : ஆம்; எவ்வாற்றான் அஃதியலும் ?

ஒற்றன் : முழக்கத்தை உற்றுக் கேளுங்கள். பெரும் பாலும் நகரம் முழுதுமே திரண்டுவருகின்றது !

கும்பலில் ஒருவன் : அரிமாவை ஏன் கூண்டில் அடைத்தாய் ?

எல்லோரும் : காரணம் கூறு; இன்றேல், சிறையைத் தகர்ப்போம் !

ஒருவன் : வீரசிம்மன் !

எல்லோரும் : வெல்க !

ஒருவன் : வீரசிம்மனை !

எல்லோரும் : விடுதலை செய் !

ஒருவன் : நரேந்திரன் !

எல்லோரும் : ஒழிக !

ஒருவன் : அரிமாவை !

எல்லோரும் : கூண்டில் அடைக்காதே !

ஒருவன் : ஏன் சிறையில் அடைத்தாய் ?

எல்லோரும் : காரணம் வேண்டும் ?

ஒருவன் : இன்றேல் !

எல்லோரும் : சிறையைத் தகர்ப்போம் !

அரசன் : என்னிது ! கடல்போல் முழக்கம் ?

முசலன் : அரசே! அக்கூட்டம் நம் அரண்மனை வாயிலுக்கு வந்துவிட்டது !

[முசலன் படைத்தலைவனோடு ஏதோ செவியிற் சொல்லுகிறான். அரணமனையின் தலைக்கடைக் கதவுகள் தாழிடப்படுகின்றன. முசலனும் படைத் தலைவனும் அக்கூட்டத்திற்கு எதிரே கூப்பிய கையுடன் செல்கின்றனர்.]

**கூட்டத்தில் ஒருவன்:** பொறுங்கள்; பொறுங்கள். இதோ நம் அமைச்சர் வருகிறார் அவரைக் காரணம் கேட்போம்.

**எல்லோரும்:** அமைதி; அமைதி! கூச்சலிடாதே!

**ஒருவன்:** அன்பார்ந்த குடிமக்களே! உங்கள் சார்பில் நமது அன்பிற்குரிய வீரசிம்மனைச் சிறைசெய்ததற்குக் காரணம் கூறும்படி நம் அமைச்சரைக் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

**முசலன்:** ஐயா! வணக்கம். நீவிர்தாம் இக்கூட்டத்திற்குத் தலைவர் என்று நினைக்கிறேன்.

**ஒருவன்:** ஆம்; யான் சொல்லுவதை இந்நகரமாந்தர் அனைவருமே மதிப்பர்.

**முசலன்:** நன்று; நன்று. நும்மைப்போன்றவர்களிடத்தில் எனக்கும், புதிய மன்னர் நரேந்திரருக்கும் அளவிலாத மதிப்புண்டு. யாங்கள் புதிதாக வந்துள்ளபடியால், உம்போன்றவர்களை இன்னும் அறிந்து கொள்ளவில்லை. (ஒரு பணியாளனைக் கூவி) யாரடா! இத்தலைவருக்கு ஓர் இருக்கை கொண்டுவந்து போடு. (ஓர் உயர்ந்த இருக்கையைக் கொண்டுவந்து போடுகிறான்; அதைச் சுட்டிக்காட்டி) ஐய! தலைவரே! இதன்மிசை அமருங்கள்.

**தலைவர்:** பெருமான் அமர்ந்தருள்க! யான்........

**முசலன்:** நன்று; நன்று. ஐய! எப்பொழுதும் குடிமக்களே உயர்ந்தவர்கள் என்று நினையுங்கள். குடிகள் இல்லாவிட்டால் பின்னர்க் கொற்றவனுமில்லை. நீயிர் அமர்க! உங்கட்கு வீரசிம்மனைச் சிறைசெய்ததற்குரிய காரணத்தைக் கூறவே இங்கு யான் வந்துள்ளேன். உங்கள் தலைமையின்கீழ் நின்று யான் அக்காரணத்தை விளக்கி உங்கட்குக் கூறும்வரை இக்கூட்டத்தை அமைதியுடன் இருக்கச்செய்யுமாறு வணக்கத்துடன் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

**தலைவர் :** (எழுந்து நின்று இறுமாப்புடன் கூட்டத்தைப் பார்த்து) அன்பர்களே! நமது கண்ணியமுள்ள அமைச்சர்பெருமான் வீரசிம்மனைச் சிறையிட்டமைக் குரிய காரணத்தை நம்முன் விளக்கிக் கூறப்போகிறார். நீங்கள் அனைவரும் அமைதியுடன் இருந்து கேட்கும் படி உங்களை வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகின் றேன்.

**எல்லோரும் :** அப்படியே அமைதியுடன் இருக்கிறோம்.

**கூட்டத்துள் ஒருவன் :** நரேந்திரன்!

**சிலர் :** ஒழிக!

**தலைவர் :** அன்பர்காள்! அமைச்சர் பேசுவார்; அமைதி கொள்ளுங்கள்.

**எல்லோரும் :** அப்படியே அமைக; அமைக.

[கூசசல் அடஙக, அனைவரும் தரையில் அமர்ந்து அமைசசரின பேசசைக் ௬கட்கின்றனர்]

**முசலன் :** செந்தமிழ்நாட்டுச் சீரியமக்களே! என் அன் பார்ந்த தோழர்களே! உங்கட்கு எனது தாழ்ந்த வணககம் உரியதாகுக. நம நாட்டின் பேரரசியான இராணி மங்கமமாளை நீயிர் அனைவரும் நன்கு அறிந் திருப்பீர்கள் என்று நம்புகின்றேன்.

**எல்லோரும் :** ஆம் அமைச்சரே! யாங்கள் அறிந்துள் ளோம்; அறிந்துளளோம்.

**முசலன் :** நன்று. அவர்தம் கட்டளையைத் தலைமேல் தாங்கி, உங்கள் நன்மையைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாக்கவே நரேந்திரரும், யானும் இங்கு வந்துள் ளோம். யாங்கள் வநதது தொடங்கி, எத்துணையோ குடிமக்கட்கு நன்மைகளைச் செய்ய ஆராய்ச்சிசெய்து அதற்குரிய வழிகளைக் கண்டுபிடித்து வருகிறோம். நம நாட்டிலுள்ள ஏரிகளை எல்லாம் கடல்போல ஆழ மாக வெட்டுதல்வேண்டும் என்று முடிவுகட்டியுள் ளோம்; பெரும்பாலும் குடிமக்களுடைய இறைப்

பொருளைக் குறைத்துவிடவும் முடிவுசெய்துள்ளோம். இவைபற்றி இப்போது பேசக் காலம் இடம் தரவில்லை. நம் வீரசிம்மன் என்பவரைச் சிறைசெய்ததற்குரிய காரணம் என்ன என்பதை நீங்கள் அனைவரும் அறியவே இங்குக் கூடியிருக்கின்றீர்கள்!

**மக்கள்:** ஆம்; ஆம் அமைச்சரே! அதுபற்றி அறிந்து கொள்ளவே யாங்கள் வந்துள்ளோம்.

**முசலன்:** கேளுங்கள்; கேளுங்கள்! அன்பார்ந்த பெருந்தகை மக்களே! கேளுங்கள்! உங்கட்குக் காரணம் கூறவே யான் ஈண்டு வந்துள்ளேன். குடிமக்கள் உயிர்; அரசன் அவ்வுயிருக்கு உடல். உயிரை உடல் வெறுத்துப் பகைத்து என்செய்ய? பெருமக்களே! கேளுங்கள். நமது தண்டமிழ்நாட்டிற் பிறந்து இதன்கண் வாழுகின்ற உங்களில் யாரேனும் அயலார் ஆகிய வடுகர்களை நமக்கு அரசராதலை விரும்புவீர்களா? பெருமக்களே! நம்மை அயலார் ஆள விரும்புவர்கள் யாரேனும் இக்கூட்டத்தில் உண்டா? உண்டாயின், அவர் கூறுக!

**மக்கள்:** ஒருவரும் இல்லை. அமைச்சரே! இப்பெருங்கூட்டத்தில் ஒருவனேனும் அத்தகைய எளியன் இரான்.

**முசலன்:** நன்று. மானம் போற்றும் தமிழ்மக்களே! நம் மதிப்பிற்குரிய தண்டத்தலைவர் வீரசிம்மனார், பெருமைமிக்க பழங்குடிப் பிறப்பினராய் இருந்தும், உங்களாலும், உங்களைப்போன்றே மன்னர்பெருமான் நரேந்திரர் முதலிய எங்களாலும் நன்குமதிக்கப்பட்டவராயிருந்தும், அவர் இயற்றியதொரு புன்மையைக் கேளுங்கள்! அமைதியுடன் இருந்து கேட்டு நீங்களே முடிவு கூறுங்கள். அரசியலார் செய்தது தவறு என்று நீங்கள் முடிவு கூறுவீர்களானால், நாங்கள் எங்கள் தவற்றை உடனே திருத்திக்கொண்டு, உங்கள் அன்பையும் ஆதரவையும் பெற்றுக்கொள்கிறோம்.

**மக்கள் :** அமைச்சரே ! வீரசிம்மன் அப்படி என்ன குற்றத்தைச் செய்தான் ?

**தலைவர் :** அன்பர்களே ! அமைச்சர் பேச்சிற் குறுக்கிட்டு, அதைத் தடைசெய்யாமல் அனைவரும் அருள்செய்து அமைதியுடன் இருங்கள். நாம் விரும்புகிறபடி அமைச்சர் காரணம கூறுவார்.

**முசலன் :** பெருமக்களே ! நமது நாட்டின் வடபால் உள்ள எல்லைக்கு அப்பால் அமைந்த தெலுங்கு மன்னன் ஒருவன் நெடுநாளாக நம் நாட்டின்மேற் படையெடுக்க முயல்கின்றான் என்றும், அப்படையெழுச்சி அண்மையில் நிகழக்கூடும் என்றும், நம் அரசியலார் அறிவுசான்ற ஒற்றர்வாயிலாய் அறிந்தனர். ஆதலால், அவ்வெல்லைப்புறத்தைக் காவல்புரியும்படி உயர்குடிப் பிறப்பினராகிய நம் நம்பிக்கைக்குரிய வீரசிம்மனை நூறு மறவருடன் அவ்வடக்கெல்லைக்குச் செலுத்தினர். அவ்வாறே காவலுக்குச் சென்ற வீரசிம்மனார் நம் பகைமன்னருடன் மறைவாக உடன்பாடு செய்து கொண்டு நம் நாட்டை அவன் கையிற்கொடுக்க முயல்கின்றார் என்று மீண்டும் திறமுடைய ஒற்றர்களால் அறிந்தோம்.

**கூட்டத்தில் ஒருவன் :** இது நம்பத்தக்கதன்று. வீரசிம்மன் அப்படிப்பட்ட புன்செயலைச் செய்யத் துணிவது வியக்கத்தக்கதாம் !

**முசலன் :** ஆம்; ஆம் நண்பரே ! யாங்களும் முன்னர் நம்பத்தக்கதன்று என்றே நினைத்து, உம்மைப் போலவே வியப்படைந்தோம். பின்னரும் வெவ்வேறு ஒற்றர்களைக்கொண்டு ஆராய்ந்தோம் என்செய்வார் ! எத்தகைய அறிஞரும் மயங்கிவிடுகின்ற ஒன்றிலே, அவரும் மயங்கியே இத்தகைய தீமைசெய்யத் துணிந்ததாக அறிந்தோம் இளமைவாய்ந்த செந்தோல் அழகி ஒருத்தியாலேயே, நம் பகைவேந்தன்

நம் வீரசிம்மனை மயக்கிவிட்டான். அழகிய மகளிரின் வஞ்சனையில் யாரேதாம் மயங்காதவர்!........

**ஒருவன் :** தகும்; தகும்! உண்மையே உண்மை! அம் மகளிர்பொருட்டு வீரசிம்மன் மயங்கி இருத்தலும் இயல்பே.

**தலைவர் :** கேளுங்கள்; கேளுங்கள். பெருமைதங்கிய நம் அமைச்சர்பெருமான் பேச்சை அமைதியுடனிருந்து கேளுங்கள்.

**மூசலன் :** அதன்பின்னர் நம் அரசியலார் நம் வீரசிம்மனு ரிடத்து ஐயுற்று, அவரை நம் அரசியல் விதிப்படியே சிறைசெய்து, சிறையிடத்தேயும் தக்க முறையில், உணவு, உறையுள் முதலியவற்றை நன்கு அளித்து, ஓம்புமாறு ஏற்பாடு செய்துள்ளார். மேலும், அவர் சிறையிடை வதியுந்துணையும், அவர் வீட்டையும் மனைவி முதலியவர்களையும், நன்கு பாதுகாவல் செய்யு மாறும் செய்துள்ளேம். அண்மையிலேயே அவர் வழக்கை ஆராய்ச்சிசெய்து உண்மையைக் கண்டு பிடிக்கும்படி அறங்கூறவையத்தாரையும் வேண்டி யுள்ளேம். வழக்காராய்ச்சியில் அவர் குற்றவாளி யல்லர் எனக் காணப்பட்டால் அவருடைய உயரிய அன்பையும் யாங்கள் தாழ்மையுடன் அவரை இரந்து பெற்றுக்கொள்ளவும் எண்ணியுள்ளேம். ஆதலால், பெருமக்களே! இங்குத் தலைமைவீற்றிருக்கும் பெரி யார், உங்கள் சார்பில் இனித் தம்முடைய விருப்பத் தைக் கூறும்படி வணக்கத்துடன் கேட்டுக்கொண்டு, என் சிற்றுரையை இத்துணையின் நிறுத்திக்கொள் கின்றேன்.

**ஒருவன் :** அமைச்சர் வாழ்க!

**எல்லோரும் :** அமைச்சர் வாழ்க!

**தலைவர் :** (எழுந்து) அன்புமிக்க பெருமக்களே! இது வரையும் நம் அமைச்சர்பெருமான் அவர்கள் அமுத

மழை பொழிந்ததுபோன்று பேசியதை நீங்கள் அனை வரும் கேட்டீர்கள். ஓர் எளிய பெண்பொருட்டு நம் தண்டத்தலைவர் வீரசிம்மனா, இத்துணைப் பெரிய தீமைசெய்யத் துணிந்ததை அரசியலார் பார்த்துக் கொண்டு வாளாவிருத்தலும் இயலாது.

மக்கள். இயலாது; இயலாது. தலைவரே! அரசியலார் வாளாவிருத்தல் இயலாது.

தலைவர்: எனவே, அவர்கள் நம் அரசியல் விதிப்படியே அவரைச் சிறையில் வைத்துள்ளது அறமே என்று உங்கள் சார்பில் யான் கருதுகின்றேன்.

ஒருவன்: ஆம்; ஆம். எளிய பெண் ஒருத்தியின்பொருட்டு ஒரு நாட்டின நலத்தையே கெடுக்கத் துணிந்த அவ னைச் சிறையிடுதல் தகுதியே.

தலைவர்: ஆதலால், அரசியலார் செய்ததை நாம் போற் றவேவேண்டும். அரசர்பெருமான்!

கூட்டம்: வாழ்க!

ஒருவன்: நரேந்திரன்!

மக்கள்: வாழ்க!

தலைவர்: அமைச்சர்!

கூட்டம்: வாழ்க!

முசலன்: (எழுந்து) பெருமைசான்ற பெருங்குடி மக் களே! இங்கு யான் கூறிய செய்திகளை உங்கள் அயல்வாழ் நண்பர்களுக்கும், உறவினர்கட்கும் நீங்கள் அன்புடன் எடுத்துக் கூறி, அவர்கள் வாளா எங்க ளைப் பழிகூறாதபடி செய்யவேண்டும் என்று தாழ்மை யுடன் உங்களைக் கேட்கிறேன்.

ஒருவன்: அங்ஙனமே அமைச்சரே! அங்ஙனமே செய் வோம்.

முசலன் : மேலும், வீரசிம்மனர் வழக்கு ஆராய்ச்சி நாளையே அறவோர் மன்றத்தே தொடங்கும். இவ் வழக்கு முடிவுற்றவுடன் அதன்கட்கண்ட உண் மையை அரசியலார் உங்கள் மேலான செவிகட்கும் முரசறைந்து தெரிவிப்பர் [அமாகிருன்]

தலைவர் : பெருமக்களே! இனி யாம், நம் விருப்பப்படி நமக்குக் காரணம் கூறி, நம்மைப் பெரிதும் மதித்த அமைச்சர் அவர்கட்கும், அவர் வாயிலாய் நம் அரசர் பெருமானுக்கும் நமது நெஞ்சமர்ந்த வணக்கத்தைக் கூறி, யாம் வந்தவாறே மீண்டு செல்வோம். அமைச்சர் !

கூட்டம் : வாழ்க !

தலைவர் : மன்னர் !

கூட்டம் : வாழ்க !

[முசலன் கூட்டத்தலைவனைக் கும்பிட்டு விடை பெற்று அரணமனை நோக்கி அழும்பில்வேளுடன் போகக், கூட்டம் வாழ்த்தொலியுடன் திரும்பிச் செல்கிறது.]

---

## காட்சி அ

**இடம்:** அறமன்றத் தலைவர் இல்லம்.

**உறுப்பினர்:** அறமன்றத் தலைவர், முசலன், பணியாளர்கள்.

**காலம்:** முன் இரவு.

**அறமன்றத் தலைவர்:** அம்மம்ம! இந்த இழவு அலுவல் செய்து பிழைப்பதைவிட இரந்து பிழைப்பதே உயர்வு! சீ! சீ! ஆயுள் முழுதும் வெறும் பொய்யர்களோடும், வஞ்சகர்களோடும், கள்ளர்களோடுமே கழிந்து தொலைகின்றது! இறைவனை எண்ணி வணக்கம் செய்யத்தானும் ஓர் எட்டுணை நேரமும் கிடைப்பதரிதாக இருக்கின்றது.

[பாட்டு]

அண்டப் புரட்டன் வாதி!

அகிலாண்டப் புரட்டன் அவன் பிரதிவாதி!

யாரடா? அதோ அந்த ஏடுகளைப் பொறுக்கிக் கொண்டு வந்து தொலை. வெறும் பொய்! இந்த வழக்கிற்கு இன்றே ஆராய்ந்து முடிவு கூறவேண்டும் என்று மேலிடத்திலிருந்து கட்டளை வேறு வந்து கிடக்கின்றது. ஓர் எள்ளளவு மெய்கூடக் கலக்கப்பெறாத முழுப் பொய் வழக்கு இது. அடே! முருகா! ஒரு துளிகூடக் காற்றிலலை அந்தப் பலகணியையேனும் திறந்து விடடா! எங்கேயடா இங்கே கிடந்த எழுது கோல்? எந்தச் சிமைக்கடா போய்த் தொலைந்தது?

[பணியாள் சுற்றிப் பார்த்து.]

**முருகன்:** ஐயா! அதோ நம் சின்னக் குழந்தை கையில் வைத்துக்கொண்டிருக்கிறது.

**அ தலைவர்:** (குழந்தையைப் பார்த்து) என் கண்ணே! அதை என்னிடம் கொடுத்துவிடு. இந்தப் பாவக்

கருவியை நீ தொடாதே; ஆ! எத்தனை ஆயிரம் பொய்யர் பொய்ம்மொழியைத்தான் இக்கோல் வரைந் துள்ளது! பொய்யையே நம்பி அதனாலேயே வயிறு வளர்க்கும் பொய்யர்களுக்கே போற்றத் தக்கது இக் கருவி; எங்கே! உன் பாவஞ்செய்தறியாத சின்னஞ் சிறு மலர்க்கையாலே அதைத் தொடாதே; என் னிடம் கொடுத்துவிடு.

[குழந்தை புன்முறுவலுடன் கொடுக்கின்றது.]

அ. தலைவர்: முருகா! அந்த விளக்கை நன்ருகத் தூண்டி விடு (ஏதோ எழுதத் தொடங்குகின்ருர் அவ்வமயம் கதவை யாரோ புடைக்கும் ஒலிகேட்டு) சீ! சீ! ஏடா முருகா! போய்ப்பாரடா யார் அத்துணைப் பல மாகக் கதவைப் புடைப்பவர்.

[முருகன் கதவிடம் சென்று.]

முருகன்: யார் அப்பா? ஏன்! மெல்லத்தட்டக்கூடாதா? நீ யார்? அதுவும் இரவில்!

அரண்மனைப் பணியாள் ஒருவன்: அடே! உங்கள் தலைவர் இருக்கிருரா?

முருகன்: மெல்லப் பேசப்பா! எங்கள் ஐயா உள்ளே இருக்கிருர்.

பணியாள்: அடே! என்ன அச்சுறுத்துகிருய்! அவர் இருக்கிருரா என்றுதானே யான் கேட்கிறேன்! அடே விரைந்துபோய் உங்கள் ஐயாவிடம், எங்கள் ஐயா உங்களைப் பார்க்க வந்திருக்கிருர் என்று சொல் லடா!

முருகன்: அண்ணே! உங்கள் ஐயா என்ருல் அவர் யார் என்று யான் சொல்வேன்!

பணியாள்: ஓ! எங்கள் ஐயாவை உனக்குத் தெரியாதோ! அதுதான் அவ்வளவு அதிகாரமாய்ப் பேசினுய்; அடே எங்கள் ஐயா முதல் அமைச்சரையா உனக்குத் தெரியாது?

**முருகன்:** அப்பாடா! முதல் அமைச்சரா! அடே அப்பா! அவர் எங்கே நிற்கிறார் என்று சொல்வது?

**பணியாள்:** அடே இப்படியே பேசிக்கொண்டே இருப்பாய் போல இருக்கிறது. விரைந்துபோய் உன் ஐயாவிடம் சொல்லடா.

**முருகன்:** அப்படியே சொல்கிறேன்! (உள்ளே ஓடுகிறான்) ஐயா! நம் வாயிலில் முதல் அமைச்சர் வந்து நிற்கிறார் களாம்!

**அ. தலைவர்:** இஃது என்ன இழவு! (அறமன்றத் தலைவர் சென்று முதலமைச்சரை எதிர்கொண்டு) பெரியீர்! வருக வருக! பெரியீர் வருதற்கு என்னமாதவம் செய்தது இச் சிறுகுடில். வருக வருக! இவ்விருக் கையில் அமருங்கள்.

**முசலன்:** அறமன்றத் தலைவரே! நும்மொடு கலந்து பேசற் குரிய செய்தி ஒன்றுளது. நம் மன்னர் பெருமான் தூதுவனாகவே யான் இப்பொழுது நும்பால் வந்து ளேன்

**அ. தலைவர்:** பெரியீர்! இவ்வாசகங்கள் என் தகுதிக்கு அப்பாற்பட்டன என்று எண்ணுகின்றேன்; ஏனெ னில் பெரியீர்! தம்முடைய இல்லத்திருந்தே ஒரு முடங்கல் உய்த்தால் ஓடிவந்து நுங்களைக் காண வேண்டிய என்பால் தாங்கள் தூதனாக வருதற்கு ஏதுயாதுளது?

**முசலன்:** தலைவரே! ஒரு நாட்டினை ஆளும் அரசனுக்கு அமைச்சர், அறமன்றத் தலைவர், இன்னோரன்னவர் அவன் கீழமைந்த அதிகாரிகள் என்னும் அளவானே அமைவாரல்லர். அரசனுடைய உடன்பிறப்பாளர் போன்ற உரிமையுடனும் இன்னவர் இருந்து அரசிய லில் ஈடுபட்டுழைத்தல் வேண்டும் ஆதலால் நீயிர் எம்மனோரால் வந்து காண்டற்குரிய சிறப்புடையீரே என்பதில் ஐயமின்று!

அ. தலைவர்: பெரியீர்! தகுதியுடையனே அல்லனே அது நிற்க; அரசா பெருமான் தங்கள் வாயிலாய் எனக்கு உய்த்துள்ள கட்டளையை அறிய விரும்புகின்றேன்.

முசலன்: தலைவரே! ஆம் அதனைக் கூறக் கேண்மின்! இப்பொழுது தங்கள் அறமன்றத்தே ஓர் அரசியல் வழக்கு ஆராய்ச்சி நடைபெறுகின்றதன்றோ?

அ. தலைவர்: ஆம் ஆம்; வீரசிம்மன் என்பான் ஒரு தண்டத் தலைவன்மேற் றொடுக்கபபட்ட வழக்கொன்று இப் பொழுது ஆராயபபடுகின்றது.

முசலன்: அவ்வழக்கு ஆராய்ச்சியின் முடிவு எப்பொழுது கூறக்கூடும்?

அ. தலைவர்: அவ்வழக்கை விரைவின் ஆராய்ந்து முடிவு கூறுமாறு, அரசர்பெருமான் கட்டளை ஒன்று வரப் பெற்றுள்ளேன். ஆதலின் ஏனைய வழககுகள் நிற்க அதைமட்டும் சிறப்பாக எடுத்து ஆராயநதுள்ளேன்; இன்றிரவே அவ்வழக்கின் முடிவு வரையப் போகி றேன்.

முசலன்: நன்று! நன்று! அவ்வழக்கைப்பற்றியே அரசர் நும்பால் என்னைச் சிறிது கலந்துபேசக் கட்டளை யிட்டுள்ளார்; நல்லது அவ்வழக்கிற்கு முடிவுவரையப் போகின்ற நீயிர் இப்பொழுது நும் மனத்தே முடிவு கண்டிருபபீர் அன்றோ!

அ. தலைவர்: ஆம் முடிவு இன்னது எனத் துணிந்து கொண்டுதானே வரைதல் இயலும்!

முசலன்: ஆயின், அவ்வழக்கில் வீரசிம்மன் என்பான், நாட்டிற்கும் அரசனுக்கும் கேடு சூழ்ந்ததொரு பெருங் குற்றத்தைச் செய்தான் என்பதுதான் தங்கள் முடி வாக இருக்கும் என்று நம்புகின்றேன்.

அ. தலைவர்: அஃதெவ்வாறு நீயிர் நம்பமுடியும்?

முசலன் : ஏன் அவ்வீரசிம்மன் செய்த குற்றத்தை யானும், அரசர் பெருமானும் ஒற்றர் முதலியவர்களால் நன்கு ஆராய்ந்து கண்டுள்ளனம். ஆதலால் தங்கள் முடிவும் அவ்வாறிருத்தல் கூடும் என்று ஏன் யான் நம்புதல் கூடாது?

அ. தலைவர் : வீரசிம்மன் குற்றம்செய்தான் என்று நீங்கள் நம்பும்படி உங்கட்கு ஒற்றுரைத்த ஒற்றர் யார்?

முசலன் : ஏன்? அவ்வழக்கில் அவ்வொற்றர்கள் சரியாக விடப்பட்டுள்ளனர்.

அ. தலைவர் : ஆ! ஆ! வியத்தகு நிகழ்ச்சி! அவ்வழக்கில் சான்று கூறுவோர் ஒற்றராயின் அது வியத்தகு நிகழ்ச்சியே! எழுத்தறிவுதானும் இல்லாத பெரும் பொய்யர்கள் அவர்கள். ஒன்றுகிடக்க ஒன்றுகூறிப் பொய்யும் பொருந்தவுரைக்கக் கல்லாப் புல்லர். அவர்களை யான் விழிப்புடன் வினவியபோது அவர்கள் யாராலேயோ வெறும் பொய்யை உரைக்கும்படி தூண்டப்பட்டுள்ளனர் என்றே அறிகின்றேன்.

முசலன் : ஓ! அப்படியாயின், அவ்வொற்றர்கள் நன்கு பேசுந்திறம் பெறாக்குறைவால் அவர்கூறும் மெய்யெல்லாம் உமக்குப் பொய்போன்று தோன்றுகின்றன போலும். உண்மையில் அவர் கூறுவது மெய்யெனவே யானும், அரசர் பெருமானும் நன்கு நம்புகின்றேம்.

அ. தலைவர் : ஆ! ஆ! இக்கூற்று மிகப்பெரிய வியப்புடைத்து. பேசத்தானும் திறனிலாதவரும், எழுத்தறிவில்லாதாரும் அரசற்குக் கண் எனச் சான்றோரால் கூறப்பட்ட ஒற்றராயதும், அவர் அயல்நாடு சென்று பிறர் அறியாவாறு செவ்வியறிந்து பேசி மறைச் செய்திகளை ஒற்றிவந்து நம்பால் உணர்த்தியதும், அவர்தம் செய்தியில் உண்மை பொதிந்தே கிடக்கின்றது என்று நீங்கள் நம்பிவிடுவதும், வியப்பு! வியப்பு! பெரிய்பே! நன்று, அவ்வணம் நீங்கள் நம்புவ

தாகவே கொள்வோம். அவ்வாறு நம்புவதற்கு யான் என்ன செய்வேன்? அதனைவிட்டு எனக்கு அரசர் இட்ட கட்டளையை மட்டும் தெரிவியுங்கள்.

முசலன்: பெரியீர்! வீரசிம்மன் நாட்டினையும், அரசர் பெருமானையும், கெடுத்தற்கு முயன்றதாக நன்கு அறிகிறபடியால், அவனை வழக்கில் விடுதலை செய்யாமல் உறுதியாக அக் குற்றத்திற்குத் தக்க தண்டனை விதித்தே விடும்படி அரசர்பெருமான் நும்பால் கூறவே என்னை உய்த்துளார்.

அ. தலைவர்: அமைச்சரே! மீண்டும் வளைந்து தொடங்கிய இடத்திற்கே வந்துவிட்டீர்கள். அரசர்பெருமான் அவ்வாறு நன்கு தெளிந்து கொண்டது எவ்வாறு என்றுதானே யான் வியக்க நேருகின்றது! அரசர் பெருமானுக்கு நன்கு தெரியும்படி செய்தவர், எனக்கும் தெரியச் செய்திருந்தால் இதற்குத் தாங்கள் தூதாக வரவேண்டியதின்று. முற்றும நடநதிராத ஒரு பொய் வழக்கென்று யான் ஆராயச்சியில் நன்று கத் தெரிந்து கொண்டுள்ளேன். ஆகவே, யான் இவ் வழக்கில் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதை பிறர் கூறுமலே அறிந்துள்ளேன்.

முசலன்: நல்லது, நீயிர் இப்போது வீரசிம்மனை விடுதலை தான் செய்யப் போகின்றீரோ!

அ. தலைவர்: அதுமட்டும் அன்று; இத்தகைய பொய் வழக்கைப் புனைந்தவர் யார் என்பதையும் அப் பொய்யர் வாயிலாக அறிதல் எளிதே. ஆகலின், அவ் வழக்கைப் புனைந்தோரைக் கண்டுபிடித்து அவரையும், பொய்க்கரிகூறும் அறிவிலிகளையும் சில யாண்டுகள் சிறையிடவும் முடிவு செய்துள்ளேன்.

முசலன்: ஓ! அப்படியா! குதிரை கீழேதள்ளியதும் அன்றிக், குழியும் பறித்த கதையே ஆயிற்று! ஒரு கால் இவ்விடுதலை அரசர் கருத்துக் கியையாதிருந்து அரசர் நும்மைத் தம் பகைவனாகக் கருதநேருமாயின்..

அ. தலைவர் : ஏதனால்! ஓர் அரசன் தன் கீழுள்ள அற மன்றத் தலைவர் நேர்மையாய் நடப்பதைக் கண்டு அவரைப் பகைக்கக்கூடும் எனறால், இதுவும வியத்தகு நிகழ்ச்சியே!

முசலன் : தலைவரே! எல்லாவற்றிலும் அறத்தின்படியே நடப்பேன் என்று கூறுவது உலகியற்கு ஒவ்வாததாம். உமபால் யான் சொற்போரிட்டுத் தருக்கமுறைக் கேற்பக் காரணம் காட்டவரவில்லை. வீரசிம்மன் குற்றஞ் செய்தானே, செய்யவில்லையோ! அவனைத் தண்டனைக் குட்படுததல் வேண்டும என்பது அரசர் பெருமானுடைய உறுதியான விருப்பம். அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்பது நீயிர் அறியாத தன்று. ஆதலால், வீரசிம்மனுக்கு அரசர் விரும்பிய வாறு தண்டனை விதிப்பதே நீயிர் செய்யவேண்டியது. நான் இபபோது அரசருடைய அதிகாரத்தாலே உமக் குக் கட்டளையிடுகிறேன். வீரசிம்மனைக் குற்றம் செய்தவனைக்கொண்டு அதற்குரிய தண்டனையும் நீயிர் விதித்தே தீரவேண்டும் அத்தண்டனைதானும் கொலைத தண்டனைககுக் குறைந்ததாக இருத்தல் கூடாது என்பது அரசருடைய எண்ணம். ஆதலால் நீயிர் இக் கட்டளைபபடியே செய்து தீரவேண்டும்.

அ. தலைவர் : அமைச்சரே! உங்கள் கட்டளை எதுவாயினும் அதற்கு யான் கீழ்ப்படிந்து நடப்பேன் என்று நீஙகள் எதிர்பாாப்பது அறியாமை நீயிர்தாம் என்னை! அரசர்தாம் என்னை! என்னைப் படைத்த இறைவனே தான் என் முன்னின்று, என் நெஞசறிந்த தொன் றற்கு மாறாக நடக்குமாறு என்னை ஏவினல் அவனும் தன் சொல்லிழந்து நிற்றல் திண்ணம்.

முசலன் : ஆயின், அரசன் நினைத்தால் நாளையே நும்மை அதிகாரத்தினின்றும் அகற்றி அவருடைய மன முவந்த ஒருவற்கு இவ்வதிகாரத்தை அளித்து அவன் வாயிலாய்த் தம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள் வர்; பின்னர் உம்கதி என்னும்?

அ. தலைவர் : அங்ஙனம் ஓர் அரசர் ஆட்சிக்கீழ் அதிகாரம் பெறுவதை யான் இப்பொழுதே நாணத்துடன் வெறுக்கின்றேன். அவர்தம் அதிகாரத்தின்கீழ் அமைந்த அறமன்றத் தலைவனாகிய எமமனோரை அவர் விருப்பப்படி தள்ளுதலும் சேர்த்தலும் எளிதே ஆயினும், உலகெங்கும் அங்கிங்கெனாபடி எங்கும் எப்பொழுதும் கண்டுணர்கின்ற உலக அறமன்றத் தலைவனாகிய இறைவனுடைய தண்டனைக்கு அவ்வரசரும் நும்போல்வாரும் அஞ்சமாட்டீர் போலும். அஞ்சுவிர்! அஞ்சுவிர்! ஒருகாலம் அஞ்சவே அஞ்சுவீர்! ஆதலால் அமைச்சரே நும் விருப்பத்திற்கோ, அரசர் விருப்பத்திற்கோ இணங்கி யான் நடந்துகொள்ளேன். என மனச்சான்றுக்குத் தகவே யான் நடப்பேன்! இம்முறை உங்களுடைய பகைமைக்குக் காரணமாதல் பற்றி யான் அஞ்சேன்!

முசலன் : நன்று அப்படியாயின் நீயிர் உமது சிறந்த அதிகாரத்தை இழக்கின்றீர்!

அ. தலைவர் : அமைச்சரே! எனது சிறந்த அதிகாரத்தை ஓம்பவே யான் இதனைச் சொல்கின்றேன. உங்கள் அருள்பெற்று நடத்தும் அதிகாரத்தையும் என் அதிகாரத்தை ஓமபும் பொருட்டே அணுப்போல உதறி எறிகின்றேன். 'தன்னெஞ்சறிநதது பொய்யற்க' என்னும் கட்டளையை மேற்கொண்டொழுகலே எனக்குரிய கடமை. இது இறைவன் கட்டளை.

முசலன் : ஒருசமயம் உம் அதிகாரத்தை ஓம்பும் பொருட்டு இந்நாட்டைவிட்டுப் போக நேரினும் நீயிர் அஞ்சீர் போலும்.

அ. தலைவர் : இந்நாட்டைவிட்டுப்போதல் கிடக்க, இவ்வுலகத்தை விட்டே போகும்படி இக்கணமே நேரிடினும் யான் அஞ்சேன்.

முசலன் : (சிறிதுநாணி) நன்று நன்று; இனிப் பேசுதலால் பயன் என்னை! நுமது அதிகாரம் நாளைக் காலையில்

மற்றொருவர்க்கு மாற்றப்படும். ஆகலின் நீயிர் இவ் விரவினகண் உறக்கம் நீத்து வீரசிம்மன் வழக்கிற்கு முடிவுவரைதல் வேண்டா! நன்கு படுத்து உறங்குக.

**அ. தலைவர் :** உங்கள் வாசகங்களில் இதைப்போன்று எனக்கு உண்மையில் இன்பமளித்தசொல் வேறில்லை. அமைச்சரே! வந்த நீயிர் வாளாமீள்வதைவிட, நம் செயலுக்கிணங்காத என்னுடைய விடுதலை விண்ணப் பத்தையும் தாங்கள் அரசர்பெருமானுக்கு அளித்து விடுங்கள். (ஓர் ஏட்டில் தன் அதிகார விடுதலை விண் ணப்பம் எழுதி அமைச்சரிடம் புன்முறுவலுடன் கொடுத்து) வணக்கம்! வணக்கம்! நுங்கள் வருகை எனக்கு அளவிலாத விடுதலை இன்பத்தை அளித்த மைக்கு யான் நும்பால் பெரிதும வணக்கமுடையனாக இருப்பேன். வணக்கம்!

**முசலன் :** (எழுந்து) நன்று ஆயின் நான் செல்வல்.

**அ. தலைவர் :** நன்று! அப்படியே!

[அறமன்றத் தலைவரின் விடுதலை விண்ணப்பத்தைப் பெற்றுகொண்டு முசலன் வெளியேறுகிறான். அறமன்றத் தலைவா கதவைத் தாழிடுகிறான்.]

---

## காட்சி ௧௰

**இடம்:** அரண்மனையில் ஒரு மண்டபம்.

**உறுப்பினர்:** அரசன் நரேந்திரன், அமைச்சன், புதிய அறமன்றத் தலைவன் சாத்தன்.

**காலம்:** காலை.

[அரசன் ஓர் இருக்கையில் அமர்ந்திருக்கின்ருன்; முசலன் சாத்தனேடு சொல்லாடிக் கொண்டு அரண்மனைக்கு வெளியிடத்திருந்து வருகிருன்.]

**முசலன்:** சாத்தா! அரசரிடம் உரையாடும்போது நீ நன்கு விழிப்புடன் நடந்துகொள்ளல் வேண்டும். உனக்கு ஆகூழ் வநதுவிட்டது; அதனலன்ரே அந்த அறமன்றத்தலைவன் பித்தனைப்போலப் பேசித் தன் வாயிற்ருனே மண்போட்டுக் கொண்டான்! நன்று! சாத்தா! நீ நம்நாட்டு அரசியல் விதிகளை நன்ருய் ஓதியிருக்கின்ருய் அல்லவா?

**சாத்தன்:** ஆம் நன்ருகக் கற்றுள்ளேன்! ஐய, தாங்கள் எனக்குச் செய்யும் உதவிக்குக் கைம்மாறு யான் யாது செய்வேன்!

**முசலன்:** சாத்தா! நீ நல்ல ஊதியம் உள்ள அதிகாரத்தை அடையப்போகின்ருய். திங்கள் ஒன்றிற்கு ஐந்நூறு வெண்பொற் காசுகள அறமன்றத தலைவர்க்கு ஊதியமாகும். மேலும், திங்கள் ஒன்றிற்கு ஆயிரம் வெண்பொற்காசுகள வழக்குத் தொடுப்போரிடத்துப் பெறவும் கூடும். உண்மையில் நீ நல்வினை உடையவன் என்றே எண்ணுகின்றேன். நீ இப்போது ஏதேனும் பொருள் கொண்டுவந்துள்ளாயா?

**சாத்தன்:** ஆம் கொண்டுவந்துள்ளேன். இப்போது என் பால் ஐந்நூறு வெண்பொற் காசுகள் உள்ளன. மேலும, தந்தையார் (ஒரு மணிவடத்தைக் கொடுத்து)

இதனைத் தங்கட்குக் காணிக்கைப் பொருளாகக் கொடுக்கும்படி கூறி என்னிடம் கொடுத்தார்.

**முசலன்:** (அதைக் கூர்ந்து நோக்கி) சாத்தா இதன் மதிப்பு எவ்வளவு உனக்குத் தெரியுமா?

**சாத்தன்:** ஆம் இஃது இருபது கழஞ்சு எடை பொன்னுற் செய்யபபட்டது. மேலும் ஆயிரம் வெண்பொற் காசுகள் மதிப்புள்ள மணிகள் அதன்கண் பதிக்கப் பட்டுள்ளன.

**முசலன்:** நன்று இதை யான் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டேன என்று உன் தந்தைக்குக் கூறு! அவர் எனக்கு நண்பரே ஆயினும், பொருளிற் பெரிதும் கண்ணுடையவர். நான் உனக்குத் தேடிக்கொடுக் கும் அதிகாரத்தின்பொருட்டு நீ எனக்கு இன்னும் பொருள் கொடுக்கவேண்டும். குறைந்தது ஓர் ஐயா யிரம் வெண்பொற் காசுகளேனும எனக்குக் கொடுத் தல் வேண்டும் இதை உன் தந்தை ஒப்புக்கொண் டாலும் நெஞ்சார அவர் ஒப்புக்கொள்வர் என்று யான் நம்பமுடியாது.

**சாத்தன்:** ஆம்! ஆம்! அவர் பொருள் என்றால் உயிரை யும்விட்டு அதனைப்பெற நினைப்பவரே! உங்கள் நண்பரைப்பற்றி யான் உங்களுக்குக் கூறுதல் மிகை. அவர் போக, நீங்கள் இவ்வுதவியை எனக்குச் செய்த பின்னர்த் தங்கட்குச் செய்யவேண்டிய கடமை என் னுடையதே ஆகும். தங்கள் விருப்பம்போல் நான் செய்வேன்.

**முசலன்:** பொருள் பெரிதன்று! அன்பே பெரிது! உன் தந்தை எனக்குச் சிறுபருவத்திலிருந்தே ஒரு சிறந்த நண்பராயிருப்பவர். மேலும், அமயம் வாய்த்தபோது உனக்கு அரண்மனையில் ஒரு சிறந்த அதிகாரம் அளிக்கும்படியும், என்னிடம் கூறியிருந்தார். அவர் விருப்பத்திற்கியைய இங்ஙனம் ஓர் அமயம் வாய்த்

தரும் நன்றே. நிறையப் பொருள் வருவாயும் செல்வாக்கும் உடைய அதிகாரமே உனக்குக் கிடைக்கப் போகின்றது; போகின்றது என்பானேன்! கிடைத்தேவிட்டது என்று நினைத்துக்கொள்.

**சாத்தன் :** உங்கள் உதவிக்கு ஒரு கோடி வணக்கம்.

**முசலன் :** சாத்தா! அரண்மனைக்கு அண்மையில் வந்து விட்டோம்; இத்தகைய மொழிகள் இனிப் பேசப் படாது. அதோ பார்! அந்த மண்டப வாயிலில் அரசர்பெருமான் நம வரவை எதிர்பார்த்தவண்ணம் உலாவுகின்றார். நான் இரவு உனக்குக் கூறியவற்றை மறந்துவிடாமல், அரசருடன் பேசும்போது அடக்கத்துடனும் விநயமாகவும் பேசு.

**சாத்தன் :** அப்படியே நடந்துகொள்வேன்.

[அரசன் முன்னா இருவரும சென்று வணங்குகின்றார்கள். சாத்தன அரசன் அடிகளில் வீழ்ந்து வணங்குகின்றான்.]

**அரசன் :** வருக அமைச்சரே! வருக விருந்தினரே! வருக!

**முசலன் :** பெருமான் வாழ்க!

**சாத்தன் :** வேந்தர்க்கு வெற்றி சிறக்க!

**அரசன் :** உங்கள் வருகையால் யான் மிக மகிழ்ச்சி யடைகின்றேன்.

[மூவரும் மண்டபத்துட் சென்று அரசன் ஓர் இருக்கையில் அமர்ந்த பின்னர், இருவாக்கும இருக்கைகள் காட்டி அமரும்படி கூறுகின்றான், முசலன் அமர்ந்த பினனரும், சாத்தன் நிற்கிறான்.]

**முசலன் :** (சாத்தனை நோக்கி) ஐய! அமர்க! அமர்க!

[சாததன் பின்னர் அமாகிறான்.]

**அரசன் :** அமைச்சரே! இரவே உம்முடைய வரவை எதிர் பார்த்தேன். நல்லது! இப்போது இப்புதிய நண்பரை அறிந்துகொள்ள விரும்புகின்றேன்.

**முசலன் :** அரசே! இவர் நம்முடைய எந்தச் செயலினும் நம்முடனிருந்து பேசுதற்குரியவரே ஆவர். நம்முடைய முயற்சியில் ஈடுபட்டு நமக்கு உதவிசெய்யும் பொருட்டே இவரை யான் உடன் அழைத்து வந்தேன். ஆதலால் என் முன்பு பேசுதற்குரிய எந்த மறை மொழியும் இவர்பாலும் பேசப்படுதற்குரியர் இவர் என்பதை பெருமானுக்கு யான் முன்னர் அறிவிக்க விரும்புகின்றேன்.

**அரசன் :** அப்படிப்பட்ட நண்பராயின் மிக நன்றே.

**முசலன் :** பெருமான் கேட்டருள்க! நேற்றிரவு அந்த அற மன்றத்தலைவன் வீட்டிற்கு யான் சென்று இழிவு அடைந்தேன் என்றே நினைக்கின்றேன்.

**அரசன் :** ஏன்! ஏன்! உம்மை மனம் வருந்தச் செய்வாரும் உளரோ!

**முசலன் :** அந்த அறமன்றத் தலைவன் வீரசிம்மன்பால் அளவில்லாத பரிவுடையவனாக இருக்கின்றான். வீர சிம்மனிடத்து வேண்டுமளவு கைக்கூலி பெற்றிருப்பான் என்றே யான் நினைக்கிறேன்.

**அரசன் :** அப்படியா! ஆயின் அவன் என்ன சொன்னான்?

**முசலன் :** அவன், அறநெறி பிறழாத பெரியோனாம்! வீர சிம்மன் குற்றமற்றவன் என்று தான் நன்றாக அறிந்து கொண்டானாம்; அதனால் வீரசிம்மனை விடுதலை செய்யப் போகின்றானாம்; மேலும் இவ்வழக்கிற் சான்று கூறிய நமமனோர்களைச் சிறையிடும்படி கட்டளையிடப் போகிறானாம்!

**அரசன் :** நன்றாயிருக்கின்றது அமைச்சரே! அவனிடம் வீரசிம்மனைத் தண்டனை செய்யுமாறு நான் கூறியதாகக் கூறவில்லையோ?

**முசலன் :** அதுதானே வியத்தகு நிகழ்ச்சி! அரசர்பெருமான் கருத்திது என்று யான் வெளிப்படையாய்

விளம்பிய பின்னரும், "அரசன் என்னை? ஆண்டவனே எதிர்வந்துரைப்பினும் என்னுடைய கொள்கையை விடமாட்டேன்," என்று செருக்குடன் பேசினான்.

அரசன்: என்னை கேடு! அவ்வதிகாரம் அவனுக்கு யார் வழங்கியதாம்! அப்பேயனை உடனே அதிகாரத்தினின்றும் அகற்றிச் சிறைக்குள் தள்ளினால்............

மூசலன்: அரசே! அதிகாரத்தினின்றும் யானே அவனை விலக்கிவிட்டேன் தாங்கள் இரண்டாவதாகக் கூறியதைச் செய்ய அமயம் தகுதியாக இல்லை. ஏனெனில், யாம் மேற்கொண்டுள்ள செயலுக்கு முடிவு காண்பதன் முன்னரே, மேலும் மேலும் கலாங்களை ஏற்படுத்திகொள்ளுதல கூடாதன்றே! அவனுக்குத் தகுந்த பாடம் கற்பிக்கக் காலம வரும். ஆதலால் அவனை அவ்வளவுடன் விட்டுவிட்டு, நம் செயலுக்கு உதவியாக இப் புதியவரை யான் திருமுன் அழைத்து வந்துள்ளேன்.

அரசன்: அமைச்சரே நீயிர் மிகவும் பொறுமையுடையவராகக் காணப்படுகின்றீர் நல்லது இப்புதிய நண்பர் நம் முயற்சியில் எவ்வாற்றான் உதவிசெய்தற்குரியவர்?

மூசலன்: பெருமான் வாழ்க! இப்போது நம் விருந்தினரைப்பற்றித் தங்கட்கு ஒரு சிறிதுகூறி, அவரை அறிமுகப்படுத்துதல் என் கடமையாகின்றது. இவர் யாண்டால் இளையராயினும், அறிவுசான்ற பெரியாரே யாவர். நம்மிடத்தே அன்புடையவர்; பழம் பெருமையுடைய இந்நகரக் குடிமக்களுள் ஒரு சிறப்புடைய குடியிற் பிறந்தவர். கூறிய அறிவுநுட்பம் உடையவர்; நமநாட்டு அரசியல் விதிகளையும் பிறநாட்டு விதிகளையும் நன்கு பயின்றவர்; செல்வக் குடியிற் பிறந்த செம்மல்; ஆதலால் இவரை நம் நகரத்து அறமன்றத் தலைவராகச் செய்து இவர் வாயிலாய் வீரசிம்மன் வழக்கை முடிவுகாண்டல், நம் முயற்சிக்கு ஒத்ததாக

அமையும் என்று எண்ணி, இவ் வெண்ணத்தைப் பெருமான்பாற் கலந்து ஆராய்ந்து முடிவுகாணவே இவரை உடன் அழைத்து வந்துள்ளேன்.

**அரசன்:** அமைச்சரே! உமது முடிவுக்கு யான் மாறுபட்டுரைப்பவன் அல்லன். என்னுடைய நன்மையே உம்முடைய நன்மையாகக்கொண்டு முயலும் நீயிர் எதை விரும்புகின்றீரோ, அதனை யானும் விரும்புகின்றேன் நீயிர் எதனை வெறுக்கின்றீரோ அதனை யானும் வெறுக்கின்றேன். ஆதலின் இவ்விளைஞர் இன்றே, இப்போதே; இம்மாநகரத்து அறமன்றத் தலைவர் ஆகட்டும்.

**சாத்தன்:** மன்னர் பெருமான் வாழ்க! மன்னருடைய குறிப்பறிந்து, மன்னர் தம் கருததின்படியே யான் எப்பொழுதும் நடந்துவருவேன் என்று திருமுன்னர் உறுதிமொழி யுரைக்கின்றேன்.

[அரசன் அடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து நிற்கின்றான்.]

**அரசன்:** நன்று. நண்பரே! உயரிய இவ்வதிகாரத்தை நம்பால் அன்புமிக்க நும்மிடத்தே வைத்தமைபற்றி யான் பெரிதும் மகிழ்கின்றேன். அமர்க! அமர்க!

[சாததன் இருக்கையில் அமர்ந்த பின்னர்.]

**முசலன்:** பெருமானே! நம் புதிய அறமன்றத் தலைவரிடத்தே வீரசிமமன் வரலாறறினையும், பிறவற்றையும் யான் கூறி அவருடைய கருத்தையும் வினவினேன். அவர் அதுபற்றி நன்கு ஆராய்ந்து அதனை நம் கருத்துக்கியைய நடத்த வேண்டுமாயின், இவ்வாறு நடத்துதல்வேண்டும என்று கூறினார். அவர் கூறிய வழி அருமையான வழியே ஆகும். அவ்வழியை அவரே அரசர்பிரானுக்கு இப்போது எடுத்துரைப்பர். பெருமான் அதனைக் கேட்டருளுமாறு வேண்டுகின்றேன்.

**அரசன்:** அமைச்சரே! இப்போது யான் கேட்கவேணவா வுற்ற செய்தியையே கேட்குமாறு நீயிரும் வேண்டு கின்றீர்! ஆதலால், யான் மகிழ்ச்சியோடும் விழிப் புடனும் கேட்கச் சமைந்துள்ளேன் நம் புதிய அறமன்றத் தலைவர் இனி அச்செய்தியை நன்கு விளக்கிக் கூறுக.

**சாத்தன்:** அரசர்பெருமான் வாழ்க! நமது நாட்டு அரசியல் விதிகளிலே, கொலைத் தண்டனை விதிக்கப்பட்ட வழக்கைமட்டும் நமது பெருமைமிக்க கோப்பெருந் தேவியாருடைய மேலான பார்வைக்கு உய்த்து அவ்வரசமாதேவியார் உடன்பாட்டுடன், அவரது அறிகுறி பொறித்த கட்டளைபெற்ற பின்னரே, அத் தண்டனையை நிறைவேற்றுதல் வேண்டும், என்று ஒரு விதி உளது அங்கு, நம் தலைநகரமாகிய திருச் சிராப்பள்ளியில், அவ் வழக்காராய்ச்சி ஏடுகள் ஏழு நாட்கள் அறமன்றத்தே வைக்கப்படும். அவ்வேழு நாட்களில் தண்டனை பெற்றோன் சார்பில், எதிர் வழக்கு அம்மன்றத்தே தொடுக்கப் படலாம். அங்ஙனம் எதிர் வழக்காடுவோர் யாரும், அவ்வேழு நாள் அகத்தே அங்குச் செல்லவில்லை எனில், பேரரசி யார் தாமே அவ்வேடுகளை ஆராய்ந்து, தம் அறிகுறி யைப் பொறித்து மீண்டும் நமக்கே உய்த்துவிடுவர்.

**அரசன்:** அம்மம்ம! இத்துணை அல்லல்களும் உள்ளனவோ?

**சாத்தன்:** இவ்வல்லல்களின் ஊடே நாம் எண்ணியவாறே நிகழவேண்டுமாயின், நாம் மிக்க திறமையுடன் இதனை நடத்துதல் வேண்டும்; அஃதாவது:

முதலாவதாக, வீரசிம்மன் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டதைப் பிறர் அறியாதபடி மறைவாக வைத்துப் போற்றவேண்டும. அறிவாருளராயின் அவர்கள் அரசியாரிடம் எதிர்வழக்கிடக் கூடுமன்றோ? இரண்டாவதாக, வீரசிம்மன் வழக்கில் வினவப்பட்ட கரிகூறுவோர் மொழிகள் ஒன்றோடொன்று முரணாத

னின்றிப் பொருந்துவதாதல் வேண்டும். அங்ஙனம் இல்லாவிடில், எதிர் வழக்கிடுவோர் இல்லாத வழியும், எதனையும், விழிப்புடன் நோக்கும் இயல்புடைய நமது அரசியார் இது பொய் வழக்கெனக் கண்டு கொள்ளல் கூடும். அரசே! இவ்வாறிருத்தலால், இதனை வேறு சான்று கூறுவோர் யாருமின்றி, யானே சான்று கூறுவோர் சிலர் பெயரைமட்டும் குறித்துக்கொண்டு, அவர் வாசகங்களாக முரணின்றிப் பொருந்தப் புனைந்து எழுதிக்கொள்வேன். அவ்வாறே வீரசிம்மனையும் வினவாமலே வினவினாற் போன்று புனைந்து எழுதிக்கொள்வேன். அவ்விரண்டானும் வீரசிம்மனைக் கொலைத்தண்டனைக்கு ஆளாக்கி எனது தீர்ப்பையும் எழுதி முடித்துவிடுவேன். இம் முத்திறத்த ஏடுகளையும் பிறர் அறியாதபடி பேரரசியார் பார்வைக்கு உய்த்துவிடுவேன். அமைதியாய் ஏழு நாட்களை எண்ணிக்கொண்டிருப்போமாயில், எதிர் வழக்காடுவோருமின்றிப் பேரரசியார் தாமே ஆராயும்போதும் முரண்பாடின்றி, அவர்தம் அறிகுறியுடன் அவ்வேடுகள் நம்பால் மீண்டுவருதல் திண்ணம். வந்த அவ்விரவே, வீரசிம்மனை விண்ணுலகம் போக்கி விடுவோம். இம் மண்ணுலகத்தார்க்கு வீரசிம்மன் செய்த குற்றத்தை முரசறைந்து மறுநாட் காலையே அறிவித்து விடுவோம். அரசே இவ்வழியே யாம் செல்லற்குரிய நல்வழி என்று எனக்குத் தோன்றுகின்றது.

அரசன்: (சாத்தனைத் தட்டிக்கொடுத்த வண்ணம்) நண்பரே! உம்முடைய அறிவு வியத்தகும் அறிவு! நும்முடைய கருத்தை யான் முற்றும் ஏற்றுக்கொள்கின்றேன்; உமக்கு நன்றி செலுத்தவும் யான் கடமைப்பட்டவன் ஆய்விட்டேன்.

முசலன்: பெருமானே! நம் நண்பர் சாத்தனார், சாணக்கியர் பொருளுரால் முற்றும் கரைத்துக் குடித்தவர்! தங்களைப்போன்றே இவர் இவ்வழியைக்கூறக் கேட்ட

போது இவரது அறிவுத்திறத்தை யானும் வியந்தேன்.

அரசன்: வியப்பு! வியப்பு! சாணக்கியரின் மறுபிறப்பே இவர் என்றாலும் மிகையன்று!

முசலன்: ஐயம் என்னே! அச் சாணக்கியரேதான் இச் சாத்தனார்! இனி, இவர் கூறியவாறே இவ்வழக்கைப் புனைந்து, நாளையே திருச்சிராப்பள்ளிக்கு நம் பெருமாட்டியார் பார்வைக்கு உய்த்துவிடும்படி, பெருமான் சார்பில் நமது புதிய அறமன்றத் தலைவரை யான் வேண்டுகின்றேன்.

அரசன்: ஆம் அமைச்சரே! புதுவதாக நம் அரண்மனைக்கு வந்துள்ள இவர் இன்றிரவு நம்மோடுடனமர்ந்து விருந்துண்ணக் கடவர். உண்டபின்னர், நம் மறைபேசும் மன்றத்தமர்ந்தே, அவர் இவ்வழக்கேடுகளை வரைந்து வைகறைப் போதிலேயே பேரரசியார்க்குத் தூதர் வாயிலாய் உய்க்க யானும் வேண்டுகின்றேன்.

சாத்தன்: பெருமான் கட்டளை!

[மூவரும் போகிறார்கள்.]



## காட்சி ௧௦

**இடம்:** வீரசிம்மன் இல்லம்.

**உறுப்பினர்:** ஆதிரை, ஐயை, சித்திராபதி, பரிமேலழகன்.

**காலம்:** முற்பகல்.

[ஆதிரை தரைமேல் படுத்திருக்க, ஐயை ஓர் கலத்தில் பால் கொணடுவந்து]

**ஐயை:** என் அன்பே! இந்தப் பாலையேனும் ஒருசிறிது பருகமாட்டாயா? அந்தோ! எத்தனை நாட்கள் இவ்வாறு உணவின்றியும், உறக்கம் இன்றியும் ஓர் உடலில் உயிர் இருத்தற்கியலும். அன்னாய்! எழுந்திரு! ஊம்! இந்தப் பாலையேனும் சிறிது பருகு!

**ஆதிரை:** பாலும்வேறு பருகவேண்டுமோ! இப்பாழும் உயிர் போகமாட்டேன் என்கிறதே! அந்தோ! என் ஆருயிர்த் தலைவர் சிறைக்குள் எவ்வாறு வருந்துகின்றனரோ? தோழி அவரைப்பற்றிய புதிய செய்தி ஏதேனும் உனக்குக் கிடைததது்ண்டோ? அவரது அருமைத் திருவுருவத்தைக் கண்ணாற் காணவும், அவரது இனிய மொழியைக் காதாற் கேட்கவும் கூடுமாயின், என் உள்ளத்தைச் சுட்டெரிக்கும் துன்பத்தீ ஒருவாறு தணிவெய்துமே! அன்புடையாய்! மின்னல் இடித்ததுபோன்று எங்களுக்கென்று இப்பேரிடர் எங்கிருந்து வந்தது! அந்தோ! எளியேன் யான் என் செய்கேன்! இறைவனே! எங்கள் ஆற்றொணத இவ்வின்னலை நீ உன் அருட்கண்களால் பார்த்தேயும், எம்பாற் பரிவின்றி இருக்கின்றாயோ!

[எழுந்து விழுகிறாள்; ஐயை தன் கையாற் பிடித்துக்கொண்டு]

**ஐயை:** அன்னையே! எழுந்திரு. உறுதியுடனிரு! பேடற்ற இவ்வுலகியலிலே எத்தனையோ துன்பங்கள் கடல்

அலைபோல வந்து வந்து மோதுதல் இயல்பே! இன்னல் வருமபோது அதற்கு இடைந்து வருந்துதல் அறிவுடைமையன்று; அஞ்சாமல் அவ்வின்னல்களை எதிர்த்து நின்று அவற்றினின்றும் உய்ந்துபோம் நெறிநாடி அவ்வழி முயலுதலே அறிவுடைமையாகும்! ஆதிராய்! மேலும் உன கணவரைப்பற்றிய நற்செய்தி ஒன்று எனக்கிப்போது எட்டியுளது!

ஆதிரை: (திடீரென்று எழுந்திருந்து) தோழி நற்செய்தி கிடைத்துளதோ! என்ன சொல்! சொல!

ஐயை: அம்மே! நம் அறமன்றத் தலைவர், அம்பலவாணர் என்பவர் அறம்பிறழாதொழுகும் சான்றோர் என்றும், அவர் உன் கணவனார் வழக்கை விழிப்புடன் ஆராய்ச்சி செய்து, அவர் குற்றமிழைத்தவர் அல்லா என்று உறுதியாகக் கருதுகின்றார் என்றும் ஆதலால், இவ் வழக்கில உன் கணவனார் விடுதலை பெறுதல் திண்ணம் என்றும் வழக்கு நடநதபோது உடனிருந்து உணர்ந்த ஒருவர் என் தந்தைக்குக் கூறினராம்; ஆதலால் என் தந்தை இந் நற்செய்தியை உனக்குக் கூறும்படி என்னிடம் கூறினர். மேலும் உன்னுடைய திண்ணிய கற்புடைமையின் கடவுட்டன்மையேபோலும், உன் பால் அன்புமிக்க என் அருமைத் தந்தையே உன் இல்லத்தை முற்றுகையிட்டுக காக்குங் காவலர்கட்குத் தலைவனாக உன்னில்லத்திற் சேர்ப்பித்தது. இனி யான் உன்னைப்பற்றி ஏதேனும் எண்ணத் தொடங் கும்போதெல்லாம் நன்னிமித்தங்கள் தோன்றுகின் றன. அன்னாய்! அறத்திற்கும் அழிவுண்டோ? நீ நெஞ்சுறுதியுடன் இருந்து, உன் கணவர் விடுதலை பெற்று வெளிவருங்கால் அவரை எதிர்கொள்ள வேண்டாவோ! அவர் வெளியில் வருவதற்குள் நீ அவலத்தால் உயிர்விடுவாய்போல் ஆகிவிட்டாயே! ஆதிரை! இன்னும் சின்னாட்களுள் உன் கணவர் உன் பால் ஆராமையோடு வருவர்; இது திண்ணம்! எழுந் திரு! நெஞ்சுறுதிகொள்!

ஆதிரை : தோழி திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை என்பர். இவ்வல்லற் காலத்தும் என் ஆருயிர்த் தோழியாய உன்னையும், அன்புமிக்க நம் தந்தையாரை யும் என்னுடன் இருக்கவைத்து என்னைத் தேற்று வது அவ்விறைவன் திருவருளே ஆதல்வேண்டும். தோழி! யான் எவ்வளவு உறுதியுடன் இருக்க முயன்றும், அமமுயற்சி பலிக்கவில்லை. யான் அன் புடைய உனக்கும உன் தந்தைக்கும் கைம்மாறு யாது செய்யவல்லேன்.

ஐயை : ஆதிரை! உன் அல்லல் தீர்ந்து, மகிழ்ச்சியால் மலர்ந்த உன் முகத்தை யாங்கள் ஒருமுறை பார்க்கப் பெறுவேமெனில், அதனினும் நீ செய்யும் இன்பம் எமக்குப் பிறிதும் உளதோ? அஞ்சற்க! கடலபோல் வந்த இவ்வின்னலைப் பனிபோல இறைவன் அகற்றி விடுவார்! இதோ இந்தப் பாலை உண்க

[பால் அருந்துகிருள்.]

ஐயை : அம்மே! அரசியலாரால் பிறர் யாரும் புகுதாத படி முற்றுகையிடப்பட்டுள்ள இவ்வில்லத்திற்கு, யான் அடிக்கடி வருதல் விதிக்கு முரணனசெயல் ஆகும். ஆயினும், பரிவுமிக்க என் தந்தையார், உன் கணவர் விடுதலைபெற்று உன்னோடு கூடுமளவும், என்னை உன்பக்கலிருந்து, உனக்கு ஆம் பணிகள் இயற்றும்படி எனக்குக் கட்டளையிட்டுள்ளார். கண் காணிப்பின் பொருட்டுச் சிறையின்மேல் அதிகாரிகள் யாரேனும் வரும்போதுமட்டும், என்னை மறைந்து கொள்ளும்படி கூறியுள்ளார். நம் இல்லத்தின்புறத்தே நம் தநதையார் யாரோ ஒரு புதியவருடன் உரை யாடிக்கொண்டிருக்கிருர்; உற்றுக்கேள்! அவர் தம் வழக்கத்திற்கு முரணுக உரத்த குரலில் பேசுகிருர்! அவர் அங்ஙனம் பேசுவது நம்மை விழிப்பூட்டக் கருதிப் போலும். நான் இப்பலகணியை மூடிவிடு கிறேன்; நாமும் அவர்கள் உரையாடலை உற்றுக் கேட்போம். [சித்திராபதி வருகிருள்.]

காவலர் பரிமேலழகர் : பெரியீர்! தாங்கள் யார்! வீட்டிற் புகமுயல்கிறீர்கள்! புகவேண்டா! இவ்வீடு முற்றுகை யிட்டுப் பாதுகாவல் செய்யப்படுகிறது!

சித்திராபதி : ஆம் ஐய! இவ்வீடு முற்றுகையிடப்பட்ட செய்தி யானும் அறிந்ததே! இவ்வில்லத்திற் புகுதற் குரிய உடன்பாட்டுமுறி—அரசர் பெருமான் அறி குறியிடப்பட்டது—இதோ என்பால் உளது.

பரிமேலழகர் : அப்படியா! ஆயின் அவ்வுடன்பாட்டு முறியை என்பாற் கொடுங்கள். (அதனைப் படித்துப் பார்த்து) நல்லது, அப்படியாயின் தாங்கள் சென்று ஆதிரையுடன் உரையாடலாம். இன்று பகற் பதி னைந்து நாழிகைவரை உங்களுக்கு ஆதிரையுடன்பேச அரசியலார் உடன்பாடு அளித்துள்ளனர். ஞாயிற்று மண்டிலம் உச்சியை அடைதற்கு இன்னும் ஐந்து நாழிகைப்போதே உளது. குறிப்பிடப்பட்ட காலத் திற்குள்ளேயே மீண்டுவிடுங்கள்.

ஐயை : யாரோ அதிகாரியே போலும்; குரல் பெண்குரல் போல் கேட்கிறது.

ஆதிரை : தோழீ! உற்றுக்கேள்! நமது அன்பிற்குரிய தவமுதாட்டியின் குரல் அன்றோ அது!

ஐயை : ஆம்! நன்கு கூர்ந்து அறிந்துள்ளாய்! அவரே தான்; ஐயமின்று. ஆயினும், அவர் அரசர் உடன் பாட்டுடன் இவண் வந்துள்ளதாகக் கூறுகிறார். ஆத லால், யான் அயலிலுள்ள அறையில் மறைவாக இருப் பேன். நீ அவருடன் உரையாடுக; ஒருகால் உன் கணவரைப்பற்றிய செய்தி ஏதேனும் அவர் அறிந்து வந்திருத்தலும் கூடும்.

[அயலறையில் ஒளிந்து கொள்ள]

பரிமேலழகர் : (கதவைப் புடைத்து) அம்மே! உம்முடன் உரையாட யாரோ ஒரு தவப்பெரியார் அரசர் பெரு மான் உடன்பாட்டுமுறி பெற்று வந்துள்ளனர்.

ஆதலால், கதவின்றுழ்திறந்து அவரை உள்ளே வர வேற்க வேண்டுகின்றேன்.

ஆதிரை : ஐய! அவ்வாறே அப்பெரியார் வருக! (கதவைத் திறந்து சித்திராபதியை வரவேற்கிறாள்) ஆ! பெரியீர்! வருக! வருக! இத்துன்பததில் பெரியீர் வருகை எனக்கு நன்மைதரும் என்றே நம்புகின்றேன்!

சித்திராபதி : (வியந்தவள்போல் நோக்கி) ஆ! என் அருமை மகளே! நீர்ப்பெருக்கெடுத்து மீண்டும், வறறிப் போன ஆறுபோன்று, அந்தோ உன் தெய்வமேனி சீர்குலைந்து போய்விட்டதே! இப் பெருந்துன்புக்குக் காரணம் யாது?

ஆதிரை : அருள்மிக்க அடிகளே! ஆறுப் பெருந்துன்புக்கு ஆளாகிய என் உயிர் அகன்றுபோதலே முறையாகும். இன்னும எத்துணை இன்னல்களை நுகர இவ்வேழை உயிர் இவ்வுடலில் உறுதியாக நிலைத்துளதோ அறி யேன்! என் செய்வது! ஊழ் காட்டிய நுகர்ச்சிகளை நுகராது தவிர்தல் சாலுமோ!

சித்திராபதி : மகளே! இவ்வுலகத்தில் பெரும்பாலும் இன்னல் அறியாமையாலேயே விளைகின றன என்பது என் கொள்கை துன்பமோ இன்பமோ ஊழ்தர வரும் என்பதை நான் மறுக்கின்றேன் அறிவுடை யார்க்கு இன்னல்வர இடமில்லை ஒருகால் வரினும், அவர் அதற்கிடைந்து வருநதுவாரல்லர் அவ்வின்னல் வந்தமைக்குரிய காரணங்களை ஆராய்ந்தறிந்து மேலும் அவ்வின்னல் அகலும் வழிகளையும் தெரிந்துகொண்டு அவ்வழி முயன்றால் எத்தகைய இன்னலும் நாணி அழிந்தொழிதல் திண்ணமேயாம்.

ஆதிரை : அடிகளே! இப்போது எனக்குற்ற இன்னல் என்னுடைய தவற்றினலோ அன்றி என் கணவ ருடைய தவற்றினலோ நேர்ந்ததில்லையே! அறியாமை யால் யாங்கள் இவ்வின்னலைத் தேடிக்கொண்டிருந்

தாலும், அப்பொழுது நம்மால்தானே வந்தது என்னும் ஓர் ஆறுதலேனும் கிடைக்குமே. யாதொன்றும் தீது நெஞ்சறியச் செய்யாதிருக்கவேயும்........

சித்திராபதி : நீ ஒரு வஞ்சமறியாப் பேதைப் பெண்ணே ஆகின்றாய்! ஆதிராய்! யான் உன்னைக் காணவருதல் வேண்டும் என்று என் நண்பர் ஒருவரிடம் கூறிப் புறப்படும்போது, அந் நண்பர் என்னைத் தடுத்து நீர் ஆதிரையை இப்போது காணவியலாது; அவள் வீடு இப்போது அரசியலாரால் காவல் செய்யப்பட்டுளது என்றார். அதுகேட்டுத் திகைப்புற்றுப் பின்னர் அரசர்பாற் சென்று, ஆங்குள்ளாரை நன்கு வினவி, உன் கணவன் சிறைப்பட்டமைக்குரிய காரணங்களை நன்கு அறிந்தேன். அறிந்த பின்னரே அரசர்பிரான் உடன்பாடும் பெற்று உன்னைக்காண யான் விரைந்து வந்தேன். அருள்மிக்க அரசர்பெருமான் நம் அன்புக்குரிய நண்பராக இருக்கும்போது நமக்கு அப்படி அகற்றவியலா இன்னல் ஒன்றும் அணுகாது. ஆதலால் ஆதிரை நீ என்னைக் கண்டபின்னரும் ஏன் துன்புறுதல் வேண்டும். அஞ்சற்க! கதிரவனைக் கண்டபின்னரும் பனிப்படலம் அழியாது நிலைக்குமோ!

ஆதிரை : அடிகளே! பெரியீருடைய அருளுக்குரிய யான் தங்களைக் கண்டவுடனேயே தங்களால் எங்கள் இன்னலுக்கு ஒருமுடிவு ஏற்படக்கூடும் என்றே எண்ணிச் சிறிது ஆறுதலடைகின்றேன். என் கணவர் சிறைப்படுதற்குரிய குற்றம் ஏதும் செய்யாதிருக்க........

சித்திராபதி : அதுதான் ஆதிரை உன்னால் அறியப்படவில்லை என்று நான் வருந்துகின்றேன்! அதனாலன்றோ, யாங்கள் தீங்கு ஏதும் செய்யாதிருக்கவேயும் என்று திரும்பத் திரும்பக் கரைந்துகொண்டு கிடக்கிறாய்! இவ்வின்னல் வருதற்குரிய தீதை நீ செய்யாதவிடத்தும், உன் கணவன் செய்தமையாலேதான் வந்

துள்ளது. திருமகளும் விழையும் பெண்மைநலம் வாய்ந்த உன்னை மனைவியாகப் படைத்திருந்தும், உன் கணவன், இத்தகைய புல்லறிவு படைத்தது எனக்குப் பெரிதும் வியப்பாகத் தோன்றுகின்றது!

ஆதிரை: என்னை! என்னை! என் கணவன் சிறைப்படுதற் குரிய குற்றஞ் செய்தனரா! அடிகாள்! என் கணவன் அப்படி என்ன குற்றம் செய்ததாகக் கூறு கின்றனர்.

சித்திராபதி: ஆம்! நம்மரசர்கூட உன் கணவன் பொருட் டுப் பெரிதும் வருந்தினர். நம் நாட்டின் வடக்கு எல்லைக்கண், பகைவர்கள் ஊடாடுகின்ற செய்தியை ஒற்றரால் அறிந்த நம் மன்னர், உன் கணவனை நன்கு மதித்து, அவ்வெல்லையைச் சின்னாள் காவல்புரியும்படி கூறினராம். உன் கணவன் அவ்வெல்லைக்கட் சென்று பாடிவீடமைத்துத் தங்கிய அன்றிரவே நம் பகை மன்னன் ஓர் அழகிய இளமகளை—அவள் எத்துணை அழகியேதான் ஆகுக—உன் காற் றுகளுக்குக்கூடச் சமமாகாத ஒருத்தியை ஒப்பனைசெய்து உன் கணவன் பாடிவீட்டிற்குச் சில தூதருடன் உய்த்துவிட்டானும்- ஆண்மக்கள் அன்பு அறியாத விலங்குகளேபோலும்- உன் கணவன் அவள்பால் மோகங்கொண்டு, இத் தமிழ்நாட்டை அம்மாற்றலன் கையிற் சிக்கவைக்க உடன்பட்டு அவ்வழிமுயலத் தொடங்கிவிட்டானும். நல்லகாலம் உண்மையால், இந்நிகழ்ச்சியையும் கூர்மதி ஒற்றர்கள் ஒற்றிவந்துணர்த்தினர்கள். அவ்வாறு ஏதும் நிகழாமுன் உன் கணவன் சிறைப்படுத்தப் பட்டான். நம் படைஞர்களைச் சேய்மையிற் கண்ட வுடனேயே அவ்விளமகள் தன் தமருடன் ஒரு தேரில் ஏறி விரைந்து தன் நாட்டிற்குள் ஓடிவிட்டா ளாம். இச்செய்தி யெல்லாம், அருள் உருவமான மன்னரே எனக்குரைத்தார். சிறியோர் பெரும்பிழை செய்தனராயின் பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதாகத்தானே இருக்கின்றது!

ஆதிரை: பெரியீர்! நெடுநாள் உடனுறைந்து பழகிய யான் என் கணவருடைய சான்றாண்மையை நன்கு அறிவேன். தாங்கள் கூறிய குற்றத்தை என் கணவர் இழைத்திருப்பார் என்று நம்புவதைவிட ஞாயிற்று மண்டிலத்தை இருள் கவ்விற்று என்பதை நம்புதல் எனக்கு எளிதாகும். அவர்பால் அழுக்காறுகொண்ட கயவர்கள் யாரோ, இத்தகைய குற்றம் அவர் இழைத்த தாக மன்னர் முதலியோருக்குப் பொய்கூறி இவ்வாறு சூழ்ச்சி செய்திருத்தல் வேண்டும். பிறன்மனை நோக்காத பேராண்மையுடைய என் கணவர்க்கு இத் தீங்கிழைத்த கயவர் அண்மையிலேயே எத்தகைய இன்னலுக்கு ஆளாவர் என்பதை யாம் பின்னர் அறிவோம்.

சித்திராபதி: ஆதிராய்! விடு! விடு! உனக்கு இன்னும் அக் கணவன் பித்துத் தீர்ந்தபாடில்லை. ஆடவர்களுள் நம் மன்னர் பெருந்தகை நரேந்திரர் போன்றவர் ஆயிரவருள் ஒருவர் இருப்பர் எனினும், ஏனையோர் விலங்குகளைப் போன்றவர்களேயாவர்! பெண்டிர் முன்னிலையில் நல்லோர்போல் நடிப்பர்! வெளியிடங்களிலே அவர் வேண்டியவாறே நடப்பர்! அடிக்கவேயே கதியாகக் கிடக்கும் உன்போல்வார் அவர்களைக் கடவுளாகக்கொண்டு தொழுதெழ வேண்டுமாம்! அவர்மட்டும் எத்துணை மகளிரோடும் இன்புற்று வாழ்வதற்குத் தடையேதுமின்றாம்!

ஆதிரை: தாங்கள் கூறியபடி நம் மன்னர்போன்ற பெருந்தகையாடவர்களில் தலைசிறந்த ஒருவரே என் கணவர். அடிகள் இவ் வழக்கு முடிவுற்ற பின்னரேனும் என் மொழியை உணர்வீர்கள்.

சித்திராபதி: மகளே! உன் கணவன்மீது தொடரப்பட்ட வழக்கு ஆராய்ச்சி செய்யப்பட்டு முடிவும் கூறப்பட்டுள்ளது. அம் முடிவு இன்னும் வெளிப்படுத்தப்படவில்லை; அதனால் நீ இன்னும் அறிந்திலைபோலும்.

யானும் இம் முடிவினைச் சில நண்பர் வாயிலாய் மறைவாகவே அறியமுடிந்தது. அம் முடிவு தெரிந்தவுடனேதான் என் முழுமையான அன்பிற்குக் கொள்கலனாகிய உன்னை விரைந்துவந்து காணல்வேண்டும் என்னும் அவா என்னெஞ்சத்தைத்தின்று தீர்த்தது. பேதாய்! நீயே இன்னும் அவ் வன்கண் ஆடவன்பால் மயக்கமுற்றுக் கிடப்பதுகண்டு யான் பரிவு கொள்ளாதே பின் என் செய்ய?

ஆதிரை: பெரியீர்! என் கணவர் வழக்கு முடிவு கூறப்பட்டதோ! ஆயின், அறமன்றத் தலைவர் யாது கூறியுள்ளார்.

சித்திராபதி: அம் முடிவு இன்னும் சின்னாள் மறைவாக வைத்துப் போற்றப்படுதல் வேண்டும் என்பது அரசியலார் கொள்கை. ஆதலால், அதனை யான் ஈண்டு வெளிப்படையாகக் கூறுவது பெரும்பிழையாகும். ஆயினும் உனக்கு அதனை மறைக்க என் நெஞ்சம் இடந்தந்திலது. ஆதிரை! கேள்; வீரசிம்மனை நீ எண்ணுகிறபடி அறிவுசான்ற நம் அறமன்றத் தலைவர் நினைக்கவில்லை! மற்று அவரோ வீரசிம்மன் குற்றம் செய்தவன் என்றே தம் முடிவிற் குறித்துளளார்.

ஆதிரை: அந்தோ! என்குடர் குழம்புகின்றதே! என் ஆருயிர்க் கணவனைக் குற்றம் இழைத்தவர் என்றோ கூறுகின்றனர்? ஆ! கடவுளே! நீயும் இதனைப் பார்த்துக்கொண்டோ இருக்கின்றாய்?

[கீழே விழுகிறாள்.]

சித்திராபதி: (கைகளாற்றாக்கி அமரச்செய்து) அன்னையே! அதற்கு யானும் வருந்துகின்றேன். வீரசிமமன் உன் ஆருயிர்க்கு மட்டுமா கணவன்; அவன் புதிய காதலிக்கும் பொதுவானவன் என்பதை மறந்துவிடாதே. அன்புடைய பேதையாகிய உன்னை வஞ்சித்து, மற்றொருத்திக்கு மனம்வைத்த அம் மறவன் எத்துணைத்

தீயவனாதல் வேண்டும்? அவன்பொருட்டு நீ மட்டும் ஏனோ இவ்வளவு துன்புறுகின்றாய். அறிந்திலேனே!

ஆதிரை: அடிகளே! என் கணவரைத் தாங்கள் இளிவர வுறப் பேசுந்தோறும் என்னுள்ளம் துடிக்கின்றது! அவர் எத்தகைய குற்றம் செய்தவராகக் கூறப்பட் டுள்ளது?

சித்திராபதி: பிறநாட்டு அழகியின் பொருட்டுத் தன் னாட்டை அயலானுக்கு அடிமைப்படுத்த முயன்றதாக.

ஆதிரை: அக்குற்றத்திற்கு?

சித்திராபதி: தக்க தண்டனையும் விதிக்கப்பட்டுள்ளது

ஆதிரை: அடிகளே! என்ன தண்டனை விதிக்கப்பட் டுள்ளதோ? என் ஆவி அலைகின்றதே! அருள்கூர்ந்து கூறுங்கள்.

சித்திராபதி: என் அருமை மகளே! யான் உன்பாற் கொண்டுள்ள அன்பினால் நம் அரசர்பெருமானுக்குத் தீமையே செய்கின்றேன் போலும். அரசர் மறை வாகப் போற்றுமொரு செய்தியை யான் அம்பலத்தே தூற்றுவது எத்துணைப் பெருங்கேடு! யான் கெட் டொழிக! உன் கணவன் எத்தகைய தண்டனைக்கு ஆளாயினன் என்பதை உனக்குக் கூறிவிட்டதனை யானே உன் இன்னல் ஒருகால் மிகக் கூடுமேயன்றித் தணியமாட்டாது. ஆதலால், ஆதிரை! இறுதியாக என் கடமை எனத் தோன்றுவதொன்றை உனக்குக் கூறுதுபோக என்னுளம் இடந்தரவில்லை. அரசர் பெருமான் நம்பால் அன்புடையராக இருத்தலால் யாம் நினைந்ததொன்றை நினைந்தபடி இயற்றிக் கொள்ள இடமிருக்கின்றது. உன் துன்பத்தைப் போக்கும்பொருட்டே யான் இங்கு விரைந்து வந் துள்ளேன். உனது இன்னல் அகன்று ஒழிய வேண்டும் எனில் முதலில உன் பேதைமையை உதறித் தள்ளிவிடு! உறுதியாக என் சொற்படி நட! நடந்தால்

உன் வீரசிம்மன் உயிர் உய்ந்தான்; நீயும் உயரிய இன்ப வாழ்வினை எய்துதல் திண்ணம்.

ஆதிரை: ஐயகோ! பெரியீர் அவ்வாறாயின் என் கணவன் கொலைத் தண்டனைக்கோ ஆளாயினர்! விளக்கமாகக் கூறுங்கள்.

சித்திராபதி: கொலைத்தண்டனையோ! யான் அவ்வாறு கூற வில்லையே! நீ அதனை எவ்வாறு அறிந்தனை?

ஆதிரை: பெரியீர்! அவர் உயிர் உய்ந்தார் என்று கூறி னீர்களே!

சித்திராபதி: ஓ! ஓ! அப்படியா கூறிவிட்டேன்! ஆயின் நாவடக்கமின்றித் தவறு செய்துவிட்டேன்! நிகழ்ந் தது நிகழ்க! ஆதிரை நீ துன்புறவே பிறந்துள்ளாய் போலும். துன்பத்தினின்றும் விடுதலைபெற விரகி லாப் பேதையே நீ! உன் துன்பத்தை அகற்றவந்த யான் உன்னோடு சேர்ந்து அழ விரும்பவில்லை; நல்லது நீயும் உன் துன்பமுமே இங்கிருக்கக்கடவீர். எனக்கு விடைகொடு; யான் இங்கு உன்னிடம் உரைதத மறை மொழியை வெளியிடாதே! வெளியிட்டாயாயின் எனக்கும் பிணக்குழி தோண்டிவிட்டாய்! நான் போகின்றேன். அழுவதைவிட்டு அறிவுடன் உய்யும் நெறியைப் பார்.

[சித்திராபதி எழுந்துபோக ஆதிரை அவள் கைகளைப் பற்றிய வணணம்]

ஆதிரை: அந்தோ பெரியீர்! துன்பத்தில் இருந்த என்னை மேலும் பெருந்துன்பத்திலே ஆழ்த்திவிட்டீர். ஆழ்த்திவிட்டு, நீவிர் இங்ஙனம் அகன்று போதலும் அறமோ? எவ்வாறாயினும், எளியேன் மங்கல அணி யைக் காக்கும் வழிகூறுதல் வேண்டுமே!

சித்திராபதி: அப்படிவா! அதுவன்றோ அறிவுடைமை! அறிவால் அகற்றப்படாத இன்னலும் ஒன்றுண்டு கொல்! அதுவும் இச்சித்திராபதி........சீ! சீ! சித்திரா

பதி என்று ஏதோ....அதுவும் நல்லது துன்பத்தை விடு. உன் பெயரைச் சித்திராபதி என்று அழைத்து விட்டேன். ஆதிரை! நான் சொல்வதை விழிப்புடன் கேள. அவ்வாறு நடப்பாயேல் உன் துன்பம் அனைத்தும கதிர் மண்டிலத்தின்முன் இருளாய் ஒழிதலை இன்றே காண்!

ஆதிரை : பெரியீர்! அருளுடைமையால் என்னில்லத்திற்கு எளிவந்து, என் இன்னலுக்கு இதந்துணைப் பரிவுகொள்ளுமம அடிகளுககு அளியேன் கைம்மாறி யாதும் ஆற்றவல்லேன் அலலேன்! அடிகளார் கட்டளையின்படியே யான் நடந்துகொள்வேன். இப்பொழுது என் கணவனைத் தாங்களே காத்தருளல் வேண்டும். இப்போது எளியேன் என்ன செய்தல் வேண்டும் அதனைக் கூறியருள்க!

சித்திராபதி : உய்ந்தாய்! மகளே! உய்ந்தாய்! இனி நீ ஏதும் கவலவேண்டா! உன் துன்ப இருள் தொலைந்தது! யான் முன்னர் உன்பால் வேண்டியதொரு வேண்டுகோள் இப்போது உன் நினைவின்கண் உளதோ?

ஆதிரை : (சிந்தித்து) அடிகள் என்னை வேண்டிக்கொண்டதாவது எனக்கு ஒன்றும் நினைவில் வரவில்லையே!

சித்திராபதி : நினைவில்லையோ! நீ இந்நாட்டு மகளிர் முன்னேற்றக் கழகத்திற்குத் தலைவியாதல் வேண்டும் என்று முன்னர் யான் உன்னை இரக்கவில்லையோ!

ஆதிரை : ஆம்! இப்பொழுது நினைவு வந்துவிட்டது.

சித்திராபதி : நன்று நங்கையே! நீ இப்போது அத் தலைமையை ஏற்றுக்கொள்வேன் என்று உறுதிகூறு. அக் கூற்றே உன் நோய்க்கு மருந்துமாயிற்று; மேலும் அளவிலா இன்பம் நல்குமம அமிழ்தும் ஆயிற்று.

ஆதிரை : அடிகளே! அத் தலைமையை யான் ஏற்றுக் கொண்டதனால் என் கணவர் எவ்வாறு விடுதலை எய்துவர்!

சித்திராபதி : எவ்வாறென்று வினவுகின்றாயா? அக்கழகத்தின் பெருந்தலைவரும், மகளிர் முன்னேற்றத் தொண்டாற்றுவதில் அளவிலா ஆர்வம் உடையவரும், தம் உடல் பொருள் ஆவி மூன்றனையும் மகளிர் நலத்தின் பொருட்டு அளிக்க முன்வருபவரும் ஆவர் நம் அரசர் பெருமான் என்பதை நீ அறியாயோ? அவ்வரசரின் அணுக்கத் தொண்டராய் யாம் ஆய்விட்டபின்னர், இந்நாடு முற்றும் நம் குறிப்பிற்கிணங்க நடவாதோ!

ஆதிரை : பெரியீர்! அவ்வாறாயின் அத்தலைமையை யான் ஏற்றுக்கொள்கின்றேன் இனித் தாங்கள் என் கணவரை விடுதலைசெய்ய முயலுங்கள்.

சித்திராபதி : நன்று! நன்று! நங்காய்! நன்றே துணிந்தனை! (தன் மடியிலிருந்து மற்றொரு முடங்கலை எடுத்து அவட்குக்காட்டி) இதோபார் ஆதிரை! இம்முறி நீ தலைமை ஏற்றுக்கொள்வாயாயின் உன்னை அக்கணமே இம் முற்றுகையினின்றும் வெளிப்படுத்தற்பொருட்டு நம் அருட்கடலாகிய மன்னர்பிரானிடம இருந்து அறிகுறியுடன் பெற்றுவந்த கட்டளை முறியாகும். இதை இக் காவலாக்குக் காட்டினால், அப்பொழுதே உன் அடிவணங்கி விடுதலைசெய்து வழிவிடுவா. நீ துன்பந்தவிர்ந்து எழுக! என்னைத் தொடர்ந்து என் பின்னர் வருக! நாம் இப்பொழுதே அரசர்பிரானின் இளவேனில் மன்றத்திற்கு........அன்று! அன்று! அரசர்பிரானால் மகளிர் கழகத்திற்கு வழங்கப்பட்ட கழக மன்றத்திற்குச் செல்லல்வேண்டும். அங்கு அரசரும், இன்று அந்திப்போழ்தில் வருகுவர். சிறிது போழ்தின்முன் என்பாற்கூறிய உறுதிமொழியை அவர் முன்னர்க் கூறல்வேண்டும். அப்பொழுதே தொடங்கி நீயே இம் மாபெருநாட்டுத் தலைவி ஆய் விட்டாய். உன் கணவன் ஒருவனை மட்டுமா! பின்னர் உன் மலர்வாய் திறந்து இந்நாட்டுச் சிறையுள் இப்பொழுது கிடக்கும அனைவரும் விடுதலைபெறல் வேண்டும் என்று ஒருமுறை கூறுவாயேல் அப்

பொழுதே அனைவரும் விடுதலை பெற்றுய்தலை நீயே பார்!

ஆதிரை : பெரியீர்! இக்கட்டளை என்னுல் ஏற்றுக்கொள்ளத் தக்கதாக எனக்குத் தோன்றவில்லை. பெண்பாலாகிய யான் அரசரைச் சென்று காண்டல் எவ்வாறு பொருந்தும்? என் மனச்சான்று இச் செயலை உறுதியாகத் தடைசெய்கின்றது. நான் மாதர் கழகத் தலைமை ஏற்கவேண்டுமெனின் அதுவும் என் கணவர் விடுதலை பெற்றபின்னர் அவருடன கூடி வந்தே ஏற்கக்கூடும், என்று எண்ணுகின்றேன். ஆதலால் அன்புகூர்ந்து அரசர்பால் தாங்கள் சென்று என்பொருட்டு என் இன்னலை அவர்க்கு எடுத்துக் கூறிக் குறறமற்ற என் கணவரை விடுதலை செய்வியுங்கள். அவர் வெளிவநத பின்னர் யானும் அவரும் ஒருங்கே அக் கழகத் தொண்டாற்ற முனவருவோம்.

சித்திராபதி : பேதைப் பெண்ணே! சத்தியவான் உயிரை மீட்டற்பொருட்டு சாவித்திரி என்பாள் கடுங்கண் மறலியைப் பின்தொடாந்து மன்றுடி மீட்டாள் என்று கூறுவர். உன் கணவன் உயிரைமீட்க உன்பால் அன்புடைய என்னைப் பின்பற்றி வந்து அருள் உருவாகிய ஓர் அரசனைக்காண நீ நாணுவாயெனில், யான் என் செய்ய? ஆதிராய்! உன்னைக் கண்டு அரசன் இரக்கம் காட்டல இயல்பே. என்னைக்கண்டு அத்துணை இரக்கம் அரசர்க்குத் தோன்றுமோ? நீயே சொல்; இக் கோழைமையை அகற்றி, என்னைத் தொடர்ந்து நீ வந்தாலன்றி உன் கணவனுக்கும் உன் இன்னலுக்கும் முடிவில்லை தனிச்சென்று உன் கணவனை விடுதலை செய்யும ஆற்றலும் என்பாலில்லை. கதிரவன் உச்சிக்கு வந்துவிட்டான்; யான் இஙகிருத்தற்குரிய காலமும் கழிந்துவிட்டது; விரைந்து கூறு! நீ என்னுடன் வருகின்றுயா? மாட்டாயா?

ஆதிரை : (நீளச் சிநதனைசெய்து பெருமூச்செறிந்து) அடிகளே! எவ்வாற்றுல் சிந்தனை செய்யினும் உங்களைத்

தொடர்ந்து யான் வருதல் தகுதியென்று என் உளத்தில் தோன்றவில்லை; ஆதலால் உங்கள் அன்புடைமைக்கு யான் பெரிதும் நன்றி செலுத்துகின்றேன். இனித் தாங்கள் சென்று வருக! வணக்கம்.

சித்திராபதி : (சிந்தனையில் ஆழ்ந்து) அப்படியா! என் அன்பே, ஆதிரை! நீ வருந்தவேண்டா. உன்னை அழைத்துச் சென்றால் எளிதில் உன் கணவனை விடுதலை செய்தல்கூடும் என்றே இத்துணையும் கூறினேன். நீ வாராதிருப்பாய் எனினும வருந்தாமலாவது இங்கிரு. நம் மன்னர்பால் உன்பொருட்டு யான் மட்டுமே சென்று இரந்து பார்க்கிறேன். அருட்கடலாகிய அரசர் பெருமான்பால் உன்னிலைமையை யானே சென்று கூறுகிறேன். ஒருவர் இத்துணைப் பெருந் துன்பில் அழுந்துவதைக் கேட்டாலே அவர் மனம் பொறுமல் வருந்துவர். ஒருகால் அவரே உன்னிலையை நேரில் தாமேவந்து கண்டு உன் இன்னலைப் போக்க முற்படினும் படலாம். மகளே! வருந்தேல்! நான் சென்று முயல்வேன். வருந்தாதே!

[போகிறாள்.]

## காட்சி கக

**இடம்:** வீரசிம்மன் இல்லம்.

**உறுப்பினர்:** ஆதிரை, ஐயை, பரிமேலழகர், காவலர்கள்.

**காலம்:** பிற்பகல்.

[ஐயை ஓர் அறையினின்றும் வெளிவந்து]

**ஐயை:** (தனக்குள்) அந்தோ! முன்னரே பெருந் துன்பத்திற்கு ஆளாகியிருந்த ஆதிரை மேலும் தேற்றுெருவாறு கையறு நிலையை எய்திவிட்டாள். கணவர் சிறைப்பட்டார் என்பதைக் கேட்டதற்கே பொறுக்கவியலாத் துயருழன்ற அப் பூங்கொடி, அவர் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டார் என்னும் இக் கொடிய செய்தியைக் கேட்டு உயிர் வாழ்தல் எங்ஙனம்? அந்தோ! நற்குண நற்செயல்களுக்கு உறையுளாய் விளங்கும் அவள் கணவனுர்க்கும இத்தகைய இன்னல் நிகழ்தல்அடாது! அடாது! இனி யான் என் சொல்லி எவ்வாறு தேற்றவல்லேன்! என் உள்ளம் வெடித்து விடும்போலத் தோன்றுகின்றது ஆ! கடவுளே! தூய இக் காரிகையை இனி உன் திருவருளே தேற்றல் வேண்டும்.

[ஆதிரையின் அறைக்குள் போகிருள்.]

**பரிமேலழகர்:** (ஒரு காவலனை நோக்கி) சடையா! இத் தவப் பெரியார் யாரடா? எங்கேயோ எப்பொழுதோ பார்த்த நினைவு உண்டாகின்றது. யார் என்றுமட்டும் தோன்றிற்றில்லை!

**சடையன்:** தலைவரே! இவளை நீயிர் இன்னும் அறிந்து கொள்ளவில்லையோ? இவள்தான் சித்திராபதி; அந்தக் கிழக் கணிகை............

**பரிமேலழகர்:** அடே! அடே! சீ சீ அவள்தானு? ஆம்; இப்பொழுது நினைவுவருகின்றது. அடே! அப்பா! இப்பொழுது எத்துணை கொழுத்துக் கிடக்கின்றுள்!

சில ஆண்டுகட்கு முன் இவள் கஞ்சிக்கும் வழியின்றி உடல்வற்றி இத் தெருக்களிலே அடிக்கடி சுற்றிக் கொண்டிருப்பாளே, அவள் தானே இவள் ?

**சடையன்:** ஆம்; அவளேதான். நம் புதிய மன்னர் வந்தகன் பின்னர் இவளுக்கு மிகப் பெரிய நல்வினை வந்துவிட்டது. அரண்மனையில் நல்ல வருவாய் உள்ள வேலை இவளுக்குக் கிடைத்துவிட்டது !

**பரிமேலழகர்:** வேலையா? அதென்னடா! இவள் என்ன வேலை செய்யக்கூடும் ?

**சடையன்:** அதுவா? நமது புதிய மன்னர் பெரிதும் பெண்பிததுப் பிடிததவர். அவருக்குப் பெண் பிடித் துக் கொடுக்கும வேலை இவளுடையது. நமது அரண் மனைக் கருவூலமே இப்பொழுது இவள் கண்காணிப் பிற்றுன் இருக்கிறது ! நல்ல யோகம் ! நல்ல கொள்ளை!

**பரிமேலழகர்:** ஓ! ஓ! அவளைப் பார்த்தாலேதான் தெரி கிறதே "பணக்காரன் பிள்ளையும் பால்மாட்டுக் கன் றும் பார்த்தாலே தெரியாதா" என்பார்கள். பணத் திற்கு இருக்கும் ஆற்றல் வேறு எதற்கும் இல்லை. "பொருளல்லாதாரைப் பொருளாகச் செய்யும் பொரு ளல்லது இல்லை பொருள்," என வள்ளுவர்கூடப் பொருளைப் போற்றினுர் என்றுல், அதன் பெருமை எளிதன்று. உருவத்தைப பார்த்தாயா! வற்றல் மரம்போன்றிருந்த வுடல் தள தளவென்று பருத்துப் பஞ்சுப் பொதிபோன்று ஆகிவிட்டது. இவள் இங்கு ஏன் வந்தாள் ?

**சடையன்:** தலைவரே! அவள் ஏன் இங்கு வந்தாள் என்ப தும் அறிந்து கொண்டேன். ஆதிரையுடன், இவள் உரையாடிய பொழுதெல்லாம் யான் அந்தப் பலகணி இடுக்கில் செவி வைத்து ஒரு சிறிதும் எஞ்சாமற் கேட்டு விட்டேன். ஆதிரையை அரசன்பால் அழைத் துக்கொண்டு போக இவள் தன்னுலியன்றவரை முயன்

றாள். ஆதிரைக்கு எதன்பொருட்டு இவள் இத்தனை ஊக்கத்துடன் முயல்கிறாள் என்பது தெரிந்திலது. ஆதிரை இவளை மிகப் பெரிய துறவி என்றே நம்புகின்றாள். எனினும், அவள் வேண்டுகோட்குமட்டும் இவள இசையவில்லை. ஆதலால் நாய்போலத் திரும்பிப் போய்விட்டாள்.

**பரிமேலழகர் :** அப்படிச் சொல்; நான் உன் பேச்சிலிருந்து வீரசிம்மன் சிறையிடப்பட்டதற்கும் இவள்தான் காரணம் ஆவாள் என்று எண்ணுகின்றேன். நல்லது; வீரசிம்மனை விடுதலை செய்ய இனி யான் என்னாலியன்ற வரை முயல்வேன்.

**சடையன் :** வீரசிம்மன் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளான் என்றும், அச் செய்தி மறைவாகப் போற்றப்பட்டுளதென்றும், இப்பொழுதுதான் சித்திராபதி சொல்லக் கேட்டேன். ஐயோ பாவம்! இச் செய்தி கேட்ட பின்னர் ஆதிரை எப்படித்தான் உயிர்தரிப்பாளோ, அறியேன்

**பரிமேலழகர் :** என்னை! என்னை! கொலைத் தண்டனை விதிக்கப்பட்டு மறைவாக வைத்துப் போற்றப்படுகின்றதா? அபபடியானல், இபபொழுது ஆதிரை ஏன் காவலில் வைக்கப்பட்டுள்ளாள் என்பதற்கும் ஒருவாறு காரணம் தோன்றுகின்றது. எனவே, நான் மிக விரைந்து இவர்கள் விடுதலைக்காக முயல வேண்டும்.

**சடையன் :** ஆம் தலைவரே! அங்ஙனம் செய்வது பேரறம் என்றே தோன்றுகின்றது. அடியேனும தங்களுடன் ஒத்துழைக்கச் சமைவாக விருக்கின்றேன்.

**பரிமேலழகர் :** அன்பனே! இன்று நாம் ஈண்டுக் காவல் மேற்கொண்டு வந்து ஏழெட்டு நாட்கள் ஆகின்றன. கொலைத் தண்டனை விதித்தால் அந்த முறிகள் நம் இராணி மங்கம்மாள் பார்வைக்கு உய்த்து அங்கு ஏழு

நாட்கள் வைக்கப்படும் என்றும், அவ்வேழு நாட்களுள் விடுதலை வழக்குத் தொடரப்படுதல் வேண்டும் என்றும் அங்ஙனம் எதிர் வழக்காடுவோர் இல்லையாயின ஏழாநாள் அம்முறிகள் திருப்பி உய்க்கப்பட்டு அத் தண்டனை நிறைவேற்றப்படும் என்றும், நமது நாட்டின் அரசியல் விதி கூறுதலை யான் நன்கு அறிவேன். ஆகவே, வீரசிம்மன் வழக்கு முறிகள் இப்பொழுது இராணியார் பார்வைக்கு உய்க்கப்பட்டிருத்தல் வேண்டும் அது மீண்டும் வருந்துணையும், அச் செய்தி மறைவாக வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஆதிரை வெளிபட்டால ஒருகால் எதிர்வழக்கிடக்கூடும் என்றும், மேலும் அத் தீயமன்னன் ஆதிரையைத் தன் விருப்பத்திற் கிசைவிக்கக் கருதியுமே, இவ் வில்லம முற்றுகையிட்டிருக்கின்றது போலும். ஆம்! ஆம்! யான் ஐயமற அறிந்துவிட்டேன. இனி என் உடல், பொருள், ஆவி மூன்றும் ஆதிரையின் நலத்தை மீட்கும்பொருட்டு வழங்குவேன் இன்றேல் வீரசிம்மனுடன் யானும் ஒன்றாய் மடிதல் திண்ணம்.

[ஐயை மீட்டும் தந்தை பரிமேலழகரிடம் துன்பத்தோடு கையை நெரித்துக்கொணடு வருகிறாள்.]

**ஐயை :** அன்புடைய தந்தையே! இனி என் தோழி ஆதிரை உய்யமாட்டாள்! ஆ நான் என் செய்வேன்!

[அழுகிறாள்.]

**பரிமேலழகர் :** பேதையே! ஆதிரைக்கு ஆறுதல் கூற வந்த நீயே இவ்வண்ணம் அழுதால், அவள் கதி என்னும். ஐயாய்! என் நெஞ்சத்தே ஆதிரையின் துன்புக்கு விடுதலை உண்டென்று ஏதோ ஒன்று உள்ளிருந்து கூறுகின்றது. அது கடவுளின் குரலே என்பது திண்ணம். நீ ஆதிரையிடம் சென்று உளத் துணிவுடன் என் உரைகளைச் சிறிது கேட்டு அதன்படி முயலும்படி கூறி, அவளை ஊக்கம் செய்! வீர

சிம்மன் விடுதலைக்குரிய நற்செய்தி ஒன்று எனக்குக் கிடைத்துள்ளது அதனையும் அவளிடம் கூறு! போ!

**ஐயை :** (ஆதிரையிடம் சென்று) அன்பே தந்தையார் கூறிய நற்செய்தியைக் கேட்டாயா! உன் கணவர் விடுதலையடையப் போகிறாராம். இச் செய்தியை உன்னிடம் கூறச் சொன்னார். அம்மே! எழுந்திரு! இன்னும் சில செய்திகள் யாம் பேசுதல் வேண்டும்.

**ஆதிரை :** (எழுந்து அமர்கிறாள்) தோழி என் கணவர் விடுதலையடையப் போகின்றாரா? யார் சொன்னது? ஒருகால் நம் தவமுதுமகளார் அரசனிடம் மன்றாடி அவர் விடுதலைக்கு முயன்றிருப்பரோ?

**ஐயை :** ஆதிராய்! எப்படியோ உன் கணவன் விடுதலை அடைவர் என்று தந்தையார் தாம் கூறினர். மேலும் அவர் உன்பால் யாதோ கூறவிரும்புகிறார். நீயோ இப்படி எழுந்து நிற்றற்குக்கூட வலிமையின்றிக் கிடக்கின்றாயே........

**ஆதிரை :** தோழி! என் கணவர் விடுதலை பெறுவர் என்பது எனக்குத் திண்ணமாய்த் தெரிந்துவிட்டால், அந்தக் கணமே என் ஆற்றல் முழுதும் என்பால் வந்துவிடுமே தந்தையாரை அன்புகூர்ந்து இங்கே அழைத்திடு! அவ்வருளாளர் மொழிகளைக் கேட்க யான் பெரிதும் விரும்புகின்றேன். யாங்கள் உய்ய இன்னும் வழியுளதோ!

**பரிமேலழகர் :** (உள்ளே வந்து) அன்னையே! இறைவன் அருளால் உய்யுமவழி தோன்றிவிட்டது! வழி இது எனறு அக்கடவுள என் உள்ளிருந்து உணாததியும் விட்டார்! ஆதலால் அஞ்சாதே. அதன் பொருட்டு அக்கடவுள் காட்டிய நெறியில் யாம் சிறிது முயலவும் வேண்டும். நீயோ இவ்வாறு மெலிந்து...........

**ஆதிரை :** தங்கள் மொழியமுதம் என் செவியிற்பட்டவுடனேயே, என் அருமைத் தந்தையே! என்னுளத்

தில் புதியதோர் ஊக்கமும் உணர்ச்சியும் ஏற்பட்டு விட்டன. ஆதலால், நான் இப்போது தாங்கள் கூறியபடி முயல முன்வருகின்றேன். யான் யாது செய்யவேண்டுமே?

பரிமேலழகர்: மகளே! குறிப்பாகவும், சுருக்கமாகவும் உன் கணவன் சிறைப்பட்டமைக்குரிய காரணத்தைச் சொல்கிறேன். நீ அறிவுடையை ஆதலின் எளிதின் அறிந்துகொள்ளலாம் இங்கு வந்துபோன கிழவி பொல்லாத ஒரு கணிகை; நம புதிய மன்னன் ஒரு காமுக விலங்கு; நீயோ ஒப்பற்ற பேரழகி; இப்போது இந் நிகழ்ச்சிக்குரிய காரணங்களை நீ அறிந்திருப்பா யன்றே?

ஆதிரை: ஆ! அப்படியா! அந்தோ தெரிந்துகொண் டேன்........

பரிமேலழகர்: அதன்மேல் உன்னை எளிதில் அடைய முடி யாது என்று அவர்கள் அறிந்த பின்னா, உன் கண வனைக் கொன்றேனும் உன்னைத் தம் வழிப்படுத்தத் துணிந்தனர் அவ்வன்கட் கயவர்கள்!

ஆதிரை: அந்தோ! தந்தையே! அவ்வாறாயின் யானே என் கணவற்கு இறுதிகாட்டியவள், ஆகின்றேனே!

பரிமேலழகர்: அஃது உன் குற்றமா அம்மே! கடவுள் அங்ஙனம் நிகழவிடமாட்டார். அதனாலன்றே அம் மறைபொருளை அக் கிழவியின் வாயிலாய் இறைவன் நமக்கு அறிவுறுத்திவிட்டார். நன்று அதைப்பற்றி இனிப பேசுதற்கு அமயமின்று.

ஐயை: தந்தையே! நாம் இப்போது செய்யவேண்டியது யாது?

பரிமேலழகர்: நாழிகை இன்னும் நாற்பத்தைந்துள்ளன; ஆதிரை இன்றிரவிற்குள் ஏறக்குறைய இரண்டு காவ ததொலை நடந்து தீரவேண்டும். நடந்துவிடுவாளா யின் வீரசிம்மன் அக்கணமே விடுதலைபெற்றான்

ஆதிரை : தந்தையே இருகாதமல்ல இருபது காதங்கள் நடப்பேன் எங்கே செல்லவேண்டும்? என்ன செய்தல் வேண்டும்? அவற்றைக் கூறுங்கள்!

பரிமேலழகர் : ஆம் அணங்கே! அஞ்சவேண்டா! நீ உன்னுடன் இவ் ஐயையையும் அழைத்துக்கொண்டு, நம் நகரிலிருந்து நமது தலைநகர்க்குச் செல்லும் பெரிய சாலையின் வழியே, இருட்டியவுடனே எழுந்து விரைந்துசெல். திருச்சிராப்பள்ளிக்குச் செலவது அந்தச்சாலை. வேறு கிளைவழிகளும் இல்லை ஆதலால் இறைவனுல் உலகெங்கும் இடப்பட்டுள்ள இவ்விருள் திரைமறைவில் பெண்பாலராகிய நீவிர் இருவருமே விரைந்து செல்க! இறைவன் உங்கட்குத் துணையுளன்! அஞ்சாதே செல்லுங்கள்.

ஐயை : அன்பார்ந்த தந்தையே! செல்கிறோம், சென்று அங்கே யாது செய்தல் வேண்டும்?

பரிமேலழகர் : (ஐயையைப் பார்த்து) மகளே! நீயே எனக்கு ஆதிரை! அவ்வாதிரையே நீ ஆகின்றாள். விழிப்புடன்கேள்; நாளைக்குப் பத்து நாழிகைக்கு அரசி மங்கம்மாளின் அரண்மனை வாயிலிற் கட்டியுள்ள ஆராய்ச்சி மணியை ஆதிரையை அடிக்கச் செய்து, நீ சிறிது அயலிலே நிற்றல் வேண்டும்; அவ்வளவே இது செய்து முடிநதால் உங்கள் வேலை முடிந்தது.

ஆதிரை : அன்புடைய தந்தையே! எனக்கு நீங்கள் பரிவுறுகின்றீர்கள். இப்போது யானே உங்கள் பொருட்டுப் பரிவு கொள்ளுகின்றேன். திருச்சிராப்பள்ளிக்குச் செல்ல இவ்விளமகள் என்னுடன் வரவேண்டா! யானே செல்வேன்! அச்சம் எனக்கு ஒருசிறிதும் தோன்றவில்லை. ஒருகால் இன்றிரவு யாரேனும் சிறையதிகாரிகள் இங்குவந்து கண்காணித்தால் யான் இங்கு இல்லாமையால் உங்களுக்கு இன்னல் நேருமே என்றும் அஞ்சுகின்றேன்.

**பரிமேலழகர் :** மகளே! என் மகள் ஐயைக்கு இப்பொழுது இவ்வின்னல் நேர்ந்துளதாக வை; ஆயின் நான் இப்போது செய்யத் துணிந்ததனைத்தும் செய்தே தீர்வேன் அன்றோ? ஆதிரை! நீ என் மகள் ஆயின் என்னைப்பற்றி நீ இவ்வாறு வருந்தவேண்டா; நீவிர் இருவரும், விரைவில் உண்டு, வழிச்செலவிற்கு அமையுங்கள். செல்லும்போது, நீங்கள் செல்லும் வழியில் திருச்சிராப்பள்ளியிலிருந்து இந்நகருக்கு அஞ்சல் கொண்டுவருபவன் ஒருவனை நீங்கள் எதிரே காணக் கூடும். இன்று இந்நகரத்திற்குத் தலைநகரத்திலிருந்து அஞ்சல் வருகிற நாளாகும் ஒருகால் வீரசிம்மனுடைய வழக்கு முறிகளை இன்று அவன் கொண்டு வரவும்கூடும். அஞ்சல் கொண்டுவருபவனை நீங்கள் காணுவீராஞல், அவனிடம் உங்கள் செய்திகளை விளக்கமாகக்கூறி, அவனை ஒருநாள் இடையே காலந் தாழ்த்தி இருக்கும்படி வேண்டுக. அவன் நம் மரபினன்; இரக்கமுள்ள கிழவன்; உங்கள் பொருட்டு அவன் இரங்கி அவ்வாறு செய்ய உடன்படுவான். மேலும், ஐயை! அவன் நமக்கு ஓர் உறவினனும் ஆவான். ஆதலின் நீ, அவன்பால், "நான் பரிமேலழகர் மகள்" என்று கூறுவாயாஞல் அவன் நீங்கள் விரும்புகிறபடி செய்வான். நன்று! இருள் சூழ்ந்து விட்டது; இனி உங்கள் கடனை ஆற்ற முற்படுவீர்களாக.

[ஆதிரையும், ஐயையும் பரிமேலழகர்க்கு வணக்கஞ் செலுத்திவிட்டுச் செல்கின்றனர்]

---

## காட்சி கஉ

**இடம்:** வீரசிம்மன் இல்லம்.

**உறுப்பினர்:** பரிமேலழகர், சடையன், சித்திராபதி, அரசன்.

**காலம்:** நள்ளிரவு.

[பரிமேலழகர் சடையனை நெருங்கி]

**பரிமேலழகர்:** சடையா! இன்றிரவு நீ இவ் இல்லத்தினுள் ஆதிரை அறையில் மகளிரைப் போன்று உடுத்திக் கொண்டு உறங்குதல் வேண்டும்!

**சடையன்:** (புன்முறுவலுடன்) ஏன் அப்படி?

**பரிமேலழகர்:** ஒருகால் மேல் அதிகாரிகள் இன்றிரவு கண் காணிப்பின் பொருட்டு வருவார்களாயின் பலகணி வழியாய் உன்னையே ஆதிரையென்று காட்ட எண்ணு கின்றேன்!

**சடையன்:** நன்று; தலைவரே! அவ்வாறே யான் ஆதிரை யின் அறையில் சேலையுடுத்து முக்காடிட்டு உறங்கு வேன்

[உள்ளே போகிறான்.]

**பரிமேலழகர்:** சடையா! இன்றியமையாது வேண்டப்பட் டால் ஒழியக் கதவைத் திறத்தல் வேண்டா! ஆத லால் கதவுகளின் உள்ளே உள்ள தாழ்களைச் செறித்துவிடு.

**சடையன்:** நன்று தலைவரே! அங்ஙனமே செய்வேன்.

[உள்ளே தாழ் இடுகிறான்.]

**பரிமேலழகர்:** அருட்கடலாகிய இறைவன் இக்கூரிருளிற் சென்ற மகளிரைக் காப்பாற்ற வேண்டும்.

[பெருமூச்சுடன் தெற்றியில் சாய்கிறான்; நள் ளிரவில் சித்திராபதியுடன் அரசன் எளிய ஆடையுடன் வருகிறான்.]

சித்திராபதி : (தனக்குள்) எவ்வளவு முயன்றும், ஆதிரையை அரசன்பால் கொண்டுவர இயலவில்லை; எனினும் ஆதிரையினிடம் அரசனையேனும் கொண்டு போய்ச் சேர்ப்பேன்! ஒரோவழி என்னுடைய உரைகளைவிட இவனுடைய பேரழகு அவள் கண்களைக் கவரக்கூடும் என்று நினைக்கின்றேன். பேதை ஆதிரை! எத்துணை ஆரவாரமான வாழ்க்கை உனக்கு வலியவே வருகிறது! அதனை ஏற்றுக்கொள்ள விதியின்றி, கற்பு என்னும் அப் பொய்மை வலிந்துபிடித்துக் கொண்டு துன்பக் கடலுள் மூழ்கிக் கிடக்கின்றாய். உன் கற்பின் கதி இன்றிரவு இக் காமுகன் முன்னர் என்னும்,........

அரசன் : ஏடி சிததிராபதி! இந் நள்ளிரவில் அரசனாகிய யான் எளியாரைப் போன்று இவ் விருண்ட தெருவில் செல்வதை யாரேனும காண நேர்ந்தால்........

சித்திராபதி : அரசர்கள் நள்ளிரவில் நகர் சோதனைக்குத் தனியே செல்லுதல் அவர்களுக்குரிய செயல்தானே!

அரசன் : ஆம்! எப்படிக் கூறினும் நான் நமது இளவேனில மன்றத்திலிருந்து ஆதிரையை இன்றிரவு காணவேண்டும் என்று நினைத்தபொழுது இருந்த மனத்திண்மை எனக்கு இப்போதில்லை. கரிய இவ் விருளில் நடக்கும்போது என்மனம் ஏனோ குழம்புகின்றது, சித்திராபதி! நாம ஆதிரையின் இல்லிற் புகுந்தவுடன் அவள் நம்மை நன்கு வரவேற்று முகமன் மொழிவாள் அல்லளோ!

சித்திராபதி : அவள் கணவனைப்பற்றிப் பெரிதும் வருந்தி உடல் மெலிந்து கிடக்கின்றாள். ஆயினும், அரசர் பெருமானை அவள் மதித்து முகமன் கூறுமலிருத்தற்கியலாது. மேலும் தங்கள் அருளைப் பெற்றுத் தன் கணவனை மீட்கவேண்டும் என்னும் அவாவுடைய அவள் இப்போது தங்கள்பால் பெரிதும் அன்பு காட்ட முற்படுதல் இயல்பே அன்றோ!

அரசன்: அத்துணையே அமையும்! அவள் முகமலர்ந்து என்னுடன் ஒருசில மொழியேனும் இன்று பேசுதலே எனக்குப் போதியதாகும்! அப் பேச்சைப் பற்றுக் கோடாகக் கொண்டு மெல்ல மெல்ல அவளை இரந்து எவ்வாறுயினும்........

சித்திராபதி: பெருமானே! கைக் கெட்டியது வாய்க்கெட்டாது போய்விடுமோ! ஆதிரையின்பால் தாங்கள் பேசும்போது மிக மிக இனிதாய்ப் பேசி மெல்ல மெல்ல அவளை வழிப்படுத்த வேண்டும். ஒருவேளை தனியே இரவில் அவளைக் கண்டவுடன் ஏதேனும்.... காமத்திற்கு கண்ணில்லை அன்றோ!

அரசன்: சீ! சீ! ஏடி கிழவி! என்னை இங்கிதம் அறியாதவன் என்று கூறுகின்றாய்! அப்படி முருட்டுத் தன்மையாக நடப்பேனோ? நன்கு பதம் பார்த்துப் பேச யான் அறிவேன்.

சித்திராபதி: பெருமானே! அதோ ஒற்றை விளக்கொன்று மங்கிப்போய் அணையும் செவ்வியில் தோன்றுகின்றதே அதுதான் ஆதிரையின் இல்லம். இனி யாம் விழிப்புடன் நடந்துகொள்ள வேண்டும். மனதைத் திடப்படுத்துக அரசே! உறுதிகொள்க.

[இருவரும் ஆதிரையின் வாயிலையடைய, இவர்கள் வருகையுணர்ந்து கொண்ட பரிமேலழகா உறங்குவதுபோலக் கிடக்கின்றார். சித்திராபதி அவரைத் தட்டுகிறாள்.]

சித்திராபதி: (மெல்லிய குரலில்) அடே! அடே! காவலனே! காவல் விழிப்புடன் நிகழ்கிறதே! அடே! அடே! காவலனே

[காவலன் மெல்ல எழுந்து கொட்டாவிவிட்டுக் கொண்டு கண்களை மூடிமூடித் திறக்கிறான்.]

சித்திராபதி: அடே! நல்ல ஊழியக் காரனடா நீ! சூ! சூ! எழுந்திரு.

பரிமேலழகர்: (வாளைக் கையில் எடுத்துக் கொண்டு) நீ யாரம்மா? சூ! சூ! வாவது, சோ! சோ! வாவது; போ வெளியே! இவ் வீட்டில் ஒருவரும் புகக் கூடாது! விரைவில் வெளியே போய் விடு!

சித்திராபதி: ஏடா! நன்றாக விழித்துக்கொள்! நான் யார் என்று உனக்குத் தெரியவில்லையா?

பரிமேலழகர்: தெரியவில்லையே! நீ யார்? ஏன் இந் நள்ளிரவில் என்னை அல்லற் படுத்துகிறாய்?

சித்திராபதி: அடே! அதோ அரசர் பெருமான் வெளியே இருளில் நின்றுகொண்டிருக்கிறார்; எழுந்திரு! இவ் வில்லத்தில் அரசர் ஏதோ கண்காணிக்க வேண்டு மாம்! எழுநது கதவைத திற!

பரிமேலழகர்: ஆ! அரசர் பெருமானா! அந்தோ கெட் டேனே! அப்போதே சொலலக்கூடாதா!

[விரைந்து எழுகிறார்.]

சித்திராபதி: கிழவா! கூச்சலிடாதே! மெல்லப் பேசு! விரைந்து கதவைத்திற!

பரிமேலழகர்: இதோ திறக்கிறேன்; இந்தப் பூட்டு நம் அரசியலார் பூட்டு; இதைத் தான் யான் திறப்பேன்; இக் கதவுகள் உள்ளே தாழிடப்பட்டுள்ளன. அதை ஆதிரையன்றோ திறக்கவேண்டும்.

சித்திராபதி: ஆம்! ஆதிரையைக் கூப்பிடு! அவளுடைய அன்பிற்குரிய தவமுதுமகள் வநதிருப்பதாகக கூறு. அவள் உடனே திறந்துவிடுவள்.

பரிமேலழகர்: (சிறிது சிந்தனை செய்து) ஓ! யான் இப் போது உணர்ந்து கொண்டேன் அம்மே! இப்போது யான் உணர்ந்துகொண்டேன்! பெருமான், இபபடி வந்து அமர்ந்தருள்க! யான் ஆதிரையை எழுப்பு கின்றேன். (பலகணியின் அண்மையில் நின்று) அம்மே! அம்மே! ஆதிரை! அரசர் பெருமானும்,

தவமுதுமகளும் வந்திருக்கிறார்கள். அவர்களை யாம் நன்கு வரவேற்று முகமன் கூறவேண்டும். எழுந்திரு! கதவின் உள் தாழ்களைத் திற, உன்னுடைய அறையின் பக்கத்தே உள்ள அறையிலே அவர்களை இருக்கைகளில் அமரச்செய்தல் வேண்டும். அங்கொரு விளக்கேற்றி வை அம்மே! விரைந்து செய் அம்மே!

[சடையன் எழுந்து ஓர் அறையில் விளக்கேற்றி இரண்டு நாற்காலிகளையிட்டு வைத்துப் பின்னாச சேலைபால் முக்காடிட்டபடியே வந்து திறந்து விடுகிறான்.]

பரிமேலழகர் : (கதவுகளின் அண்மையில் நின்றுகொண்டு) அம்மே! திறந்துவிட்டாயா! இனி நீ உன் அறைக்குட் போய் விடு. பெருமான் விரும்பினால் பின்னர் வரலாம்.

[சடையன் தன் அறைக்குள் போய்விட பரிமேலழகா இருவரையும் உள்ளே அழைத்துப் போகிறார்.]

சித்திரபதி : காவலனே! பெருமானுக்கு வழிகாட்டி அழைத்துச்செல்.

பரிமேலழகர் : பெருமான்! இவ்வழியே வருக! இவ்வழியே வருக! (இருகையைக் காட்டி) இருவரும் இவ் எளிய இருக்கைகளிலே அமர்ந்தருள வேண்டுகின்றேன்!

அரசன் : நன்று! காவலனே! நீ ஆதிரையை இவ்வறைக்கு அழைத்துவா! அவள் உடல் வலிமை யுடையளாய் இருக்கிறாளா!

பரிமேலழகர் : பெருமான் கட்டளைப்படியே!

[அறையின் பலகணி ஒன்றைத திறந்துவிட்டு, கதவுகளைச் சாத்திப் பூட்டுகின்றான்.]

சித்திரபதி : ஏனடா கிழவா! ஏன் கதவுகளைப் பூட்டுகின்றாய்?

பரிமேலழகர் : பெரியீர்! ஆதிரை வருமளவும் அரசர் பெருமானுக்குத் தீங்கு நேராதிருக்கும் பொருட்டே.

அரசன் : ஏடி சித்திராபதி! அஃது அவனுக்கு அவ்வண்ணம் ஏற்பட்டதொரு வழக்கம். அடிக்கடி குற்றம் செய்தவர்களை உள்ளே வைத்து அறையின் வெளியே பூட்டிச் செல்வதே சிறைக் காவலருடைய வழக்கம் அன்றோ?

பரிமேலழகர் : பெருமான் நன்கு சொன்னீர்கள்! அங்ஙனம் பூட்டாவிடில் தப்பி ஓடிவிடுவது அக்கயவர்களின் வழக்கம்.

சித்திராபதி : ஏடா கிழவா! அரசர் பெருமான் ஏதேனும் விளையாட்டாகச் சொன்னால், அதற்கு உடனே மறு மொழி கூறிவிடுவதோ! நாகரீகமற்றவன்! நீ ஆதிரையை அழைத்து வருவதற்கிடையில் தீங்கு நேர்ந்து விடுமோ! பித்தன்!

பரிமேலழகர் : ஆம்! ஆம்! பித்தன்! பித்தன்! வெறும் காயப்பித்துத் தலைக்கேறியவன்!

அரசன் : ஏடா கிழவா! நீ மிகையாகப் பேசுகின்றாய். போ விரைவில் அக்காரிகையை அழைத்துவா!

பரிமேலழகர் : பெருமானே! ஒருகால் அக்காரிகை வர மறுப்பாளாயின்!

சித்திராபதி : ஏ! கிழமே! நீ யேன் அதைப்பற்றிக் கவலைப் படுகின்றாய்? நீ போய் நாங்கள் அழைப்பதாகச் சொல்லி அழைத்துவா!

பரிமேலழகர் : ஏடி சித்திராபதி! நீமட்டும் பன்னீராட்டை இளமகளோ? வாயை அடக்கிப் பேசு. இன்றேல் இந்தக் கூர்வாள் உன் குருதியைச் சுவை பார்த்து விடும்.

[வாளைக் காட்டுகின்றான்.]

சித்திராபதி : இந்த மூடனுக்கு எவ்வளவு திமிர்! பெருமானே! தங்கள் முன்னிலையிலேயே இவன் என்னை எத்துணை எளிதாய்ப் பேசுகின்றான்!

**பரிமேலழகர் :** அரசர் பெருமான் வாழ்க! இந்தக் கிழநாய் சென்ற ஆண்டு இந நகரிலேயே உடல் வற்றித் தெருவிலே சுற்றிக்கொண்டு திரிந்தது! அரியணையில் வைத்தாலும் நாய் நாய்தானே; சிங்கம் ஆய்விடுமா? இவள் மட்டும் என்னை ஏ கிழமே என்பாளாம்; இவளை நான்........

**அரசன் :** என்னிது! அடே காவலனே நீ யார்முன் நின்று பேசுகின்றாய் என்பதை மறந்து விட்டாயா?

**பரிமேலழகர் :** பெருமான் பொறுத்தருள்க! ஆம் மறந்தே போய்விட்டேன். என் காவலில் சிறைக்குட் கிடக்கின்ற ஒரு கயவனோடு பேசுவதாகவே நினைத்துப் பேசிவிட்டேன்.

**அரசன் :** சினந்து ஏடா! இந்தக் கதவுகளைத திறந்துவிடு!

**பரிமேலழகர் :** முடியாது பெருமானே! உங்களைப் பார்த்தவுடன் எனக்கு மிக அச்சமாக இருக்கின்றதே!

**சித்திராபதி :** ஏடா! உண்மையில் உனக்குப் பெருங்கேடு விளைவித்துக் கொளகிறாய்!

**பரிமேலழகர் :** சீசீ! சும்மா வாயை மூடிக்கொண்டுகிட; நீதான் உனக்குக் கேடே விளைவித்துக்கொண்டாய்.

**அரசன் :** காவலனே நான் உனக்குத் தீங்கு செய்யவில்லை; நீ கதவைத் திறந்துவிடு.

**பரிமேலழகர் :** பெருமானே! தாங்கள் அரசர்தாமோ என்று எனககிப்போது ஐயம் ஏற்பட்டுவிட்டது. இநதக கிழவியை நான் நனகறிவேன். பெருமைமிக்க நரேந்திரர் இக் கிழக் கணிகையைத் தொடர்ந்து இந நள்ளிரவில் ஒரு பெண் தனித்துறையும் இடத்திற்கு வருவார் என்பதை யார்தாம் நமபமுடியும்? ஓ! ஒருவேளை நான் இப்போது ஒரு கனவு காண்கிறேனோ! ஆம! ஆம்! கனவேதான் இது; அகவை முதிாந்த இக் கிழபபருவத்தில் தீக் கனுக்கள் எப்படி

எப்படி எல்லாம் தோன்றி என்னைப் பிய்த்துத் தின்கின்றன. பொழுது விடிந்தாற்றான் இது கனவோ நனவோ என்று எனக்கு விளங்கும்! ஆ! இன்னும் பொழுது விடிவதற்கு எத்தனை நாழிகைகள் இருக்குமோ அறியேனே!

அரசன்: ஏடி சித்திராபதி! இவன் உண்மையாகவே ஏதோ மூளைநோயாற் பற்றப்பட்டவனைப்போற் பேசுகின்றான். இவனுடன் நயமாகப்பேசிக் கதவைத்திறக்கும்படி செய்வது நன்றென்று எண்ணுகின்றேன்.

சித்திராபதி: ஐயா காவற்காரரே! நீர் காண்பதெல்லாம் நனவேதான்! இதோ வீற்றிருப்பவர் நம் நரேந்திர மன்னர்தாம். நன்றாக விழித்துக்கொள்க! அன்பு கூர்ந்து கதவைத் திறந்துவிடுக!

பரிமேலழகர்: அப்படிச்சொல்! ஏடி கணிகை! நீ யாரோ ஓர் கள்ளனை அரசன் என்று கூறி என்னை ஏமாற்ற நள்ளிரவில் அழைத்து வந்திருக்கிறாயன்றோ? நல்லது; நீயிர் இருவரும் என்பால் அகபபட்டுக்கொண்டீர்கள்! நாளைக்கு உங்கள் இருவரையும் ஒன்றாக விலங்காற் பிணைத்து இந் நகரத் தெருக்கள்தோறும் சுற்றியடித்து மன்னர் நரேந்திரர் முன் கொண்டுபோய் நிறுததுகின்றேன். வீரசிம்மனைக் கொலைசெய்யும் முன்னரே உங்கள் இருவரையும் கொலை செய்விக்கிறேன்.

அரசன்: அடே! அடே! மூடா! வாயை அடக்கு!

பரிமேலழகர்: சீசீ! இந்தப் புலியும் உறுமுகின்றதே; ஏ புலியே! வாளாகிட! இன்றேல் இவ்வாளால் உன் மார்பில் குத்துவேன். அப்பப்பா! எவ்வளவு அச்சமான கனவுகள்! ஒரு கிழநாயும், ஒரு புலிக்குட்டியும் ஒரு குகைக்குள் அகப்பட்டுக்கொண்டு, 'வெளியில் எங்களை விடு உன்னைப் பிய்த்துத் தின்கிறோம்,' என்பதைப் பார்த்தால் யாருக்குத்தான் அச்சம் ஏற்படாது!

**அரசன்:** ஏடி சித்திராபதி இப்போது என் செய்வது ?

**பரிமேலழகர்:** பெருமான் என்னசெய்ய எண்ணி வந்ததோ அதையே செய்வதுதானே !

**அரசன்:** சீசீ மடையா !

**பரிமேலழகர்:** அடே அடே அறிஞர் பெருமானே!

**சித்திராபதி:** ஐயா ! நீர் சென்று ஆதிரையையேனும் அழைத்துவரமாட்டீரா ?

**பரிமேலழகர்:** நல்லது அழைத்து வருந்துணையும் நீங்கள் இருவரும் இங்கேயே கிடமின் !

[பரிமேலழகன் போய்விடுகிறான்.]

---

## காட்சி கரு.

**இடம்:** திருச்சிராப்பள்ளி அரண்மனையிலுள்ள அறங் கூறவை மன்றம்.

**உறுப்பினர்:** அரசியார், இராணி மங்கம்மாள், அமைச்சர், திலகவதி, கமலை, உழைக்கல மகளிர்கள், (கஞ்சுகமகளிர) ஆதிரை, ஐயை, படைத் தலைவன, சேனுவரையன்.

**காலம்:** பகல் நாழிகை பத்து.

**திலகவதி:** ஏடி அங்கயற்கண்ணி! இப்போது நாழிகை என்ன நடக்கின்றது பார்! இன்று பேரரசியார் காலம் தாழ்த்தாமே மன்றத்திற்கு வந்துவிடுவார். ஆதலால் இங்குள்ள பணிமகளிர்கள் அனைவரும் விழிப்புடன் இருக்கக் கடவீர்! ஏன் கமலையார் இன்னும் மன்றத்திற்கு வரவில்லை!

**உழைக்கல மகள்:** பெருமாட்டி வாழ்க! இன்று விடியற் காலையிலேயே கமலைத் தேவியார் மன்றத்துக்கு வந்துவிட்டனர். அதோ அவர் அறையிலிருந்து வழக்கேடுகளை ஆராய்ந்து அடுக்கிக்கொண்டிருக் கின்றனர்.

**திலகவதி:** நன்று! இன்று பேரரசியார் கண்காணிப்பில் வைக்கவேண்டிய ஏடுகள் பலவுள்ளன. (சின்னம் ஊதும் ஒலி கேட்கிறது) ஓ! இதோ கோபபெருந் தேவியார் வருகிறார். யாரடி! அந்த அற முரசத்தை முழக்குங்கள்.

[அறமன்றத்தே முரசம் முழக்கப்படுகிறது. அரசி மங்கம்மாள் பல மகளிர் சூழ இன்னிசைப் பாடல் பாடவும், இசைக் கருவிகள் இசைக்க வும் விருதுகளுடன் வருகிறாள் அனைவரும் எழுந்து நிற்க மன்றத்துள் புகுகிறாள்.]

எல்லோரும் : கோப்பெருந் தேவியார்! வாழ்க!
நாடு! வளம் பெறுக!
நல்லறம்! ஓங்குக!
பகைவர்கள்! ஒழிக!
கொடி! வெல்க!
அரசி மங்கம்மாள் நீடு வாழ்க!
தண்டமிழ் நாடு! தலைசிறந் தோங்குக!
தமிழ் அன்னை வாழ்க! வாழ்க! வாழ்க!
[புன்முறுவலுடன் அரசியார் அரியணையிலமர்ந்து]

அரசி : திலகவதி! இன்று யாம் முதலாவதாகக் கண் காணிக்கவேண்டிய வழக்கு யாது?

திலகவதி : சேதுநாட்டில் உள்ள குறுநிலமன்னர் தம் எல்லையின் பொருட்டுக் கொடுத்துள்ள வழக்கே இன்று தேவியார் கண்காணித்தற் குரியது.

அரசி : ஆம்! நன்கு சொன்னாய்! அவ் வழக்கை இன்று ஆராய்தல் இன்றியமையாதது. கொற்கை நாட்டு மன்னன் மக்களிருவரும் தம் வழக்கை ஆராயும்படி விண்ணப்பம் செய்துள்ளனர். அதை வேண்டு மானால் பின்னர் ஆராய்வாம். (திரும்பியவுடன் கமலை வணங்குகிறாள்) ஏடி கமலை! அம் மன்னன் மக்கள் வழக்கு ஏடுகள் அனைத்தும் ஒருசேர வைத் துளளாயன்றோ?

கமலை : அரசியார் கட்டளை! இதோ அவ்வேடுகள் அனைத் தும் திரட்டி வைக்கப்பட்டுள்ளன.

அரசி : நன்று. வழக்காளியைக் கூப்பிடுக.

கமலை : ஏடி அங்கயற்கண்ணி, மழவராயனை அழை!

அங்கயற்கண்ணி : மழவராயன்! மழவராயன்! மழவ ராயன்!

[உரத்த குரலிற் கூப்பிட ஒரு குறுநிலமன்னன் மகன் கைகளைக் குவித்துக்கொண்டே மன்றத்துட் புகுந்து அரசி மங்கமமாளை நோக்கி நிலத்தில் வீழ்ந்து வணங்கியபடியே கிடக்கிறான்.]

கமலை: நல்லது. நீயிர்தாம் மழவராயன் என்பவரோ? எழுந்திடுக.

மழவராயன்: பெருந்தேவியார் நீடூழி வாழ்க!

கமலை: நன்று. உம்முடைய வழக்கை நன்கு விளக்கமாக அரசியார்க்குக் கூறுக

[இச் செவ்வியில் ஆராய்ச்சிமணி முழங்குகின்றது; அனைவரும் அவ் வொலியைச் செவியேற்று நிற்கிறார்கள்.]

அரசி: ஏடி திலகவதி! இம் மணியொலி எங்கிருந்து வருகின்றது?

திலகவதி: தேவியார் வாழ்க! இது நம் அரண்மனைக் கோபுரவாயிற்கண் உள்ள ஆராய்ச்சிமணியின் ஒலியே ஆதல்வேண்டும்!

அரசி: இருத்தல்கூடும்! இத்துணைப் பெரிய ஒலியைச் செய்யும் வேறு மணி நமமரண்மனையில் இல்லையல்லவா! மணியொலியில் இத்துணைப் பெரிய ஒலியை யான் இனறுதான் கேட்கிறேன்!

திலகவதி: ஆம்; தேவியே! இம்மணி தேவியார் பிறந்த பின்னர் ஒலிக்கப்பட்டதாகத் தோன்றவில்லை.

அரசி: ஆம்; உண்மையே. என் தந்தையார் ஆட்சியினும் இம் மணி ஒலிக்கப்படவில்லையாம்.

திலகவதி: தேவி! இம் மணியை ஒலிக்கச் செய்தவரை யாம் காலந் தாழ்தலின்றிக் கண்டு அவர்க்குற்ற இடுக்கணை அகற்ற முற்படல்வேண்டும்.

அரசி: ஏடி கமலை! யாம் இத்துணையும் காலந் தாழ்த்ததே மிகை. அந்தோ எத்தகைய இன்னலால் துன்

புறத்தப் பட்டவரோ! அறிகிலேனே! விரைந்து செல்! அம் மணியை ஒலித்தவரை விரைந்து நம் மன்றத்திற்கு அழைத்துக்கொண்டு வா! அவர் இங்குவர வியலாதவராயின் மீண்டும் ஓடிவந்து சொல்! யாமே அவரைச் சென்று காண்டல் வேண்டும்.

[கமலை விரைந்து செல்கிறாள்.]

திலகவதி: ஆயின் தேவி! இப்போது மேற்கொண்டுள்ள வழக்கைப் பின்னர் ஆராய்வது நன்றன்றோ!

அரசி: ஆம், ஐயா மழவராயரே! உம்முடைய வழக்கைப பின்னர் ஆராய்வோம்! நீயிர் உம்மூர்க்குப் போகக் கடவீர்! மீண்டும் எம் கட்டளை கண்டு வருக!

[மழவராயன் வீழ்ந்து வணங்கி, இராணியார்க்குப் புறங்காட்டாமல் பின்புறமாகவே மெல்லநடந்து, மன்றத்தைவிட்டு வெளியேறுகின்றான். கமலை ஆதிரையுடனும் ஐயையுடனும் வருகிறாள். ஆதிரையின் கையை கமலை பற்றி அன்புடன் அழைத்துவந்து அனைவரும் மன்றத்துட் புகுந்தவுடன் ஆதிரை அரசி மங்கம்மாளைப் பார்த்தவுடன் கோவென்றலறி நிலத்திற் சாய்கிறாள். இராணி அரியணையினின்றும் ஓடிவந்து ஆதிரையைத் தன் கைகளால் தூக்கி நிறுத்துகின்றாள். ஆதிரை கணணீர்ப் பெருகுடன் அரசியின் கால்களைக் குனிந்து பற்றிக்கொண்டு]

ஆதிரை: கோப் பெருந்தேவி! அடைக்கலம்! அடைக்கலம்! அளியேன்! தேவியின் அடிகட்கு அடைக்கலம்!

அரசி: அஞ்சற்க! நங்காய்! அஞ்சற்க! யாம் அடைக்கலம் ஏற்றோம். அழவேண்டா; வருத்தம்விடுத்து உன் வரலாற்றை விளக்கமாகக் கூறு! (தனக்குள்) ஆ, துன்பமே வடிவெடுத்தாற் போன்ற இம் மகளின் காட்சி என் நெஞ்சத்தைப் பிளக்கின்றதே! இவட்கு

இவ்வாறு துன்பம் உண்டாகும்படி யார் எத்தகைய இன்னலை இயற்றினரோ ?

ஆதிரை ; (தனது திருமங்கல அணியை வலக்கையின் ஏந்திக்கொண்டு) தேவி! இம் மங்கலவணியைக் காத்தருளவேண்டும் ; யான் வேறு புகலற்ற எளியள் !

அரசி: நங்காய் யாம் இறைவனருளால் அவ் வணியைக் காப்பாற்ற முற்படுகின்றோம் உன் மங்கல அணிக்கு இப்போது யாது இடையூறு நேர்ந்துளது ? விரைந்து கூறு !

ஆதிரை: தேவி ! என் கணவனார் பெரும்பழியாகக் கொலைத் தண்டனை விதிக்கப்பட்டுள்ளார். பெரும்பாலும் அத் தண்டனையை நிறைவேற்றும் அமயம் நெருங்கி விட்டதே !

அரசி: (சிறிது சிந்தனைசெய்து) ஆயின் நீ திண்டுக்கல் நகரத்தே வாழ்பவளா ?

ஆதிரை : ஆம்; தேவி! யான் திண்டுக்கல் நகரத்துத் தண்டத் தலைவர் ஒருவருடைய மனைவி. அடியேன் பெயர் ஆதிரை என்பது

அரசி: உன் கணவன் பெயர் வீரசிம்மனா ?

ஆதிரை: அங்தோ ! ஆம் ! ஆம் ! பேரரசியே ! அப்பெயரே தான் தீவினையாட்டியாகிய அடியேன் கணவன் பெயர்.

அரசி : ஏடி கமலை ! திண்டுக்கல் நகரத்து அஞ்சல்கள் செலுத்தப்பட்டு விட்டனவோ ?

கமலை : ஆம் பேரரசியே ! அவைகள் நேற்றிரவே செலுத்தற்பாலன. ஆதலின், நேற்றே தேவியாரின் கண்காணிப்பிற்கு வைத்துத் தேவியார் அவற்றில் கையொப்பமிட்டபின்னர் நேற்றிரவே அஞ்சலிற் சேர்த்துச் செலுத்தப்பட்டன.

அரசி: ஆ கெட்டேன்! அந்தோ! (சிறிது திகைத்து ஆதிரையை நோக்கி) பேதைப் பெண்ணே! நேற்றுடன் ஏழு நாட்கள் அவ் வழக்கேடுகள் நம்பாலிருந்தனவே, அப்பொழுதெல்லாம் நீ எங்குச் சென்றாய்? அந்தோ! ஒருவேளை.......ஏடி கமலே அவ் வழக்குத் தீர்ப்பேடுகள் இப்பொழுது நரேந்திரன் கைக்கெட்டியிருக்குமோ?

கமலை: தேவி! ஆம் எட்டியிருக்கக்கூடும். ஒருகால் அவ் வஞ்சல் கொண்டுசெல்பவன் ஒரு தளர்ந்த கிழவன்; அவன் நடையால் தாழ்த்து இன்று மாலைக்காலத்தே அரசர் நரேந்திரர்பால் சேர்க்கப்படினும் படலாம்!

அரசி: ஆதிராய்! அந்தோ ஊழ் அங்ஙனம் உளது போலும். இன்றேல், ஏழு நாட்களினிடையே நீ எம்பால் வந்திருத்தல் கூடாதா! என் செய்வது? நீ ஏன் இப்படித் தாழ்த்தனை? உன்னைப்பார்த்து அந்தோ என் நெஞ்சம தீய்கின்றதே!

ஆதிரை: தேவி! அடியேன் என்னில்லத்திலேயே, வெளியேறாதபடி முற்றுகையிடப்பட்டேன். என் கணவன் கொலைத்தண்டனை அடைந்த செய்தியும் எனக்கு அறிவிக்கப்படவில்லை!

அரசி: ஆ! இது என்னை! புதுமை! உன்னை வெளியேறாதபடி காவலில் வைத்துள்ளனரா?

ஆதிரை: ஆம் தேவி! இப்பொழுதும் என்னைக் காவல் செய்திருந்த முதியவர் ஒருவரின் அருளால் பிறர் அறியாவண்ணம் வெளியேறி இரவிலேயே........

அரசி: என்னை! இருளிலா வந்தாய்! உனக்குத்துணை?

ஆதிரை: இதோ நிற்கின்ற என் தோழி துணையாக!

அரசி: கமலாய்! திண்டுக்கல் நகரத்து அறமன்றத் தலைவர் அம்பலவாணர் ஒருசிறிதேனும் அறம்பிறழாத சான்றோர். அவரால் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டு

ருந்தால் அத்தண்டனை விதிக்கப்பட வேண்டியதாகவே இருக்கக்கூடும்.

கமலை: தேவி வாழ்க! வீரசிம்மன் வழக்கை ஆராய்ந்து முடிவெழுதியவர் அம்பலவாணர் அல்லர். யாரோ ஒரு புதிய அறமன்றத்தலைவர்; அவர் பெயர் 'சாத்தன்' என்பது.

அரசி: அப்படியா? அந்தோ கெடுத்தொழிந்தேன். திண் டுக்கல் நகரத்திலிருந்து நம் பார்வைக்கு வருகின்ற வழக்கேடுகளை, சான்றோராகிய அம்பலவாணரால் அவை வரையப்பட்டன என்னும் ஒரு துணிவால், அவற்றில் தவறு இராது என்றே எண்ணி, யான் அவற்றை நன்கு கண்காணியாமலே, கையொப்பமிடு தல் வழக்கம். இவ் வீரசிம்மன் வழக்கும் அவரால் முடிவு கூறப்பட்டதென்றன்றோ நான் ஆராயாது கையொப்பமிட்டுவிட்டேன். அவ் வழக்கேடுகளிற் கையெழுத்திட்டுள்ள அறமன்றத் தலைவர் பெயரைக் கூட யான் பார்க்காமல் விட்டுவிட்டேன். அந்தோ அவ்வேழை வீரசிம்மனின் ஊழ் அவ்வாறுளது போலும். (ஆதிரையை நோக்கி) ஆதிராய்! உன் கணவன் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டமைக்குரிய காரணமாயினும் நீ அறிவாய் அன்றோ?

ஆதிரை: தேவி! என் கணவர் உய்தற்கு வழியில்லை என்று ஏற்பட்டுவிட்டாலும், யான் தங்கள்பால் கூறக்கூடாத ஒன்றை இப்போது கூறவேண்டியவளாகின்றேன். என் கணவன் புரிந்த குற்றம் அவர் ஓர் அழகுமிக்க இளமனைவியைப் பெற்றிருந்ததே!

அரசி: (கண்கள் சினத்தாற் சிவக்க) ஓ அறிகின்றேன்! ஏடி கமலை! விரைந்து நம் படைத்தலைவரை இருபது மறவருடன் அழை. (கமலை விரைந்து செல்கிறாள்) ஆதிரை! ஒருசமயம் நீ நல்லூழ் உடையளாயிருந்து உன் கணவன் இன்று மாலையில் தண்டனை நிறை வேற்றப்படாது உய்ந்திருந்தால் உன் மங்கலஅணி

காக்கப்பட்டதேயாகும். இன்றேல் வெறும் மனித ஆற்றலையுடைய யான் என் செய்யக்கடவேன்! தவறான முறையில் உன் கணவன் தண்டனை விதிக்கப்பட்டிருந்தால் அதற்குக் காரணமானவர்கள் யாராயினும் என்னால் தகுந்த தண்டனைக்குட்படுத்தப்படுதல் திண்ணம். அந்தோ இனி என்செய்தும் என்னை? உனக்குற்ற துன்பை மாற்றவியலாதவளாய் யான் இப்போது இருக்கின்றேனே. அணைகடந்த வெள்ளம்!

ஆதிரை: தேவி! எளியேன் விண்ணப்பம் மற்றொன்றுளது!

அரசி: என்னை? என்னை?

ஆதிரை: யானும் என் தோழியும், இருளோடிருளாய் இரவு வழியில் வந்துகொண்டிருக்கும்போது வழியில் இங்கிருந்து அஞ்சல் கொண்டுசென்ற ஓர் அருளுடைய கிழவரை நடுவழியில் நள்ளிரவிலே எதிர் கண்டோம். அவர் எங்கள் வருகையைக்கண்டு வியந்து எங்கள் வரலாற்றினை வினவினர் யாங்களும் அவர்பால் முற்றும் கூறினேம். அவர் எங்கள் நிலைக்குப் பரிந்து, "அம்மே! நம பேரரசியாரை நீ கண்டுமீள யான் என்னாலியன்ற உதவியொன்றை உனக்குச் செய்கிறேன். இவ்வஞ்சலை உனபொருட்டு ஒருநாள இடையே தஙகவைதது மறுநாள் கொண்டுசென்று உரிய விடததே சேர்ப்பேன். அதற்குள் பேரரசியார் உன் மங்கலவணியைக் காத்தல்கூடும் என்று நினைக்கின்றேன்," என்று எமக்குக் கூறிச்சென்றனர்.

அரசி: ஆதிராய்! அரியநிகழ்ச்சி! அரியநிகழ்ச்சி! தெய்வமே இப்போது உன் மங்கல அணியைக் காத்தளித்தது! ஆயின் நன்று (திரும்பிப் பார்க்கிறாள். கமலையுடன் படைத்தலைவர் வந்து வணங்கி நிற்பதைக் கண்டு) படைத்தலைவரே! நீயிர் விரைந்து குதிரைகளிலே இவ் விருபது மறவருடன் சென்று, நரேந்திரனிடம் நாம் தருகின்ற கட்டளையைக் கொடுத்துவிட்டு,

திண்டுக்கல் அறமன்றத் தலைவர் அம்பலவாணரையும், நரேந்திரன் அரண்மனையில் அகம்படிமைத் தொழிலில் இருக்கின்ற கண்ணன் என்னும் பெயருடைய ஊமனையும் அழைத்துக்கொண்டுவந்து இன்றிரவே நம்பால் சேர்க்கக்கடவீர்.

[ஒரு கட்டளையை எழுதி அவனிடம் கொடுக்கப் படைத்தலைவன் அதைப் பெற்றுக்கொண்டு வணங்கி மறவருடன் விரைகின்றான்.]

அரசி : (திலகவதியாரைப் பார்த்து) ஏடி திலகவதி! ஆதிரை நல்வினை உடையவளாய்விட்டாள். ஆதிரையின் உரைகளிலிருந்து நீ என்ன அறிந்துகொள்கின்றாய்.!

திலகவதி : ஆம்! தேவி! ஆதிரையின் துன்பத்தால் மழுங்கியிருக்கிற அழகு, பெண்ணாய்ப் பிறந்த என் கண்களையே பெரிதும் கவருகின்றது எனில், காமுகராய ஆடவர் அதன்பொருட்டு எத்தகைய தவறுதான் செய்யத் துணியார்கள்!

அரசி :

" இறப்பே புரிந்த தொழிற்றும் சிறப்புந்தாம்
சீரல்ல வர்கட் படின்."

(ஆதிரையை நோக்கி), அம்மே! அறந்தவறாத சான்றோர் அம்பலவாணரைக் கொண்டும், திண்டுக்கல் நகரத்து அரண்மனையினுள் நரேந்திரனுக்கு அரசியல் அதிகாரம் அளிக்கு முன்னரே அவனது செயலை அண்மையிலிருந்தே ஒற்றி அறியும்படி அகம்படிமைத் தொழிலில் எம்மால் அமைக்கப்பட்டு ஊமையனைப் போன்று நடித்துக்கொண்டு அங்குள்ள சிறந்த அறிவினனாகிய கண்ணனைக் கொண்டும், உன் வழக்கினை நன்கு ஆராய்ந்து முடிவு கூறுவோம். எது எவ்வாறாயினும் உன் கணவன் உயிர் உய்ந்தான் என்பது திண்ணம். ஆதலால் நீ இனித் துன்பம் விடுத்து நம் அரண்மனையிலேயே நம் விருந்தினளாய், உன் தோழி

யுடன் மூன்றுநாட்கள் வதியக்கடவாய். நான்கா நாள், உனக்கு முடிவு கூறுவோம். உன் கணவன் தண்டனையை நிறைவேற்றுதிருக்கும்படி யாம் கட்டளை உய்த்துள்ளோம்; அம்பலவாணரையும் கண்ணனையும் வினவி, நாளையே இவ்வழக்கிற் றொடர்புடைய எல்லோருக்கும் கட்டளை விடுத்து, நமது அறமன்றத்தே இற்றைக்கு நான்காம் நாள் ஆராய்வோம். அங்கயற்கண்ணீ! நீ ஆதிரையையும் தோழியையும் அழைத்துச் சென்று சிறந்த முறையில் நம் விருந்து மன்றத்தில் வைத்துப் பாதுகாக்கக் கடவாய்.

---

## காட்சி கச

**இடம்:** திருச்சிராப்பள்ளி அரண்மனையில் அறங்கூறவையம்

**உறுப்பினர்:** அரசி மங்கம்மாள், திலகவதி, கமலை, அங்கயற்கண்ணி, அம்பலவாணர், சாத்தனார், நரேந்திரன், முசலன், சித்திராபதி, அழும்பில் வேள், சேனுவரையா, மருதன் முதலியோர், கண்ணன், பணிமகளிர்கள், மறவர் முதலியோர்.

**காலம்:** பகல், ஒன்பது நாழிகை.

**திலகவதி:** கமலையாரே! இன்று அரசியார் கண்காணிக்க வேண்டியவற்றை நிரல்படுத்தி விட்டீரா?

**கமலை:** ஆம் பெருமாட்டி! இன்று நிகழ்ச்சிக்குரிய ஏடுகளை இதோ திரட்டிவிட்டேன்.

**திலகவதி:** நம் படைத்தலைவரால் திண்டுக்கல் நகரத்திலிருந்து விலங்கிட்டுக் கொண்டுவரப்பட்ட குற்றவாளிகள் பெயர்க்குறிப்பு மன்றத்திற்கு வந்துவிட்டதா?

**கமலை:** ஆம்! பெருமாட்டி இதோ இருக்கின்றது.

**திலகவதி:** அக் குற்றவாளிகளை நீயிர் சென்று கண்காணித்தீரா?

**கமலை:** ஆம்! சென்று பார்த்தேன். அரசியார் கட்டளைப்படி அக் குற்றவாளிகள் ஒருவரோடு ஒருவர் கலந்து கொள்ளாதபடி தனித் தனி அறைகளிலே வைக்கப்பட்டுள்ளனர்.

**திலகவதி:** இவ் வழக்கிற்காகக் கொண்டுவரவேண்டிய எல்லாரும் கொண்டுவரப் பட்டனரா?

**கமலை:** எல்லோரும் கொண்டுவரப் பட்டனர்.

கமலை: ஏடி அங்கயற்கண்ணி! நாழிகை ஒன்பது நடக்கிறது. அறமுரசத்தை முழக்கும்படி சொல்.

[ஒருத்தி மன்றத்திலுள்ள முரசத்தை முழக்குகின்றாள். சின்னம ஊதவும் மஙகையர் பல்லாண்டு பாடவும் இசைக்கருவிகள் முழங்கவும் விருதுகளுடனே அரசி மங்கம்மாள் வருகிறாள். எல்லோரும் எழுந்து நின்று வணக்கஞ் செலுத்துகிறார்கள்.]

எல்லோரும்: கோப்பெருந்தேவியார்! வாழ்க!
நாடு! வளம் பெறுக!
நல்லறம்! ஓங்குக!
பகைவர்கள்! ஒழிக!
இராணி மங்கம்மா! நீடு வாழ்க!
தண்டமிழ் நாடு! தலைசிறந்தோங்குக!
தமிழ் அன்னை! வாழ்க! வாழ்க! வாழ்க!

[அரசியார் புன்முறுவலுடன் சென்று அரியணையில் அமாந்தவுடன ஆரவாரம் அமைந்துவிடுகின்றது: அரசியார கையமர்த்த அங்கு இருக்கையில் அமரவேண்டியவா அமர ஏனையோா நிற்கின்றனர்.]

அரசி: திலகவதி! வழக்கு உசாவல் தொடங்கலாமே.

திலகவதி: தேவியார் கட்டளை. (கமலையைப் பார்த்து) கமலையாரே! முதன்முதலாகக் கூப்பிடவேண்டியவரைக் கூப்பிடச் சொல்க!

கமலை: ஏடி அங்கயற்கண்ணி! திண்டுக்கல் நகரத்து மன்னர் நரேந்திரரைக் கூப்பிடு.

அங்கயற்கண்ணி: திண்டுக்கல் நகரத்து மன்னர் நரேந்திரர்! நரேந்திரர்!

[படைத்தலைவர் சேனுவரையர் நரேந்திரனை விலஙகுடன் அழைத்து வருகிறார். நரேந்திரனின் இருமருஙகிலும் இரண்டு வாள் மறவர் வாளேந்தியபடியே வருகின்றனர்.]

**சேனுவரையர் :** பெருந்தேவி வாழ்க! திண்டுக்கல் நகரத்தில் மன்னர் நரேந்திரரையும், சித்திராபதி என்பவளையும் அவர்கள் இருக்கத்தகுந்த இடமெல்லாம் யாங்கள் தேடியும் காணப்பட்டிலர். முடிவில் ஒரு சிறைக் காவலன் இவ் விருவரும் வீரசிம்மன் வீட்டினுள் ஓர் அறையில் மறைந்துள்ளனர் என்று எங்கட்கு அறிவித்த பின்னர் சென்று பார்த்தோம். இவ் விருவரும் அவ் வீட்டினுள் ஓர் அறையுட் காணப்பட்டனர். அவ் விடத்திருந்தே அழைத்துக்கொண்டு வந்தோம்!

**அரசி :** இருக்கத் தகுந்த இடத்திலிருப்பதும் எளியதன்று. ஏடி திலகவதி உசாவலைத் தொடங்குக!

**திலகவதி :** சேனுவரையரே! மன்னர் நரேந்திரரை! உசாவல் கூண்டில் ஏறச்செய்யும்.

[சேனுவரையன் நரேந்திரனை உசாவல் கூண்டில் ஏற்றுகின்றான். நரேந்திரன் கீழே குனிந்தவண்ணமே நிற்கிறான்.]

**திலகவதி :** நரேந்திரரே! உம்முடைய தண்டத் தலைவரில் ஒருவனாகிய வீரசிம்மனுக்குக் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டதுண்மையா?

**நரேந்திரன் :** ஆம்!

**திலகவதி :** அத்தகைய தண்டனை விதித்தற்குரிய குற்றம் செய்தான் வீரசிம்மன் என்பதை நீயிர் அறிந்ததுண்டா?

**நரேந்திரன் :** அஃது அறமன்றத்தலைவர் அறியற்பாலது!

**திலகவதி :** வீரசிம்மன் அயல்நாட்டு மன்னன் ஒருவனோடு நாட்டைக் கவிழ்க்கச் சூழ்ச்சிசெய்தான் என்று உங்கட்கு அறிவித்தது யார்?

**நரேந்திரன் :** என்னுடைய அமைச்சர் ஒற்றரால் அறிந்ததாக எனக்குக் கூறினார்.

திலகவதி : உம்முடைய அமைச்சர் உமக்குக் கூறியதல்லால் வீரசிம்மன் குற்றம் செய்ததை நீயிர் வேறு யாராலும் அறிந்ததில்லையே !

நரேந்திரன் : இல்லை !

திலகவதி : நன்று ! அங்கயற்கண்ணி ! அமைச்சர் முசலனைக் கூப்பிடு !

அங்கயற்கண்ணி : அமைச்சர் முசலனார் ! முசலனார் ! முசலனார் !

[சேனாவரையர் முசலனை விலங்குடன் அழைத்து வந்து உசாவல் கூண்டில் ஏற்றுகின்றார்.]

திலகவதி : ஐய ! நீயிர்தாம் திண்டுக்கல்நகரத்து முதலமைச்சர் முசலனார் என்பவரோ ?

முசலன் : ஆம் !

திலகவதி : வீரசிம்மன் குற்றஞ் செய்தான் என்று வழக்குத் தொடர்ந்தவர் நீயிர்தாமே !

முசலன் : ஆம் !

திலகவதி : நன்று. வீரசிம்மன் குற்றஞ் செய்தான் என்று நீயிர் எவ்வாறு அறிந்தீர் ?

முசலன் : ஒற்றர்களால் அறிந்தேன் !

திலகவதி : அவ்வொற்றர்கள்தாமே அறமன்றத்தில் சான்று கூறியவர்கள் !

முசலன் : ஆம் ! அவர்களே !

திலகவதி : உம் நகரத்து அறமன்றத்தலைவர் பெயர் என்ன ?

முசலன் : சாத்தனார் என்பது.

திலகவதி : உம் நகர அறமன்றத்தலைவர் அம்பலவாணர் எங்கே ?

**முசலன் :** அம்பலவாணர் அதிகாரத்தினின்றும் விலக்கப் பட்டார்.

**திலகவதி :** எதற்காக ?

**முசலன் :** அவர் இவ்வழக்கில் நேர்மையாக நடக்கமாட்டார் என்ற ஐயத்தால் !

**திலகவதி :** ஆம். அவர் நேர்மையாக நடவாதவர்தாம். அதன்பொருட்டு அவரை விலக்கிப் புதிய அறமன்றத் தலைவரை அதிகாரம் அளித்து அவரால் இவ் வழக்கை உசாவச் செய்தீர்களோ ?

**முசலன் :** ஆம் !

**திலகவதி :** உம்முடைய ஒற்றரின் தலைவன் பெயர் என்ன ?

**முசலன் :** மருதன் என்பது !

**திலகவதி :** ஆம். மருதன் என்பவன் ஒற்றிலக்கணம் அமைந்த ஓர் அறிஞனாக இருப்பான் அல்லனோ ?

**முசலன் :** ஆம் ! ஆம் ! அவன் நல்ல அறிஞனேதான் !

**திலகவதி :** ஏடி அங்கயற்கண்ணி, மருதன் முதலியோர் அறுவரையும் அழை !

**அங்கயற்கண்ணி :** மருதன் முதலியோர் ! மருதன் முதலி யோர் ! மருதன் முதலியோர் !

[சேனுவரையர் மருதனோடு அறுவரை விலங் கிட்டபடி கொணர்ந்து கூண்டில் ஏற்று கின்றார்.]

**திலகவதி :** முசலரே ! இவர்கள்தாமே உம் அறிவுசால் ஒற்றர்கள் ?

**முசலன் :** (அவர்களைப் பார்த்துத் திகைப்புடன்) ஆம் ! ஆம் !

**திலகவதி :** (மருதனை நோக்கி) ஐய ! நீர்தாம் வீரசிம்மன் அயல்நாட்டு மன்னனுடன் சூழ்ச்சி செய்ததை ஒற்றி

வந்து அமைச்சர் முசலனுர்க்குக் கூறியதோ? (மருதன் திகைப்புடன் விழிக்கிருன்) ஐய! ஏன் விழிக்கிறீர்? நீர் ஒற்றர்தாமே?

மருதன்: தேவி! வாழ்க! எளியேன் ஒற்றன் அல்லன்!

திலகவதி: வீரசிம்மன் வழக்கில் சான்றுகூறிய நீர், ஒற்றர் அல்லரோ?

மருதன்: இல்லை!

திலகவதி: உங்கள் அறுவரில் ஒற்றர்கள் யார்? யார்?

அறுவரும்: தேவி! யாங்கள் ஒற்றர் அல்லர்!

திலகவதி: பின்னர் நீங்கள் சான்று கூறியிருக்கின்றீர்களே?

மருதன்: தேவி! யாங்கள் அந்நகரத்து வணிகர்கள். எங்களை ஒற்றர் என்றுகூறிப் பொய்ச்சான்று கூறும்படி இவ் வமைச்சரும், படைத்தலைவர் அழும்பில்வேள் என்பவரும் வற்புறுத்திஞர்கள்; யாங்கள் கூறியதெல்லாம் அவர்கள் எமக்குக் கூறியவைகளே! யாங்கள் ஏதும் அறியோம். எங்கள் அறியாமையாற் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்!

திலகவதி: தீவினையாளர்களே! இத்தகைய பொய்ச்சான்று கூறிய உங்களைப் பிழை பொறுத்து அருள்வதாவது!

மருதன்: தேவி! யாங்கள் என்செய்வோம். அவர்கள் விரும்பியபடியே பொய்ச்சான்று கூருவிடின் அப்பொழுதே எங்கள் வாழ்க்கைக்கு அவர்கள் உலைவைத்து விடுவதாக அச்சுறுத்திஞர்கள். பொய்ச்சான்று கூறினல் தலைக்கு ஆயிரம் வெண்பொற் காசுகள் தருவதாகவும் கூறினர். முன்னையதற்கு அஞ்சி பின்னையதற்கு அவாவி முடிவில் எங்கள் கைக்கு விலங்கையே தேடிக் கொண்டோம். தேவி! எங்களைக் காப்பாற்ற வேண்டும்!

திலகவதி : நன்று ! உம்மை இரண்டு அறமன்றத்தலைவர்கள் உசாவினார்கள் அல்லரோ ?

மருதன் : இல்லை தேவி ! இல்லை. அறக்கடவுள்போன்ற அம்பலவாணர் ஒருவரே எம்மை உசாவினார்.

திலகவதி : நன்று ! சித்திராபதியைக் கூப்பிடு !

அங்கயற்கண்ணி : சித்திராபதி ! சித்திராபதி ! சித்திராபதி !

[சேனுவரையா சித்திராபதியைக் கொண்டு வந்து கூண்டிலேற்றுகிறார்.]

திலகவதி : ஏடி ! கிழவி ! உன் பெயர் என்ன ?

சித்திராபதி : சித்திராபதி என்பது என் பெயர்.

திலகவதி : வீரசிம்மன் வழக்கைப்பற்றி யாதேனும் நீ அறிவாயா ?

சித்திராபதி : தேவி ! இல்லை ! யான் எப்படி அறிவேன் ? யான் ஓர் ஏழைக் கணிகை. இழிதொழில் செய்து வயிறு வளர்ப்பவள் !

திலகவதி : அப்படியா ! நீ நரேந்திரருடன் வீரசிம்மன் இல்லத்தில் எப்படிக் கூடியிருந்தாய் (சித்திராபதி புன்னகையுடன் குனிய) ஏடி ஏன் குனிந்து கொள்கிறாய் ? விரைந்து சொல் ?

சித்திராபதி : தேவி ! அஃது என் தொழில். மன்னர் நரேந்திரருக்குச் சில இளம் பெண்களை............தேவி எளியேனைக் காப்பாற்ற வேண்டும். மன்னர் ஏவிய தொழிலை நான் செய்யாமல் எப்படி இருக்கக்கூடும் ?

அரசி : ஏடி திலகவதி ! அவளை இனி ஏதும் வினவ வேண்டா !

திலகவதி : நன்று ! அழும்பில்வேளைக் கூப்பிடு !

அங்கயற்கண்ணி : அழும்பில்வேள் ! அழும்பில்வேள் !! அழும்பில்வேள் !!!

[சேனுவரையர் அழும்பில்வேளை விலங்குடன் கொண்டுவந்து கூண்டில் ஏற்றுகின்றார்.]

**திலகவதி :** ஐய ! நீயிர்தாம் அழும்பில்வேள் என்பவரோ ?

**அழும்பில்வேள் :** ஆம் தேவி ! ஆம் !

**திலகவதி :** உம்மால் நிகழ்த்தப்பட்ட வழக்கில் வீரசிம்மன் குற்றம் செய்தான் என்பதற்கு நீயிர் ஏதேனும் காரணம் கூறுவீரா ?

**அழும்பில்வேள் :** தேவி ! யான் ஒரு சிறு அதிகாரி. அமைச்சர் விரும்பியபடியே இவ் வழக்கை யான் நிகழ்த்தியதல்லால் வீரசிம்மன் குற்றம் செய்தான் என்று கூற யான் ஏதும் அறியேன் !

**திலகவதி :** ஐயா ! இவ் வழக்கை ஆராய்ந்தபோதெல்லாம் நீயிர் உடனிருந்தீர் அல்லிரோ ?

**அழும்பில்வேள் :** ஆம் யானும் உடனிருந்தேன்.

**திலகவதி :** புதிய அறமன்றத்தலைவர் சாத்தனார் இவ் வழக்கை எத்தனை நாள் ஆராய்ந்தார் ? (அழும்பில்வேள் மௌனமாக நிற்க) ஏன் ஐய ! ஏன் மவுனம் ?

**அரசி :** அடே ! மடையா ! கேட்டதற்கு ஏன் மறுமொழி சொல்லாமல் நிற்கிறாய் ! விரைந்து சொல் !

**அழும்பில்வேள் :** (நடுங்குகின்றான்) தேவி ! சாத்தனார் இவ் வழக்கை ஆராயவில்லை.

**அரசி :** திலகவதி ! இந்த மூடனை இனி வினவ வேண்டா ! அந்தச் சாத்தனைக் கூப்பிட்டு உசாவு.

**அங்கையற்கண்ணி :** அறமன்றத்தலைவர் சாத்தனார் ! சாத்தனார் !! சாத்தனார் !!!

**அரசி :** (சினத்துடன்) நல்ல அறமன்றத்தலைவர் !

[சாத்தனார் கூண்டில் ஏற்றப்பட்டவுடன்]

திலகவதி : உம் பெயர் என்ன ஐயா !

சாத்தன் : தேவி ! சாத்தன் என்பது என் பெயர்.

திலகவதி : நீயிர் திண்டுக்கல்நகரத்து அறமன்றத்தலைவரோ ?

சாத்தன் : ஆம் தேவி ! யான் அறமன்றத்தலைவன்தான்.

திலகவதி : நீயிர் எப்பொழுது இவ்வதிகாரத்தை ஏற்றுக் கொண்டீர் !

சாத்தன் : இற்றைக்கு எட்டுநாட்களின் முன்னர் !

திலகவதி : அறமன்றத்தலைவர் ஆனவுடனே நீயிர் வீரசிம்மன் வழக்கை உசாவினீரோ ? (சாத்தன் சிறிது சிந்தனையில் ஆழ்கிறான்.) என்ன ஐயா சிந்திக்கின்றீர்?

சாத்தன் : இல்லை ! ஆம் தேவி !

திலகவதி : ஐயா ! இல்லை என்கிறீரா ? ஆம் என்கிறீரா ?

சாத்தன் : ஆம் தேவி ! நானேதான் உசாவினேன்.

திலகவதி : எத்தனை நாள உசாவினீர் ?

சாத்தன் : ஒரே நாளில் !

அரசி : நல்ல அறமன்றத் தலைவன் !

திலகவதி : சாத்தனாரே ! இவ்வளவு பெரிய வழக்கை ஒரே நாளில் எபபடி உசாவினீர் ? நீர் மிகவும வல்லவர் ! (சாத்தன் நடுங்குகின்றான் ) ஏன் நடுங்குகின்றீர் ? உம்மால் உசாவுதல் செய்யப்பட்ட ஒற்றர்கள் இங்குள்ளனரா ?

[சாத்தன் திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்க்கிறான்.]

சாத்தன் : தேவி ! அவர்கள் யாரும் இங்கில்லை.

திலகவதி : ஒற்றன் மருதனை நீர் உசாவினீர் அன்றோ ?

சாத்தன் : ஆம் ! உசாவினேன் !

திலகவதி : (மருதனை விரலாற் சுட்டி) இவனை நீயிர் அறிவீரோ ?

**சாத்தன் :** அறியேன் !

**அரசி :** நன்று ! உசாவியது போதும் ! திலகவதி ! நம் அம்பலவாணரைக் கூப்பிடு !

**அங்கயற்கண்ணி :** அம்பலவாணர் ! அம்பலவாணர் !! அம்பல வாணர் !!!

[அம்பலவாணர் வருகிறார்.]

**அம்பலவாணர் :** அரசியார் ! வாழ்க !

**அரசி :** பெரியீர் ! இவ்விருக்கையில் அமர்க !

[ஓர் இருக்கையைச் சுட்டிக்காட்ட அதில் அமர்கிறார்.]

**திலகவதி :** அம்பலவாணர் வீரசிம்மன் வழக்கைப்பற்றித் தாம் அறிந்ததை இவ்வறமன்றத்தே விளக்கிக் கூறும் படி எம்மால் வேண்டப்படுகின்றார்.

**அம்பலவாணர் :** இவ் வழக்கைப்பற்றி யான் அரசியார்க்கு மூன்றுநாட்களுக்கு முன்னரே விளக்கிக் கூறியுள்ளேன். இம் மன்றத்தே என்னைச் சான்று கூறும்படி தேவியார் கட்டளையிட்டபடியே சுருக்கமாகக் கூறுகின்றேன். என்பால் கொணரப்பட்ட வீரசிம்மன் வழக்கு பொய் வழக்கு என்பதை யான் விழிப்புடன் ஆராய்ச்சி செய்து வீரசிம்மனை விடுதலை செய்யத் தீர்ப்புமுறி வரையப்போகும் சமயத்தில், அமைச்சர் முசலனார் என்பால்வந்து வீரசிம்மனைக் கொலைத் தண்டனை விதித்தே தீரவேண்டும் என்று பல்லாற்றானும் வேண்டினார். பின்னர் அச்சுறுத்தியும் பார்த்தனர். யான் அவர் வேண்டியதற்கு இணங்காமையால் அப்பொழுதே என்னை அதிகாரத்தினின்றும் விலக்கி விட்டனர். அதன்பின்னர் அவர்கள் இவ் வழக்கை எங்ஙனம் நடத்தினர் என்பதை யான் அறியேன்.

**திலகவதி :** வணக்கம் ! அமருக. ஏடி அங்கயற்கண்ணி ! கண்ணனைக் கூப்பிடு !

அங்கயற்கண்ணி: கண்ணன்! கண்ணன்!! கண்ணன்!!!

[கண்ணன் வருகிறான்.]

கண்ணன்: தேவி! வாழ்க!

[வணங்குகின்றான். கண்ணன் பேசியவுடன் நரேந்திரன் முதலியோர் வியப்புடன் திரும்பிப் பார்க்கின்றனர்.]

திலகவதி: ஏன் வியப்படைகின்றீர்கள்? (கண்ணனைப் பார்த்து) கண்ணா! நீ, இவ்வழக்கைப் பற்றி அறிந்ததை இம்மன்றத்தே கூறுக!

கண்ணன்: தேவி! வணக்கம்! மேன்மைதங்கிய அரசியார் அவர்களால் நரேந்திரர் மன்னர் ஆவதற்கு ஒரு சில நாட்கள் முன்னரே யான் நரேந்திரர் அரண்மனையில் அக ஒற்றனாக அமைக்கப்பட்டேன் ஆண்டு நிகழும் மறைபொருளை அறியும்பொருட்டு யான் ஒரு பெருஞ் செவிடனாகவும் ஊமையாகவும், ஆங்குள்ளார் அனைவரும் நம்பும்படி திறம்பட நடித்தேன். மன்னர் நரேந்திரர் விசயதசமி விழவில் ஆதிரையைக் கண்டு அளவிலாத காமப்பிணிக்கு ஆளானார். சித்திராபதி என்னும் இக்கணிகை திண்ணிய கற்புடைய ஆதிரையை மன்னனுக்குக் கொணர்ந்து கொடுக்கும் வழியில் பெரிதும் முயன்றாள். வீரசிமமனை வீட்டை விட்டகற்றவே நம் நாட்டின் வடவெல்லையில் பகைவர் வருவதாக இவர்கள் பொய்யாய சூழ்ச்சி ஒன்றைக் கட்டி அவ்வாற்றால் வீரசிம்மனை விரட்டியபின்னரும், ஆதிரை இக் கிழவியின் சூழ்ச்சியில் அசைந்தாளில்லை. பின்னர் வீரசிமமனைக் கொன்றால் ஒழிய ஆதிரை சிக்கமாட்டாள் என்று அறிந்து அவ் வழி முயன்று வீரசிம்மனைக் கொலைத்தண்டனை விதிக்கும் பொருட்டுச் சாத்தனாரை அதிகாரத்தே வைத்தனர். அச் சாத்தனார் வழக்காடுவோரோ, சான்று கூறுவோரோ இல்லாமலே ஒரே இரவில் வழக்கேடுகள் அனைத்தும் வரைந்து, முடிவும் எழுதி, இங்கு உய்த்

தனர். அரசியார்பால் ஆதிரை விடுதலைக்காக வழக்குத் தொடராதபடியும், மேலும் தம் விருப்பத்திற்கு அவளை இணக்கும்பொருட்டும் அவள் வீட்டிலேயே முற்றுகை யிடப்பட்டனள். இத்துணைச் சூழ்ச்சிகளும், இவர்கள் செய்தபோது யானும் உடனிருந்து கண்டும் கேட்டும் உணர்ந்தேன். இதனை அரசியார்க்கும் மூன்று நாட்களுக்குமுன்னர் யான் விளக்கமாகக் கூறியுள்ளேன்.

**திலகவதி :** (அரசியை வணங்கி) தேவி ! ஒருவாறு வழக்கு முடிவுற்றதென்று நினைக்கின்றேன்.

**அரசி :** ஏடி அங்கயற்கண்ணி ! நம் அம்பலவாணரையும் கண்ணனையும் நம் விருந்தில்லத்திற்கு அழைத்துச் செல்க. (சேனுவரையரை நோக்கி) சேனுவரையரே இவர் அனைவரையும் சிறையில் வைத்திருந்து நாளைப் பகல் பத்து நாழிகைக்கு இம்மன்றத்தில் கொணர்ந்து சேர்க்கக்கடவீர்.

**சேனுவரையர் :** கட்டளை.

[எல்லோரும் செல்கின்றனர்.]

---

## காட்சி கரு.

**இடம்:** *திருச்சிராப்பள்ளி அரண்மனையில், அறங்கூரவையம்.*

**உறுப்பினர்:** *திலகவதி, கமலை, நரேந்திரன் முதலியோர், ஆதிரை, அம்பலவாணர், ஐயை, நகரப் பெருங்குழு.*

**காலம்:** *பகல் பத்து நாழிகை.*

[*திலகவதியார் அணையில் அமர்ந்து அரசி மங்கம்மாள் முதல்நாள் வழக்கை ஆராய்ந்து எழுதிய தீர்ப்பு முறியைப் படிக்கிறார். நகரத்துப் பெருநிதிக் கிழவரும, சான்றோரும், இருக்கைகளிலே அமர்ந்திருக்கின்றனர் நரேந்திரன முதலியோர் விலங்குடன் நிரல்பட நிறுத்தப்பட்டுள்ளனர். சேனைவரையரும், பல மறவாகளும் தத்தம கடமைகளில் அமைந்து நிற்கின்றனர். ஆதிரை, கமலையாரின் அண்மையில் சிறந்த அணையில் ஐயையுடன் அமர்ந்திருக்கிறாள். அம்பலவாணர் அமைச்சா பெருமாட்டியின் வலப்பக்கத்தே அணையில் அமர்ந்துள்ளார்.*]

**திலகவதி:** *அன்புமிக்க அவையோர்களே! நெருநல் இங்கு நிகழ்ந்த வழக்கு ஆராய்ச்சியில் நம் அரசியார் உடனிருந்து அவ் வாககுமூலப் பகுதிகளை இரவு நன்கு ஆராய்ந்தார். அவ் வழக்கிற்குத் தம் கைகளாலேயே பொறிக்கப்பட்ட தீர்ப்பு முறி இது அப் பெருந்தேவியார் சார்பில் அவர்பொருட்டு யான் இம் மேலான தீர்ப்பு முறியை ஓதுகின்றேன். இம் முறியிற் கண்டவாறு படைத்தலைவர் தம் கடமையை அவ்வப்போது செய்யக்கடவர். யாம் ஓதிவரும் போது நகரப் பெருங் குழுவினர்க்கும் சான்றோர்க்கும் அவற்றுள் யாதேனும் தகுதியற்ற தீர்ப்பு என்று தோன்றுமாயின், உடனே எமக்கு அறிவிக்கும் உரிமை உண்டு.*

[*திலவதியார் ஓதுகிறார். அவையில் ஒரே அமைதி.*]

முதலாவதாக, இவ் வழக்கில் தாம் ஒற்றர்கள் என்று பொய்ச்சான்று கூறிய மருதன் முதலிய அறுவரும், அவர் தாமாகவே பொய்ச்சான்று கூறாமல, அமைச்சர் முசலனும் படைத்தலைவர் அழும பில்வேள் என்பவரும், அச்சுறுத்தியும், அவா வுண் டாக்கியும் வற்புறுத்தியும் கூறியபடியால், அவர் அறுவரும் இனி இத்தகைய தீச்செயல்களைச் செய்யக் கூடாதென்று எம்மால் பெரிதும் அறிவுறுத்தப் படுகின்றனர் மேலும் அவர்களை விடுதலை செய் கின்றோம்.

[சேனுபதி விலங்குகளைக் கழற்றிவிட மகிழ்ச்சி யுடன் தரையில் வீழ்ந்து வணங்கி மெல்ல வெளி யேறுகின்றனா.]

இரண்டாவதாக, இனி அழும்பில்வேள் என்ப வர், சிறந்ததோர் அதிகாரத்தை நடத்துபவரா யிருந் தும், ஒருவனுடைய வாழ்நாளையே ஒழிக்கின்ற கொடிய இப் பொய்வழக்கிற்குத் துணைநின்று நடத தியது தவறென்று முடிவு செய்கின்றோம். ஆகலின் அவருடைய அதிகாரத்தினின்றும் அவரை விலக்குவ துடன், இரண்டாண்டுகள் அவரைச் சிறையில் அடைக்கும்படியும் கட்டளை யிடுகின்றோம்.

[சேனுவரையா ஏவுதலால் இரண்டு மறவர்கள் அழும்பில்வேளை இழுத்துச் செல்கின்றனர்.]

மூன்றுவதாக, இனிப் புதிய அறமன்றத் தலைவ ராகிய சாத்தனரின் அருளற்ற அடாத செயலை யாம் பெரிதும் வெறுக்கின்றோம். அவரைப்போன்றே அமைச்சர் முசலனும் இவ் வழக்கில் நடந்துகொண் டமை பெரிதும் வெறுக்கற்பாலது ஆதலின் அவர் இருவரும் இனி இச் செயல்போன்ற தீச்செய லில் புகுதாதபடி ஆயுள் அளவும் சிறையிடப படுகின் றனர்.

[நான்கு மறவாகள் அவ் விருவரையும் இழுத்துச் செல்கின்றனா.]

நான்காவதாக, இவ் வழக்கிற்குப் பெரிதும் காரணமான கணிகை சித்திராபதி என்னும் கிழவியை நாடு கடத்துகின்றோம். அவளுடைய பொருள்கள் அனைத்தும் அரசியலாரை அடையும்.

[மறவர்கள் அவளை இழுத்துச் செல்கின்றனர்]

இனி இறுதியாக நரேந்திரனைப்பற்றி யாம் கூறுவதாவது : மன்னன் நரேந்திரன் செய்த பிழை எவ்வாற்றானும் பொறுத்தற்கரிய பெரும் பிழையாயிற்று. ஆதலால் தாயுமானவரின் திருவருள் நோக்கப்படி நரேந்திரன் மலையுச்சியினின்றும் உருட்டித் தள்ளப்பட்டுக் கொல்லப்படுவான்.

[சேனாவரையரும் மற்றவர்களும் திகைத்து நிற்கிறார்கள். அவையில் பேரமைதி நிலவுகின்றது.]

**திலகவதி :** சேனாவரையரே! ஏன் திகைக்கின்றீர்? உம் கடமையைச் செய்யும்.

[நரேந்திரன் விலங்குடன் நடக்கிறான்; பல மறவர்கள் வாளுடன் சூழ்ந்து செல்கின்றனர்.]

**திலகவதி :** பெருமை தங்கிய அவையோர்களே! இதுவரையும் அமைதியாயிருந்த நம் செயலே அரசியாரின் தீர்ப்பு நேர்மையானதென்று அறிவிக்கின்றது.

**ஒரு சான்றோர் :** நேர்மையானது மட்டுமன்று; தெய்வத் தன்மையுடையதும் ஆகும்.

**மற்றொருவர் :** மனுநீதி மன்னன் ஆண்ட இத் தமிழகத்தின் பெருமையை இத் தீர்ப்புப் புதுப்பிக்கின்றது.

**எல்லோரும் :** அரசி மங்கம்மாள் நீடூழி வாழ்க!

**திலகவதி :** அறிவு சான்ற பெருமக்களே! இனி இவ் வழக்கில் ஒறுக்கப்படுவோரேயன்றி, பேரரசியாரால் பரிசில் அளித்துப் போற்றப்படுவோரும் பலர் உளர்.

இதோ இந்த முறி அப் பரிசிலர்க்கு அரசியார் வழங்கும் பரிசிலைக் கூறுகின்றது. இதனையும் யாம் ஓதக் கேளுங்கள். இனி வருவது அரசியார் வாசகம் :

"தன் இல்லிலேயே வைத்து முற்றுகையிடப் பட்ட ஆதிரையை வெளியில் விடுவது தனக்குப் பெருங் கேடு விளைக்கும் செயல் என்று அறிந்திருந் தேயும், அரசியல் விதியைப் புறக்கணித்துக் கடவுள் விதியை நிறைவேற்றும் துணிவுடன் தமக்கு வருங் கேட்டைப் பொருட்படுத்தாது, ஆதிரையை நம்பால் உய்த்த பெருந்தகையாளர் பரிமேலழகர் என்பவருடைய செயல் எம்மால் பெரிதும் போற்றப்படுகின்றது மேலும் தம் ஒரு மகளாகிய ஐயையையும் ஆதிரைக்குத் துணையாக அவ் வாரிருளிற் போக்கிய அவர் செயலை யாம் என்னென்று புகழ்ந்துரைப் போம். அவரினும் ஆதிரையாகிய தன் தோழியின் பொருட்டுத் தன்னை மறந்தே பணி செய்த ஐயையும் எம்மால் போற்றப்படுகின்றனள். ஆதலின் இவ்விரு வர்க்கும் திண்டுக்கல் நகரத்து அயலேயுள்ள தேரூர் என்னும் மூதூரை, நினைவின்பொருட்டு, "அறங்காத்த நல்லூர்" எனப் பெயரிட்டு அப் பெரியோர்க்கு முற் றாட்டாக வழங்கிப் போற்றுகின்றோம். இன்று தொடங்கி அறங்காத்த நல்லூரை அவர்கள் முற்றாட் டாகப் பெற்று நுகர்வார்கள்.

இனி, நமது அஞ்சல் கொண்டு செல்பவர் ஆதிரையின் வேண்டுகோட்கிணங்கி இடையிலே ஒருநாள் காலந்தாழ்த்துச் சென்றமையும், நம்மாற் போற்றப் படுகின்றது. ஆதலின் அவருக்கு ஓராயிரம் வெண் பொற்காசுகள் எமமால் பரிசிலாக வழங்கப்படும்.

நகரத்து அறமன்றத் தலைவர் அம்பலவாணரின் சான்றாண்மையை யாம் புகழவேண்டா! 'உண்டால் அம்ம உலகம்' என்ற புறப்பாட்டிற்குச் சான்றாம் சான்றோர் அவர். இன்று தொடங்கித் திண்டுக்கல் நகரத்து முதலமைச்சராயிருந்து எமக்கு உதவி

செய்யுமாறு அவரை வேண்டுகின்றோம். இனி எம் அரசியலிலே திண்ணிய கற்புடைய ஆதிரை நல்லாளுக்கு நிகழ்ந்த பெருந் துன்பமபற்றி யாம் வருந்துகின்றோம். "பொன்னைத் தீயிடைப் பெய்தல் அப் பொன்னுடைத் தூய்மை தன்னைக் காட்டுதற்" கென்னுமுறைமைத்தாய், இறைவன் சில செவ்வி களில் நல்லோரையும் பொல்லாத துன்பத்தீயில் தள்ளுகின்றான். அவ் விறைவன்செயல் அந நல் லோரை உலகறியும்படி செய்கிறது; இவ் வாற்றால் அத் துன்பமும் இறுதியில் நல்லோர்க்கு நன்மையே விளைத்தலைக் காண்கின்றோம்.

இனி, திண்ணிய கற்புடைய ஆதிரைக்கு யாம் ஒரு பொன் செங்கோலைப் பரிசிலாக அளிக்கின்றோம் இச் செங்கோலை ஆதிரை அவள் கணவன் கையிற் கொடுத்து, நரேந்திரனால் ஆளப்பட்ட நாட்டிற்கு அவனை அரசனாக்கி வைக்கும்படி வேண்டுகின்றோம். அம்பலவாணர், பரிமேலழகர் முதலிய சான்றோர்களை வீரசிமமன் பதவியேற்பு விழாவைச் சிறப்புடன் நடத்தி வைக்கும்படி வேண்டுகின்றோம்.

ஆதிரையும் வீரசிம்மனும் அரசியும் அரசனுமாக அமைந்து அந்நாட்டினைச் செங்கோன்மை செலுத்தி நீடூழி வாழ்க !"

[திலகவதியார் ஓர் அழகிய பொன்னாலியன்ற செங்கோலை உறை கழித்துக் கையில் எடுத்து அவையோர்க்குக் காட்டி]

செங்கோன்மை தழீஇக் கோலோச்சும் நம் அரசியார் கட்டளைப்படி இச் செங்கோலை யான் ஆதிரை நல்லாட்கு அளிக்கின்றேன்.

[ஆதிரை அச்செங்கோலை வாங்குகின்றாள்.]

**அம்பலவாணர் :** செங்கோல் வாழ்க !

**எல்லோரும் :** செங்கோல் வாழ்க !

**நாடகம் முற்றும்.**